# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY

**Monday, the 3rd March 1958.**

The House met in the Assembly Chamber, Fort St. George, at 1 p.m., Mr. Speaker (THE HON. DR. U. KRISHNA RAU) in the Chair.

## I.—QUESTIONS AND ANSWERS.

## STARRED QUESTIONS.

*Pest-affected crops in the Tiruchirappalli district*

* 168 *Q.*—SRI S. LAZAR: Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether the standing samba crops in the Tiruchirappalli district were affected by pests recently;

(*b*) if so, the nature of the disease;

(*c*) the total acreage so affected; and

(*d*) the remedial and preventive measures taken by the Government?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (*a*) Yes.

(*b*) Jassids, stem-borer, mealy bugs, blast and helminthosporium.

(*c*) 16,000 acres of paddy crop in the district.

(*d*) To bring the pests under control and to prevent their spread to other neighbouring areas, the entire Tiruchirappalli district was declared by the District Agricultural Officers, Tiruchirappalli North and South, as pest-affected from 11th November 1957 to 31st January 1958 (till the end of samba season) for the purposes of issuing the pesticides and insecticides at concessional rate so as to enable the ryots to take prompt and timely control measures. Ryots were individually and collectively met by the departmental staff and were educated through practical demonstrations about the proper usage of chemicals against different pests, noticed on their standing crops of paddy. Active plant-protection measures with all the staff and equipment were undertaken by the Agricultural Demonstrator, Plant Protection Assistants and Extension Officers and the available sprayers, besides departmental sprayers from the Government of India, Central Plant Protection Pool at Tiruchirappalli, were also diverted and used to combat the pests.

In connexion with this campaign demonstrations and meetings were also held in villages in addition to the measures taken by the department. Arrangements have been made by the department for stocking adequate quantities of chemicals in all the depots and for the continuance of supply of pesticidies at concessional rates to the ryots in pest-affected areas.

**SRI S. LAZAR** : இது சம்பந்தமாக கோயம்புத்தூரிலுள்ள கவர்ன் மெண்ட் மைக்காலாஜிஸ்ட், கவர்ன்மெண்ட் எண்டமலாஜிஸ்ட் இவர்கள் வந்து ஏதாவது பரிசீலனை செய்தார்களா ? இந்த வியாதி ஒவ்வொரு வருஷமும் வருகிறது என்ற அடிப்படையில் இதை நிரந்தரமாக தடுப்பதற்கு அரசாங்கத்தினிடம் ஏதாவது திட்டம் இருக்கிறதா ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM** : இந்த வியாதிகள் வராமல் தடுப்பதற்காக அரசாங்கம் தொடர்ந்து பரிசீலனை நடத்தி வருகிறது. இந்த ஜில்லாவில் எந்தெந்த அதிகாரிகள் வந்து கவனித்தார்கள் என்று தகவல் இப்போது என்னிடம் இல்லை.

**SRI V. K. RAMASWAMY MUDALIYAR** : Are the Government aware of the fact that the concessions that are given for the purchase of pesticides are not availed of by the ryots for the simple fact that they are available for a period of only a month or 15 days?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM** : That aspect has not been brought to my notice so far. If there is any particular difficulty, I would like the hon. Member to bring it to my notice.

**THE HON. SRI C. SUBRAMANIAM** : The concessions are available throughout the year.

**SRI V. K. RAMASWAMY MUDALIYAR** : Not throughout the year. The pesticides are not given throughout the year. They are given only for a month or so.

**THE HON. SRI M. BHAKTAVATSALAM** : Sir, once an area is declared to be pest-affected, the concession is available. There is no period prescribed for it. But, if there is any particular difficulty felt by the ryots in any of those areas if the hon. Leader of the Opposition would specifically bring such cases to my notice, I shall look into them.

**SRI S. LAZAR** : இந்த விதியால் பாதிக்கப்பட்டிருக்கும் வட்டார மக்களுக்கு ஏதாவது சலுகை கொடுப்பதற்கு அரசாங்கம் உத்தேசித்திருக்கிறதா ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM** : இதற்கும் வியாதி பரவியிருப்பதற்கும் நெருங்கிய சம்பந்தம் இல்லை.

**SRI G. GOMATHISANKARA DIKSHITAR** : சபாநாயகர் அவர்களே, அம்பாசமுத்திரம் பக்கத்திலும் இந்த மாதிரியாக வியாதிகள் வந்து அங்குள்ள விவசாயிகள் கஷ்டப்படுகிறார்கள். அவர்களுடைய நிலைமையையும் அரசாங்கம் கவனிக்குமா ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM** : இந்த பூச்சி தொந்தரவு எல்லா இடத்திலும் இருக்கிறது. அதை போக்கடிப்பதற்கு அரசாங்கம் கூடியவரையில் வேண்டிய உதவி அளித்து வருகிறது.

**SRI M. KALYANASUNDARAM** : பூச்சியினால் பாதிக்கப்பட்ட பிரதேசம் என்று பிரகடனப்படுத்தக்கூடிய அதிகாரம் இப்போது கலெக்டரிடம் இருப்பதாக தெரிகிறது. இதற்கு விவசாய அதிகாரி கலெக்டருக்கு ரிப்போர்ட் அனுப்பின பிறகுதான் பாதிக்கப்பட்ட பிரதேசம் என்று அறிவிக்கப்படுகிறது. ஆகவே இந்த அதிகாரத்தை விவசாய டிபார்ட்மெண்டிடம் கொடுக்க அரசாங்கம் ஒரு முடிவு எடுப்பார்களா என்பதை அறிய விரும்புகிறேன்.

3rd March 1958]

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இப்பொழுதும் இந்த அதிகாரத்தை விவசாய டிபார்ட்மெண்ட்தான் பிரயோகித்து வருகிறது.

SRI M. JAGANNATHAN : தலைவர் அவர்களே, இந்த பூச்சியினால் ஏற்படக்கூடிய தொந்தரவை தடுப்பதற்கு வேண்டிய பரிசீலனை தொடர்ந்து நடைபெற்று வருவதாக தெரிவித்தார்கள். இந்த பரிசீலனை இன்னும் எவ்வளவு காலத்திற்கு நடைபெறும் ? இதனால் எவ்வளவு காலத்திற்கு நன்மை ஏற்படும் என்று காலவரையறுத்து அமைச்சர் அவர்கள் கூறுவார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்த பரிசீலனையில் ஏற்படக்கூடிய சாதனைகளை விவசாயிகள் அனுபவித்துத்தான் வருகிறார்கள் இதனால் அடியோடு பூச்சியை ஒழித்துவிடலாம் என்று சொல்வதற்கில்லை. இந்த நாட்டைவிட விவசாயத்தில் முன்னணியில் நிற்கின்ற ஜப்பான் நாட்டில் கூட இந்த தொந்தரவு இருந்து கொண்டிருக்கிறது.

*Hobart Training School*

* 169 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Finance be pleased to state whether there is any proposal to re-open the Urdu Section in the Hobart Training School in the City?

THE HON. SRI C. SUBRAMANIAM : No, Sir.

*Barriers alongside Palar in Vaniyambadi*

* 170 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Public Works be pleased to state whether the Government have taken any steps to construct barriers alongside Palar in Vaniyambadi to prevent damages due to floods?

THE HON. SRI P. KAKKAN : During the floods of October 1956 the right margin of the Palar river at Vaniyambadi was eroded. Emergent repair works for Rs. 9,300 were carried out immediately. Temporary groynes with brushwood edging in bamboos were provided. This has arrested further erosion and also induced silting up of the margin. Rough stone groynes have been proposed to be provided as a permanent measure to prevent floods.

*Road dam across Turinjalar*

* 171 *Q.*—SRI P. U. SHANMUGAM : Will the Hon. the Minister for Local Administration be pleased to state—

(*a*) whether the bridge constructed near Polakonam, Tiruvannamalai taluk, over Olaiyar river has been washed away;

(*b*) the reasons therefor;

(*c*) when it was constructed and how much was spent on its construction; and

(*d*) whether there is any proposal to reconstruct it?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*), (*b*) & (*c*) The road dam referred to, which is over Turinjalar, was constructed in June 1956 at a cost of Rs. 4,420. Some vents of the road dam were damaged by the unprecedented floods during the monsoon in 1956.

(*d*) The local panchayat proposes to repair the road dam at an estimated cost of Rs. 1,500.

**SRI P. U. SHANMUGAM**: இந்த பாலம் எப்போது கட்டப்படும் என்பதை அமைச்சர் அவர்கள் சொல்லுவார்களா ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM**: அந்த கிராம பஞ்சாயத்து இதை 1,500 ரூபாய் செலவில் கட்டுவதற்கு தீர்மானித்திருக்கிறது.

**SRI P. U. SHANMUGAM**: அந்த பஞ்சாயத்துக்கு பண நிலே சரியாக இல்லே என்பதை மந்திரி அவர்கள் அறிவார்களா? ஆகவே இதை ஸ்தல அபிவிருத்தி திட்டத்தின் கீழ் அந்த பாலத்தை கட்ட முன்வருவார்களா ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM**: என்னிடம் இப்போது இருக்கின்ற தகவலின்படி பஞ்சாயத்து இதை கட்டுவதற்கு ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். டிவிஷனல் இன்ஜினியர் இதை 1,500 ரூபாய்க்கு எஸ்டிமேட் போட்டு செலவு செய்து இதை முடித்துவிடலாம் என்று சொல்லி இருக்கிறார்கள். அதுதான் இப்போதைய நிலேமை.

*Agricultural Planning and Technique*

* 172 *Q*.—**SRI P. G. MANICKAM**: Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the project that will be taken up by the Government in pursuance of the recommendations made by the Indian Delegation to China on Agricultural Planning and Techniques; and

(*b*) the steps taken to execute them?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM**: (*a*) & (*b*) A statement[a] is placed on the table of the House.

**SRI P. G. MANICKAM**: சபாநாயகர் அவர்களே, ஜப்பானிய விவசாய முறையைப் பற்றியும், மேல் நாடுகளிலுள்ள விவசாய முறையைப் பற்றியும் இங்குள்ள பொது மக்களுக்கு எடுத்துரைப்பதற்கு, அதற்கான பிரசாரத்திற்கு 1958–59-ல் 115 ஆயிரம் ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இந்த பிரசாரம் பொது மக்களுக்கு எவ்வாறு செய்யப்படும் ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM**: விவசாயிகளிடம் பல முறைகளிலும் பிரசாரம் செய்யப்பட்டு வருகிறது. துண்டுப் பிரசுரங்கள் மூலமாக எந்தெந்த வகையில் ஜப்பானிய முறையை ஏற்றுக்கொள்ளலாம் என்றும், என்னென்ன புது முறைகளே அனுஷ்டிக்கலாம் என்பதைப் பற்றியும் எடுத்துரைத்து விளக்கப்பட்டு வருகிறது.

**SRI N. K. PALANISAMI**: அவர்கள் செய்த முக்கியமான சிபாரிசு கூட்டுறவு விவசாயம் என்பது. சீனுவில் நிலச் சீர்திருத்தம் செய்து அதன் மூலம் நிலத்தை விவசாயிகளுக்கு விநியோகித்து கூட்டுறவு பண்ணேகள் அமைத்து அதன் மூலம் வெற்றிகரமாக விவசாயத்தை செய்து வருகிறார்கள். இவைகளே இந்த அரசாங்கம் எந்த விதத்தில் அமுல் நடத்தப் போகிறது என்பதை கேட்க விரும்புகிறேன்.

**THE HON. SRI M. BHAKTAVATSALAM**: சீனுவை அப்படியே காப்பியடிக்கவேண்டும் என்பது சிபாரிசு அல்ல, அந்த உத்தேசமும் இந்த அரசாங்கத்திற்கு கிடையாது. கூட்டுறவு பண்ணேகளே அமைக்க வேண்டுமென்பதில் அரசாங்கம் கவனம் செலுத்தி வருகிறது.

**SRI K. R. NALLASIVAM**: தற்போது நம் நாட்டில் உபயோகப்படுத்தப் பட்டுவருகிற விவசாய கருவிகளுக்குப் பதிலாக ஜப்பான் நாட்டில் உபயோகப்படுத்தப்படுகிற விவசாய கருவிகளே நம் நாட்டில் உபயோகப்படுத்த வேண்டும் என்று ஏதாவது சிபாரிசு செய்யப்பட்டிருக்கிறதா ?

---

* Printed as Appendix I on pages 152–153 infra.

3rd March 1958]

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** இப்போது என்னென்ன சிபாரிசுகளில் கவனம் செலுத்தப்பட்டு வருகிறது என்பதை விவரமாக கொடுக்கப்பட்டிருக்கின்றன. இயந்திரங்களைப்பற்றி இப்போது பரிசீலனையில் எடுத்துக்கொள்ளவில்லை.

**SRI S. LAZAR :** ஸார், இதற்கு முன்னால் சீனா, ரஷ்யா இது போன்ற நாடுகளுக்கு சென்ற தூது கோஷ்டியினர், அங்கு கூட்டுறவு முறையில் நடத்தப்படுகிற சாகுபடியானது நல்ல முறையில் நடக்க வில்லை என்று அறிக்கை விடுத்திருந்தார்களே, அது சம்பந்தமாக சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறது ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** கூட்டுறவுப் பண்ணைகளினால் பாதகம் ஒன்றும் இருக்க முடியாது. இதைப்பற்றி எவ்வளவோ சிபாரிசுகள் செய்யப்படுகின்றன. கூட்டுறவு முறையை சீரிய முறையில் நடத்தவேண்டும் என்பதுதான் அரசாங்கத்தின் எண்ணம்.

**SRI P. G. MANICKAM :** சபாநாயகர் அவர்களே, தேசிய விஸ்தரிப் புத் திட்டத்தின் கீழிலும், கூட்டுறவு முறையிலும் விவசாயம் செய்வது போன்று ஹிந்துமத பரிபாலனத்தின் கீழும் இந்த கூட்டுறவு முறையை புகுத்தி விவசாய அபிவிருத்தியை மற்றவர்களுக்கும் காட்டுவதற்கு அர சாங்கம் ஏதாவது முயற்சி எடுத்திருக்கிறதா ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** பல விதங்களிலும் முயற்சி எடுத்துக்கொண்டுதான் வருகிறது. சில கூட்டுறவு பண்ணைகளை ஆரம்பிக்க வேண்டும் என்று அரசாங்கம் முற்பட்டிருக்கிறது. ஆனால் கூட்டுறவு பண்ணைகளை அமைப்பதில் விவசாயிகளுடைய ஒத்துழைப்பு முக்கியமாக வேண்டும். அவர்களுடைய பாராட்டுதல் முக்கியம். அது சுலபமாக கிடைப்பதில்லை.

**SRI S. NAGARAJA MONIGAR :** சைனா ஜப்பான் போன்ற வெளி நாடுகளில் ஏதோ ஒரு இயக்கம் தவறிவிட்டால், நம் நாட்டில் நாம் முயற்சி செய்து ஏன் வெற்றியடையக் கூடாது என்று கேட்கிறேன் ?

1-10 p.m.

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** சைனா, ஜப்பானில் அந்த இயக்கம் தவறிவிட்டதாக எனக்குத் தகவல் இல்லை. கனம் அங்கத்தின ருக்கு அவ்வாறு தகவல் இருந்தால், விவரமாகச் சொன்னால் அதைப் பரிசீலனை செய்யலாம்.

**SRI K. PONNIAN :** தூது கோஷ்டியின் சிபார்சு நஞ்சை தான்யங் களுக்கு மட்டுமா, அல்லது புஞ்சை தான்யங்களுக்கும் சேர்த்தா ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** பொதுவாக, விவசாய அபிவிருத்தியைப் பற்றி அவர்கள் சொல்லியிருக்கிறார்கள். அதை நாம் புஞ்சைக்கு எவ்வாறு எடுத்துக் கொள்வது, நஞ்சைக்கு எவ்வாறு எடுத்துக் கொள்வது என்பதை பகுத்தறிவையும், அனுபவத்தையும் உபயோகித்து அதற்குத் தகுந்தவாறு அமைத்துக் கொள்ள வேண்டும்.

**SRI R. KRISHNASAMI NAIDU :** சமீபத்தில் பத்திரிகைகளில் வெளி வந்த செய்திகளை கவனிக்கும்போது, இதுவரையிலும் ரஷியா விலே கட்டாயப்படுத்தி வந்த கூட்டுறவு விவசாய முறையை, அந்தக் கட்டாயத்திலிருந்து விடுவிக்கப்பட்டிருப்பதாகவும் செய்தியைப் பார்த்தேன். இந்த முறைக்கும் நம்முடைய முறைக்கும் ஏதாவது வித்தியாசம் இருக்கிறதா ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** ரஷியாவைப் போல் நாமும் அப்போதைக்கப்போது அனுபவத்தைக்கொண்டு, முறையை மாற்றிக் கொண்டுவரலாம். ஜப்பான், ஏசனா, ரஷியா எல்லா நாடுகளின் அனு பவத்தைக் கொண்டு, நம் நாட்டிற்கு ஏற்றவகையில் நாம் அமைத்துக் கொள்ளவேண்டியிருக்கிறது. அந்த வகையில்தான் கூட்டுறவுப் பண்ணை முறையில் அரசாங்கம் கவனம் செலுத்திக்கொண்டு வருகிறது.

**Sri A. GOVINDASAMY** : தேசீய விஸ்தரிப்புத் திட்டம், சமுதாய நலத்திட்டம் இருக்கிற பகுதிகளில் ஜப்பானிய முறையை வலியுறுத்துகிற மாதிரி, அந்தத் திட்டங்கள் இல்லாத பகுதியிலும் அந்த முறையைக் கையாளவேண்டுமென்று அரசாங்கம் உத்திரவிடுமா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : அவ்வாறுதான் கவனம் செலுத்திவருகிறோம். திட்டம் இல்லாத இடங்களில் ஜப்பானிய முறையைக் கையாள அரசாங்கம் ஆதரவு அளிக்கும்.

### *Prohibition of certain dailies in reading rooms*

* 173 *Q.*—**Sri P. U. SHANMUGAM** : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether the Government have directed the local bodies **not** to subscribe to certain dailies and weeklies for being **placed in** the reading rooms run by them;

(*b*) if so, the reasons therefor; and

(*c*) the names of those weeklies and dailies?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : (*a*) No, Sir

(*b*) & (*c*) Do not arise.

**Sri A. V. P. ASAITHAMBI** : அரசாங்கத்திற்கு சம்பந்தப்பட்ட நகரசபை வாசகசாலைகளிலே திராவிட நாடு போன்ற திராவிட முன்னேற்றக் கழகப் பத்திரிகைகளை அனுமதிக்கக் கூடாதென்று சர்க்கார் அறிவித்திருப்பதாகவும், அதன் பேரில் ஆலந்தூர் பஞ்சாயத்து எக்ஸிகூடிவ் ஆபீஸர் அந்தமாதிரிப் பத்திரிகைகளை வாங்கக் கூடாதென்று எழுத்து மூலம் சொல்லியிருப்பது அரசாங்கத்திற்குத் தெரியுமா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : எந்தத் தனிப்பட்ட பத்திரிகையையும் வாங்கக் கூடாதென்று சர்க்கார் எந்தவிதமான உத்திரவும் போட்டது கிடையாது. சில நிபந்தனைகளுக்குட்பட்டு எந்தப் பத்திரிகையை வேண்டுமானாலும் வாங்கலாம். அந்த நிபந்தனைகள் யாவனவென்றால் :

(i) The books, magazines and journals to be purchased should be of general public interest and of cultural value;

(ii) The books, classified as short stories or novels, shall be those by standard authors and shall not be of doubtful taste;

(iii) Books, magazines and journals abusing communities or religions shall not be purchased;

(iv) Books, magazines and journals which are of doubtful taste or which contain indecent or undesirable pictures shall not be purchased; and

(v) Prescribed and obscene publications shall not be purchased.

**Sri K. VINAYAKAM** : Sir, are the Government aware that the journals enumerated by the hon. Member, Sri Asaithambi, do belong to a party and they only cater to the party needs and also they do not come under the categories described by the **Hon.** Minister for Finance?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : I am not here to give judgment. As a matter of fact, panchayats and other organizations concerned are given full liberty to take decisions but if it is

3rd March 1958]

ultimately found that they come under any of the objectionable items, then they may be surcharged or other action might be taken.

**Sri S. LAZAR** : ஒரு சில நகரசபைகளிலே அல்லது சில பொது ஸ்தாபனங்களிலே அந்தமாதிரிப் பத்திரிகைகளை ஒதுக்குவதற்குக் காரணம் அந்தப் பத்திரிகை " நியூஸ் பேப்பர் ஆக இருப்பதற்குப் பதிலாக " வியூஸ் பேப்பர் " ஆக இருக்கிறது என்று சொல்லுவது உண்மைதானா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : யாரும் எந்தப் பத்திரிகையையும் வாங்கவேண்டுமென்று வாங்க முடியாது. அவரவர்கள் இஷ்டப்பட்டால் தான் வாங்கலாம்.

**Sri A. GOVINDASAMY** : பத்திரிகைகள் தவறான செய்திகளைப் பிரசுரிக்கின்றனவா, இல்லையா என்பதை முடிவு செய்கின்ற பொறுப்பை பஞ்சாயத்துத் தலைவர்களுக்கு விடுவதால் கட்சிப் பிரதிக கட்சி மனப்பான்மை ஏற்படுகிறது. தவறான பத்திரிகைகளைத் தடை செய்யும் பொறுப்பு அரசாங்கத்திற்கே இருக்கவேண்டும். ஆகவே அவர்களுக்கு அதை விடுவது சரியா என்று கேட்கிறேன்.

**The Hon. Sri C. SUBRAMANIAM** : இதிலே இரண்டு விஷயம் இருக்கிறது. தவறான பத்திரிகைகளை வாங்கக் கூடாது. வாங்குவதற்கும், வாங்காததற்கும் அந்த சபைக்கும், ஸ்தாபனத்திற்கும் வாய்ப்பு இருக்கிறது.

*Villages affected by the Pullambadi Scheme*

* 174 Q.—**Sri S. LAZAR** : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(*a*) the number of

(i) residential houses and

(ii) whole villages affected by the Pullambadi Channel Scheme;

(*b*) whether alternative sites are being allotted to the house owners concerned; and

(*c*) whether the Government propose to construct colonies for the Harijan house owners among them?

**The Hon. Sri P. KAKKAN** : (*a*) (i) At present the number of residential buildings affected is 24 huts and one tiled building. This is only tentative.

(ii) No whole village is affected.

(*b*) & (*c*) The question of allotment of alternative sites, etc. will be considered in due course, if found necessary. It does not arise at present.

**Sri S. LAZAR** : இந்தத் திட்டம் பூர்த்தியாகுமானால் ஒரு சில கிராமங்கள் பாதிக்கப்படுமென்று தெரியவருகிறது. அப்படிப் பாதிக்கப்படும் போது, புதிதாக காலனி அமைத்துக் கொடுக்கும்பொழுது அவர்களுக்கு முதலிடம் கொடுக்க முடியுமா என்று அறிய விரும்புகிறேன்.

**The Hon. Sri P. KAKKAN** : கனம் அங்கத்தினர் தனியாகக் கேள்வி போட்டால் பதில் சொல்லுகிறேன்.

[3rd March 1958

SRI S. NAGARAJA MONIGAR : இப்படிப் புதிதாகக் கட்டிக் கொடுக்கும் வாய்ப்பு ஏற்பட்டிருக்கிற சமயத்தில் கூட, ஹரிஜனங்களுக்காக தனியாகக் கட்டிக் கொடுக்கவேண்டுமென்பது சர்க்காரின் கொள்கையா ?

THE HON. SRI P. KAKKAN : அப்படி ஒன்றும் சர்க்காரின் கொள்கை அல்ல.

*Causeway across the Tambaraparani*

* 175 *Q.*—SRI M. K. SOMASUNDARAM : Will the Hon. the Minister for Local Administration be pleased to state—

(*a*) whether the Government have any proposal to construct a causeway across the Tambaraparani river between Karuppandurai and Melanatham in the Tirunelveli district; and

(*b*) if so, when the work will be taken up?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Yes, Sir.

(*b*) The work will be taken up as soon as the tenders and preliminaries for the work are settled.

SRI M. K. SOMASUNDARAM : தாம்பிரபரணிக்குக் குறுக்கே கட்ட இருக்கும் செய்கரையின் மதிப்புத் தொகை எவ்வளவு, மக்களிடமிருந்து உதவித் தொகை கிடைத்திருக்கிறதா, அப்படியானால் அது எவ்வளவு என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இது மத்திய ரோடு நிதியிலிருந்து கொடுக்கப்படுகின்றது. மொத்தம் ரூ. 1,82,000 மத்திய ரோடு நிதியிலிருந்து கிடைக்கும். திருநெல்வேலி ஜில்லா போர்டார் அதை எடுத்து நடத்துவார்கள்.

*Repatriates from Ceylon*

* 176 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether the Government have finished the consideration of the report of the Special Officer appointed for enquiring into the conditions of the repatriates from Ceylon;

(*b*) if so, the decision taken by the Government on the report; and

(*c*) whether the Government will place a copy of the report on the table of the House?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) No, Sir.

The matter is still under consideration in consultation with the Heads of Departments and other authorities concerned.

(*b*) Does not arise now.

(*c*) Yes, Sir, as soon as copies of the report are received from the Press.

3rd March 1958]

* 177 *Q.*—SRI M. S. SELVARAJAN : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the action taken so far on the recommendation of the Special Officer appointed for enquiring into the conditions of the repatriates in this State ; and

(*b*) whether the Government will place a copy of the report on the table of the House?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) & (*b*) The attention of the hon. Member is invited to the answer to starred question No. 176 put by Sri N. K. Palaniswami, M..L.A.

* 178 *Q.*—SRI A. VEDARATHNAM : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether the recent repatriates from Ceylon have made certain representations to the Government ; and

(*b*) if so, the action taken thereon?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Yes, Sir.

(*b*) Almost all the representations are covered by the various measures for rehabilitation suggested by the Special Officer which are still under examination. In the few other cases, replies have been sent giving advice as to the proper procedure to be followed.

SRI N. K. PALANISAMI : ஸ்பெஷல் ஆபீசர் ஏதோ சிபாரிசுகள் செய்திருப்பதாக மந்திரி அவர்கள் சொன்னார்கள். அந்த சிபாரிசுகள் என்ன என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்த ரிப்போர்ட் அச்சில் இருக்கிறது. மிகவும் பெரியதாக இருக்கிறது. அச்சிலிருந்து வந்ததும் அதை இங்கே சமர்ப்பிக்கிறேன்.

SRI A. VEDARATHNAM : இலங்கையிலிருந்து திரும்பி வந்தவர்கள் தொழில் நடத்துவதற்காக "பஸ் பெர்மிட்" கொடுக்கவேண்டுமென்ற கோரிக்கையை விடுத்திருக்கிறார்கள். அரசாங்கம் இது சம்பந்தமாக என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறது.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதிலே இருக்கிற சட்ட நிலைமையையும் பரிசீலிக்கவேண்டும்., அவ்வாறு கோரிக்கை இருக்கிறது. இதுவும் இப்பொழுது அரசாங்கத்தின் பரிசீலனையில் இருந்து வருகிறது.

SRI M. S. SELVARAJAN : பரிசீலனை முடிவதற்கு முன்பு, ஏற்கெனவே அவர்களுக்குக் கொடுத்து வந்த வர்த்தகச் சலுகையை நிறுத்தியிருப்பதை மறுபடியும் புதுப்பிக்க முடியுமா ? இலங்கையிலிருந்து வந்தவர்கள் என்று உறுதியாகத் தெரியும் பட்சத்தில், தொழில் ஆரம்ப கட்டத்தில் குறிப்பிட்ட சில வருஷங்களுக்காவது அவர்களுக்கு சலுகை கொடுக்கப்படுமா ? யாரோ சிலர் தவறு செய்ததற்காக எல்லோரையும் தண்டிப்பது பொருத்தமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : முன்பு செய்யப்பட்ட தவறு மட்டுமல்ல. இப்பொழுதும் ஒரு சிலருக்கு சலுகை அளித்தால், அந்தச் சலுகையை வேறு யாராவது துஷ்பிரயோகம் செய்வார்களா என்று கவனிக்கவேண்டியிருக்கிறது. இவைகளையெல்லாம் அரசாங்கம் தீவிரமாகப் பரிசீலனை செயயவேண்டியிருக்கிறது.

SRI S. NAGARAJA MONIGAR : இலங்கையிலிருந்து தமிழர்களை திருப்பி அனுப்பப்படுவது தேசீய தமிழர்கள், தனித் தமிழ் நாடு என்றெல்லாம் சொல்வது போன்று அல்லது மற்றவர்கள் நம்மை இங்கு வந்து சுரண்டுவது போன்று இங்கிருந்து இலங்கைக்குச் சென்றவர்கள்

1-20 p.m,

அங்கிருந்து சுரண்டிக்கொண்டு இங்கு வருவதற்கு சென்றவர்களா என்பதை அறிய விரும்புகிறேன். இப்படியானல் அப்படிச் சென்றவர்கள் எத்தனை பேர்கள் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இப்படிப்பட்ட பிரச்னையில் கனம் அங்கத்தினர் தீவிரமாக சிந்தனை செய்து கொண்டிருப்பதாகச் தெரிகிறது. இதை பற்றிய அபிப்பிராயம் அவரே வைத்துக்கொள்ளலாம்.

SRI M. P. SUBRAMANIAM : இது சம்பந்தமாக அகதிகளைக் காப்பாற்றுவதற்கு என்று அரசாங்கம் அதிகாரிகளை நியமித்திருப்பதாக தெரிகிறது. அதைப்போலவே பக்கத்தில் சிலோனிலிருந்து வரக்கூடிய அகதி மக்கள் எத்தனை பேர்கள் நம்முடைய துணையை நாடிக்கொண்டு வருகிருர்கள் ? அப்படி வருகின்றவர்கள் எத்தனை பேர்கள் நம்மிடமிருந்து பலனை எதிர் பார்க்கிருர்கள் என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதைப்பற்றி இப்பொழுது என்னிடத்தில் தகவல் இல்லை. தனிக் கேள்வி போட்டால் பதில் சொல்லுகிறேன்.

SRI S. B. ADITYAN : இலங்கையிலிருந்து தமிழ் நாட்டிற்கு வரக் கூடிய தமிழ் அகதிகளுக்கு இங்கு வசதி செய்து கொடுக்காத காரணமாக அவர்கள் மீண்டும் கள்ளத்தனமாக கள்ளத் தோணிகளில் இலங்கைக்குச் செல்வதால் அவர்களைச் சுட்டுக் கொல்லும்படியான நிலைமை ஏற்பட்டிருக் கிறது என்பது அரசாங்கத்திற்குத் தெரியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் அங்கத்தினர் கேட்கக் கூடியகேள்வி எதிர் கட்சியிலிருந்து கொண்டு கேட்கக்கூடிய ரீதியில் இருக்கிறது. அப்படி எதிர் கட்சியில் இருந்துகொண்டு இப்படிப்பட்ட பெரிய புகார்களை புகாருக்காகச் சொல்வதாக இருக்கிறதே தவிர வேறு ஒன்றும் இல்லை. அதைப்பற்றி அவ்வளவு சொல்லாமலேயே இருக்கலாம்.

SRI A. V. P. ASAITHAMBI : பாகிஸ்தானிலிருந்து இங்கு வந்தவர்களுக்கு இந்திய சர்க்கார் தனிச்சலுகைகள் கொடுப்பதைப்போன்று இலங்கையிலிருந்து வரக்கூடிய அகதிகளுக்கும் அப்படிப்பட்ட சலுகைகளைக் கொடுக்க இந்த அரசாங்கம் மத்திய அரசாங்கத்திற்கு சிபாரிசு செய்யுமா ? இலங்கையும் பிற நாடு என்று கருதி அங்கிருந்து வரக்கூடியவர்களுக்கும் அப்படிப்பட்ட சலுகைகளைக் கொடுக்க முன் வருவார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இலங்கையிலிருந்து வரக் கூடியவர்களுடைய நிலைமை வேறு பாகிஸ்தானிலிருந்து வரக்கூடியவர்களுடைய நிலைமை வேறு. அதனுல் இந்தப் பிரச்னை சம்பந்தமாக அனுவசியமாக சிக்கல்களை ஏற்படுத்த வேண்டாம் என்பதை மட்டும் சொல்லிக்கொள்ளுகிறேன். இலங்கையிருந்து வரக்கூடியவர்களுக்கும் என்ன என்ன சலுகைகள் காட்ட முடியுமோ அவ்வளவையும் காட்டுவதற்கு இந்த அரசாங்கம் கவனம் செலுத்திக்கொண்டுதான் வருகிறது.

SRI K. VINAYAKAM : Sir, what is the total number of persons so repatriated from Ceylon to our country and with regard to rehabilitation, what are the steps that the Government have taken in the field of agriculture, industry, commerce and in matters of employment in Government service?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I think I have given this information some time back about the total number of people who have come. Regard proposals for rehabilitation, that is exactly what we have been considering just now in these few minutes by questions and answers.

3rd March 1958]

**Sri K. PERIANNAN** : இலங்கை இந்தியா பிரச்னையால் பெரும் பாலும் பாதிக்கப்பட்டவர்கள் பிற்பட்ட இனத்தவர்களும், தாழ்த்தப் பட்ட இனத்தவர்களும்தான். அங்கிருந்து இங்கு வந்தவர்களில் பெரும் பாலும் அங்கு திரும்பிப்போக முடியாமல் இருக்கிறார்கள். அதனால் அவர் களுக்கு இந்த அரசாங்கம் ஏதாகிலும் உதவி செய்ய முன் வருவார்களா ? மேலும் ஒரு குழுவை அமைத்து அதன் மூலம் அந்த அரசாங்கத்துடன் கலந்து இப்படிப்பட்டவர்களுக்கு ஏதாவது உதவி செய்ய நடவடிக்கை எடுப்பார்களா என்பதை அறிய விரும்புகிறேன்.

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : இது வேறு விஷயம். இதைப்பற்றி தனியாக கேள்விபோட்டால் இந்த அரசாங்கம் என்ன நடவடிக்கைகள் எடுத்துக்கொண்டிருக்கின்றன என்பதைப்பற்றி பதில் சொல்லலாம்.

**Sri A. V. P. ASAITHAMBI** : இலங்கையில் இருக்கிற தமிழர்கள் இந்தி யாவுடன் இணைய சம்மதித்திருக்கிறார்களா ? அதைப்பற்றிய பேச்சு அடிக்கடி கேட்கப்படுகிறதே, அதைப்பற்றிய தகவல் இந்த அரசாங்கத்திற்கு உண்டா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : இந்தக் கேள்வியை அவர் கேட்பது சரியல்ல என்பதை நான் தாழ்மையுடன் தெரிவித்துக்கொள்ளு கிறேன். அனாவசியமாக விவகாரங்களில் தலையிட்டு சர்ச்சைக்கு எடுத்துக் கொள்வது சரியல்ல.

**Mr. SPEAKER** : இலங்கையைப்பற்றி இவ்வளவு கேட்பது சரியல்ல என்று எனக்குத் தோன்றுகிறது.

**Sri N. R. THIAGARAJAN** : நான் சென்ற ஆண்டுதான் இலங்கை யிலிருந்து அகதியாக வந்திருக்கிறேன். பாகிஸ்தானிலிருந்து வந்த அகதி களைக் காப்பாற்றுவது போல் என்னையும் காப்பாற்றி அவர்களுக்குக் கொடுக்கப்படும் வசதியைப்போன்று எனக்கும் கொடுப்பார்களா என் பதை அறிய விரும்புகிறேன்.

**Mr. SPEAKER** : இலங்கையிலிருந்து வந்தவர்களைப்பற்றி கேள்வி இருக்கும்போது பாகிஸ்தானைப்பற்றி கேள்வி கேட்பது சரியல்ல.

**Sri A. VEDARATHNAM** : இலங்கையிலிருந்து வந்த அகதிகள் வேலையின்றி மிகக் கஷ்டமான நிலையில் இருப்பதால் அவர்களை இங்கு தொழிற் துறையில் ஈடுபடுத்தி அவர்களுடைய கோரிக்கைகளை காலங் கடத்தாமல் ஆலோசனை செய்து விரைவில் ஓர் முடிவுக்கு வருவதற்கு அரசாங்கம் நடவடிக்கை எடுப்பார்களா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : காலம் ஆகிறது என்று சொல்வதற்கு கொஞ்சம் கூட இடம் இல்லை. எந்த எந்த துறையில் அவர்களை ஈடுபடுத்தமுடியுமோ அதற்கு வேண்டிய நடவடிக்கைகளை எடுத்துக் கொள்வதில் இந்த அரசாங்கம் கவனம் செலுத்திக்கொண்டு வருகிறது. ரிப்போர்ட் வந்தபிறகு இந்த அரசாங்கம் முடிவு செய்யும் என்பதை கனம் அங்கத்தினருக்கு நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

*Tirupathi Devasthanam High School, Vellore*

* 179 Q.—**Sri P. U. SHANMUGAM** : Will the Hon. the Minister for Finance be pleased to state why the teachers of the Tirupathi Devasthanam High School, Vellore, are not paid the new enhanced dearness allowance?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : Instructions are being issued by the Director of Public Instruction to the management of the school to pay the enhanced dearness allowance to the teachers in the school.

*Railway lines*

* 180 *Q*.—SRI A. VEDARATHNAM: Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) with reference to the answer given to a supplementary put under Question No. 158 on 20th July 1957, the names of the seventeen new railway lines recommended by the Government to the Central Government for construction and the names of the six lines recommended for being given priority; and

(*b*) whether the Central Government have accepted any of the recommendations?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (*a*) & (*b*) A statement[a] is placed on the Table of the House.

SRI M. S. SELVARAJAN: நம்முடைய ராஜ்யத்தில் அறவே ரயில் இணைப்பே இல்லாத ஒரு ஜில்லா இருக்கிறது என்பது எல்லோருக்கும் தெரியும். அந்த நிலையில் திருநெல்வேலியையும் கன்யாகுமரி ஜில்லாவையும் இணைக்க ஒரு ரயில் இணைப்புப்போடுவது பொருத்தமானதாக இருக்கும். அதனால் இந்த அரசாங்கம் மத்திய அரசாங்கத்திற்கு இதைப் பற்றி சிபாரிசு செய்யுமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM: கனம் அங்கத்தினர் சொல்லுவது திருநெல்வேலி ஜில்லாவைப்பற்றி என்று நினைக்கிறேன். அங்கு ரயில் இணைப்பு இருக்கிறது. (ஒரு குரல்: கன்யாகுமாரி ஜில்லா.) இதை உடனடியாக எடுத்துக்கொள்ளவேண்டும் என்றும்—இப்பொழுது ஆறு லைன்களைப் பற்றி சிபாரிசு செய்திருப்பதில் இதுவும் ஒன்று. இதை மத்திய அரசாங்கத்திற்கு நாங்கள் தெரிவித்திருக்கிறோம்.

SRI A. VEDARATHNAM: இந்த வருஷத்திய வரவு செலவு திட்டத்தில் இந்த ஆறு லைன்களில் ஏதாவது ஒன்றை முதலில் எடுத்துக் கொள்ள மத்திய அரசாங்கம் முடிவு செய்திருக்கிறதா? அப்படியானால் அவர்கள் எதை முன்னதாக எடுத்துக்கொள்ளுவதாக உத்தேசித்திருக்கிறார்கள்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM: நாங்கள் மத்திய அரசாங்கத்திற்கு தெரிவித்துக்கொண்டபடி இவைகளையெல்லாம் எடுத்துக்கொள்ள வேண்டும் என்றும் சொல்லியிருக்கிறோம். அதில் கொஞ்சம் காலதாமதம் ஏற்படலாம். இந்த வருஷத்திலேயே சில லைன்களை எடுத்துக்கொள்ளுவார்கள் என்றும் எதிர்பார்க்கப்படுகிறது.

SRI S. PAKKIRISAMI PILLAI: சென்னையிலிருந்து திருவள்ளூர் வரையிலும், தாம்பரத்திலிருந்து செங்கல்பட்டு வரையிலும் மின்சார ரயில் வண்டி விடுவதாக உத்தேசத்தில் இருந்தது. அந்த திட்டம் எப்பொழுது அமுலுக்கு வரும் என்பதை கனம் அமைச்சர் அவர்கள் சொல்லுவார்களா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: இதைப்பற்றி இந்த அரசாங்கம் மத்திய அரசாங்கத்திற்கு சிபாரிசு செய்திருக்கிறது. ஆனால் தாம்பரம் மின்சார லைனைப்போடுவதற்கு மத்திய அரசாங்கம் நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக்கிறது. இந்த வருஷத்திலேயே அந்த வேலை துவக்கப் படும்.

---

[a] Printed as Appendix II on pages 153–154 *infra*.

3rd March 1958]

SRI V. K. RAMASWAMY MUDALIYAR: Can the Hon. Minister tell us when these lines would be taken up and whether they would be taken before the Second Five-Year Plan period?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: I am not quite sure about it, but we can all hope that before the Third Plan, some of these lines would be taken up.

SRI M. D. RAMASAMI: இந்த ஆறு லைன்களுக்கும் 1957-ம் ஆண்டில் சர்வே செய்து முடிக்கப்பட்டது. அதற்கு முன்னாலேயே விருதுநகர்-மானு மதுரை லைன் சம்பந்தமாக சர்வே செய்யவேண்டும் என்று கேட்கப்பட்டது. அதனால் விருதுநகர்-மானுமதுரை லைனையும் சர்வே செய்யப்படுமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM: சர்வே செய்யவேண்டும் என்பதற்காக 17 லைன்களை சிபாரிசு செய்தோம். அதில் ஆறு லைன்களை குறிப்பாக எடுத்துக்கொண்டிருக்கிறார்கள். இவைகளையாவது எடுத்துகொள்ள வேண்டும் என்று மத்திய அரசாங்கத்திற்கு சிபாரிசு செய்திருக்கிறோம். அதைப்பற்றியே மேலும் வற்புறுத்திக்கொண்டிருக்கிறோம்.

SRI S. LAZAR: இப்பொழுது 17 லைன்கள் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதிலிருந்து எதற்கு, எந்த அடிப்படையில் ஹை ப்ரையாரிட்டி கொடுக்கப்படுகிறது. சேலம்-திருச்சி இணைப்பை ஒதுக்கிவைப்பதற்குக் காரணம் என்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: திருச்சி-சேலத்திற்கு இணைப்பு அவசியம் இல்லை. அங்கே நல்ல ரோடு வசதி இருக்கிறது. இதனால் லிஸ்டில் முதல் இடம் வேண்டாம் என்று அதை சேர்க்கவில்லை.

SRI A. GOVINDASAMY: நெய்வேலி - விருத்தாசலம் லைனுக்கு ஹை ப்ரையாரிட்டி கொடுக்கப்படாததன் காரணம் அந்த நெய்வேலி திட்டத்தை எடுத்து நடத்துவதற்கு கால தாமதம் ஆக்கவேண்டும் என்று கருதுவதா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM: இந்த திட்டத்தை எடுத்துக் கொள்வார்கள் என்று ஏற்கெனவே சொல்லி இருக்கிறேன். நெய்வேலி திட்டத்தை காலதாமதம் ஆக்க வேண்டும் என்பதற்காக இந்த திட்டத்தை எடுத்துக்கொள்ளவில்லை என்று சொல்வது சரியல்ல. அவையும் இதையும் சேர்ப்பது சரியல்ல. இதைப்பற்றி அவ்வப்போது பரிசீலனை செய்து வருகிறார்கள். அபிப்பிராய பேதம் ஒன்றும் இல்லை.

1.30 p.m.

SRI A. S. SUBBARAJ: போடிநாயக்கனூரையும் கடலூரையும் ரயில் பாதை மூலம் இணைக்கும் விஷயம் என்ன ஆயிற்று என்பதை கனம் அமைச்சர் அவர்களிடமிருந்து அறிந்துகொள்ளலாமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: இது சம்பந்தமாக நில ஆர்ஜிதம் பூர்த்தியாவதற்கு வெகு காலம் பிடிக்கும். எத்தனையோ புதிய புதிய லைன்கள் போடவேண்டியதுதான். ஆனால், அதைப்பற்றியெல்லாம் இப்பொழுது எடுத்துக்கொள்வதிலே பலன் இல்லை.

SRI A. VEDARATHNAM: எந்த அடிப்படையில் இந்த "ப்ரையாரிட்டி லிஸ்டு" தயார் செய்யப்பட்டிருக்கிறது என்பதை கனம் அமைச்சர் அவர்கள் விளக்குவார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: ஒரு பிராந்தியத்தில் இருப்புப்பாதை போடவேண்டுமென்று எடுத்துக்கொள்ளும்போது, அங்கே இருப்புப்பாதை அமைப்பதற்கு முன் இருக்கும் நிலைமையையும், அங்கே போடுவது அத்தியாவசியம்தானா என்பதையும், அங்கே அமைப்பது சாத்தியமா என்பதையும் கணக்கில் எடுத்துக்கொள்வதோடு, ரயில்வே

இலாகாவையும் நாம் கலந்து ஆலோசித்துத்தான் இந்த "ப்ரையாரிட்டி லிஸ்டு" தயாரித்திருக்கிறோம். எது அவசியம் என்பதையும் எதை முதலிலே எடுத்துக்கொள்ளக்கூடும் என்பதையும் பார்த்துத்தான் லிஸ்டு தயாரிக்கப்பட்டிருக்கிறது.

*School-going children in the Coimbatore district*

* 181 *Q.*—SRI P. G. MANICKAM: Will the Hon. the Minister for Finance be pleased to state the number of children under each age-group 6–11 and 11–14 and the number admitted in schools in the Coimbatore district in 1956–57?

THE HON. SRI C. SUBRAMANIAM: Total number of children in Coimbatore district in 1956–57 :—

(*a*) Under age group 6–11 = 450,955.

(*b*) Under age group 11–4 = 236,214.

Number of children admitted in schools in 1956–57—

(*a*) Under age group 6–11 = 31,975.

(*b*) Under age group 11–14 = 8,101.

**SRI P. G. MANICKAM:** கோயமுத்தூர் ஜில்லாவானது ஆரம்பக் கல்வி விஷயத்தில் மிக மிக பிற்போக்கு நிலைமையிலே இருக்கிறது என்பது சர்க்கார் வெளியிட்டுள்ள வெள்ளையறிக்கையிலிருந்து தெரிகிறது. இந்த ஜில்லாவில், 500 ஜனத்தொகைக்கு மேற்பட்டுள்ள நூற்றுக்கணக்கான கிராமங்களும், குக்கிராமங்களும் இன்னும் பள்ளிக்கூடங்கள் இல்லாமல் இருக்கின்றன. இப்படிப்பட்ட இடங்களிலெல்லாம் பள்ளிக்கூடங்களைத் திறந்து, அங்குள்ள மாணவர்கள் படித்து முன்னேறி வருவதற்கு வசதி செய்ய அரசாங்கம் நடவடிக்கை எடுத்துக்கொள்ளுமா?

**THE HON. SRI C. SUBRAMANIAM:** கனம் அங்கத்தினர் அவர்கள் மூன்று நான்கு ஆண்டுகளுக்கு முன்பு இருந்த நிலையைப்பற்றி பேசுகிறார்கள் என்று நினைக்கிறேன். 500 ஜனத்தொகையுள்ள நமது ராஜ்யத்தில் உள்ள எல்லா கிராமங்களிலும் பள்ளிக்கூடங்கள் வைத்தாய்விட்டது. கோயமுத்தூர் ஜில்லா மட்டும் விலக்கு அல்ல. ஒரு காலத்தில் கோயமுத்தூர் ஜில்லாவானது ஆரம்பக் கல்வி விஷயத்தில் பிற்போக்காக இருந்தது வாஸ்தவம். ஆனால், இப்பொழுது ரொம்ப முற்போக்கு அடைந்திருக்கிறது.

*Secondary grade teachers*

* 182 *Q.*—SRI N. K. PALANISAMI: Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether the secondary grade teachers employed in elementary schools are allowed full-fee concession for their children; and

(*b*) if so, why such teachers are allowed only half-fee concession for their children when employed in high schools?

THE HON. SRI C. SUBRAMANIAM: (*a*) The children of secondary grade teachers employed in elementary schools get full-fee concession up to Form VI as such teachers enjoy comparatively a lower status in pay, etc.

3rd March 1958]

(b) The children of such teachers employed in secondary schools get full-fee concession up to Form III and half-fee concession from Form IV to VI. The difference in treatment has been necessitated by the policy of conferring certain benefits to low paid employees of elementary schools and encouraging teachers to take up work in elementary schools.

SRI N. K. PALANISAMI : ஒரே கிரேடிலிருக்கும் உபாத்தியாயர் களுடைய குழந்தைகளுக்கு ஒரேவிதமான கல்விச் சலுகை கொடுப்பதில் என்ன கஷ்டம் இருக்கிறது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : சலுகை கொடுப்பதிலே கஷ்டம் என்னவென்றால் பணக் கஷ்டம் தான். அதுவும் தவிர, செகண்டரி கிரேடு பயிற்சி பெற்ற ஆசிரியர்கள் ஆரம்பப் பள்ளிகளிலே போய் வேலை செய்யும்போது, அவர்களுக்கு ஒரு தூண்டுதல் காட்டவேண்டுமென்பதற்காக அவர்களுடைய குழந்தைகளுக்கு 6-வது படிவம் வரை முழுச் சம்பளச் சலுகை கொடுக்கப்படுகிறது.

MR. SPEAKER : Questions are over.

[*Note.*—An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.]

## II.—ANNOUNCEMENT BY THE HON. SPEAKER.

MR. SPEAKER : I have to inform the House that under rule 155 (3) of the Assembly Rules, notices of cut motions should reach the Secretary, Legislature Department before 3 p.m. on Wednesday, the 5th March 1958. No exception will be made to this rule on any account.

## III.—GENERAL DISCUSSION ON THE BUDGET FOR THE YEAR 1958-59.

MR. SPEAKER : இப்பொழுது ஆறு நாட்களுக்கு பட்ஜெட் மீது பொது விவாதம் நடத்தப்படும். மூன்று நாட்களுக்கு முன்னால் கூடிய பிஸி னஸ் அட்வைஸரி கமிட்டியில், 8-ந் தேதியன்று கனம் ஸ்ரீ அண்ணாதுரை அவர்களும், கனம் ஸ்ரீ வி. கே. ராமசாமி முதலியார் அவர்களும், கனம் நிதி மந்திரி அவர்களும் கலந்துகொள்வதாகத் தீர்மானிக்கப்பட்டது. பாக்கி கட்சித் தலைவர்கள் எல்லோரும் 7-ந் தேதியன்று பேசுவார்கள். மந்திரி மார்கள் அவரவர்களுக்கு எப்பொழுது இஷ்டம் இருக்கிறதோ அப்பொழுது கலந்துகொள்ளலாம். இன்றையதினம் கனம் அங்கத்தினர் ஸ்ரீ எம். ஜகன்னாதன் அவர்களை விவாதத்தை ஆரம்பிக்குமாறு கேட்டுக்கொள்ளு கிறேன். ஸ்ரீ ஜகன்னாதன் அவர்கள் 20 நிமிஷங்கள் பேசலாம். அதற்குப் பிறகு கனம் அங்கத்தினர் ஸ்ரீ க. அன்பழகன் அவர்கள் 20 நிமிஷங்கள் பேசலாம். சாதாரணமாக கனம் அங்கத்தினர்கள் தங்களுடைய பிரசங் கத்தை 10 முதல் 20 நிமிஷங்களுக்குள் முடித்துவிட்டால் நன்றாக இருக் கும் என்பது என்னுடைய அபிப்பிராயம்.

SRI K. R. NALLASIVAM : பாயின்ட் ஆப் ஆர்டர், ஸர். நிதி மந்திரி அவர்கள் உரையில் டி.டி.கே. அவர்கள் சம்பந்தமாக பேசியிருக்கிறார்கள். டி.டி. கே. அவர்கள் தகராறுக்குரிய முறையிலே தம்முடைய பதவியை ராஜீனாமா செய்திருக்கிறார்கள். அதைப்பற்றிய எல்லா விஷயங்களையும் நாம் இந்தச் சபையில் விவாதிக்கக்கூடிய ஒரு சூழ்நிலை இருந்து, நிதி அமைச்சர் அவர்கள் அதைப்பற்றி பிரஸ்தாபித்திருந்தால் ஆட்சேபனை யில்லை. நிதி அமைச்சர் அவர்கள் குறிப்பிட்டிருக்கும் இது விஷயம் பற்றி நாம் விரிவாக விவாதிப்பதற்கு ஒரு சந்தர்ப்பம் கொடுக்கப்படுமா என்பதை கனம் சபாநாயகர் அவர்களிடமிருந்து தெரிந்துகொள்ள விரும்பு கிறேன்.

MR. SPEAKER : கனம் அங்கத்தினர் அவர்கள் பேசுவதற்குச் சந்தர்ப்பம் கிடைக்கும். அப்பொழுது அவருடைய அபிப்பிராயத்தைச் தெரிவிக்கலாம். நிதி மந்திரி அவர்கள் தம்முடைய பட்ஜெட் உரையில் இது பற்றி சொன்னது தவறு என்று சொல்ல முடியாது.

1-35 p.m. SRI M. JAGANNATHAN : மதிப்பிற்குரிய சட்ட மன்றத் தலைவர் அவர்களே, இந்த ஆண்டில் வரவு செலவுத் திட்டமானது அவ்வளவு வரவேற்கத்தக்க ஒரு திட்டம் அல்ல என்பது என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம். அதற்குக் காரணம் என்னவென்றால், நம்முடைய நாட்டிடிலுள்ள மக்களின் நல் வாழ்க்கையை உயர்த்துகிற முறையிலே இந்தத் திட்டங்களிலே எந்தவிதமான அம்சமும் காணப்படவில்லை என்பது என்னுடைய கருத்து. நம்முடைய நாட்டு மக்களுடைய வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்கு இந்தத் திட்டத்தில் எந்தவிதமான ஒரு அம்சமும் இல்லை என்பதை நாம் எல்லோரும் நன்றாக அறிந்திருக்கிறோம்.

நம்முடைய நாட்டில் எத்தனையோ ஜீவாதாரமான பிரச்னைகள் இருக்கின்றன. உதாரணமாக, படித்தவர்கள் மத்தியிலும், பாமரர்கள் மத்தியிலும் வேலையில்லாத் திண்டாட்டம் நாளுக்கு நாள், மாதத்திற்கு மாதம், வருஷத்திற்கு வருஷம் வளர்ந்து கொண்டே வருகிறது. வேலை கிடைக்காமல் மக்கள் எத்தனையோ கஷ்ட நஷ்டங்களை அனுபவித்துக்கொண்டு வருகிறார்கள் என்பதை நாம் அன்றாடம் செய்தித் தாளில் படிக்கிறோம். நன்றாக வாசித்தவர்கள், கல்லூரிப் பட்டம் பெற்றவர்கள் எல்லாம் தகுந்த வேலை கிடைக்காத காரணத்தினால் தூக்கு போட்டுக்கொண்டு தம்முடைய வாழ்க்கையை முடித்துக்கொள்ளும் நிலைமைக்கு வந்துவிடுகிறார்கள், என்ற செய்தியையும் நாம் அடிக்கடி பத்திரிகை வாயிலாகப் பார்க்கிறோம்.

அதுமாத்திரமல்ல. "இன்டஸ்ட்ரியல் ஸெக்டார்" என்று சொல்லக்கூடிய தொழிற் துறையிலும், "அக்ரிகல்சரல் ஸெக்டார்" என்று சொல்லக்கூடிய விவசாயத் துறையிலும் எத்தனையோ லட்சக் கணக்கான மக்கள், கோடிக்கணக்கான மக்கள், சரியான வேலை கிடைக்காத காரணத்தால், தங்கள் வாழ்நாளை வீணாகக் கழித்துக்கொண்டிருக்கிறார்கள். கிராமந்தோறும் மக்கள் பஞ்சத்தாலும் பட்டினியாலும் வாடி கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிற பரிதாபகரமான நிலைமையை நாம் கண்கூடாகப் பார்க்கிறோம்.

அதுமட்டுமல்ல. நம்முடைய மாநிலத்திலே உள்ள, என்.ஜி. ஓக்கள் என்று சொல்லப்படுகிற கெஜெட் பதிவில்லாத சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் எல்லாம், தங்களுக்கு அதிகப்படியான ஊதியம் கொடுக்கப்படவேண்டும், இன்னும் பலவாறான சலுகைகளும் வசதிகளும் வேண்டும் என்று கிளர்ச்சி செய்துகொண்டும் உரிமைகளைக் கேட்டுக்கொண்டும் இருக்கிறார்கள். அவர்களுடைய பிரச்னையைத் தீர்ப்பதற்கும் இந்த வரவு செலவுத் திட்டத்திலே எந்தவிதமான அம்சமும் காணோம்.

"சோஷலிச பாணியில் நாங்கள் இந்த நாட்டைக் கொண்டுபோவோம்" என்று அவர்கள் தீர்மானத்தை நிறைவேற்றி விட்டார்களே தவிர, அந்த சமதர்மக் கொள்கையை நாட்டிலே கொண்டுவருவதற்காக ஏதாவது இந்தச் சர்க்கார் இதுவரை செய்திருக்கிறதா என்று பார்த்தால் அந்த முறையிலே அவர்கள் செய்தது குறிப்பிடத்தக்க அளவு இல்லை. மிகவும் குறைவாக இருக்கிறதென்பதை நாம் அறிவோம். சாதாரணமாக ஐரோப்பாவிலே சின்னஞ்சிறு நாடுகளைப் பார்த்தால், அங்கேயெல்லாம் அவர்கள் இம்மாதிரியான நாட்டின் ஜீவதாரமான பிரச்னைகளையெல்லாம் ஓரளவுக்குத் திருப்திகரமாகத் தீர்த்து வைத்திருக்கிறார்கள். அவைகள் சிறிய நாடுகளாக இருந்தபோதிலும், அவைகள் செல்வ நிலையிலே குறைவானவையாக இருந்தபோதிலும், அங்கெல்லாம் அவர்கள் இம்மாதிரியான அடிப்படைப் பிரச்னைகளைத் திருப்திகரமான முறையிலே தீர்த்துவைத்திருக்கிறார்கள். வேலையில்லாத் திண்டாட்டம் நம் மாநிலத்திலே இருப்பதுபோல் ஐரோப்பிய நாடுகளிலே இருப்பது இல்லை. அங்கிருக்கும் கீழ்த்தர உத்தியோகஸ்தர்களுடைய நிலைமை இங்கிருக்கும் கீழ்த்தர உத்தியோ

3rd March 1958] [Sri M. Jagannathan]

கஸ்தர்களுடைய நிலைமையை விட மிகவும் திருப்திகரமான முறையில் இருக்கிறது. அந்த நாட்டிலே சோஷலிச நல்வாழ்வை மக்களுக்கு அமைத்துக் கொடுப்பதற்குப் பலவிதமான திட்டங்களையும் அந்நாட்டு அரசாங்கங்கள் மேற்கொண்டு நடத்திவருகின்றன. உதாரணமாகப் பார்த்தால், வேலை இல்லாமல் எந்த எந்தக் குடும்பங்களிலே ஆடவர்களோ பெண்களோ இருக்கிறார்களோ அவர்களுக்கெல்லாம் **unemployment dole** என்று சொல்லக்கூடிய ஒரு படி கொடுக்கப்படுகிறது. அதிகமாக வயதாகி, சர்க்காருக்கும் நாட்டுக்கும் சேவை செய்து, ஓய்வு பெற்ற அதிகாரிகளுக்கு **old-age pension** வசதியெல்லாம் செய்துகொடுத்திருக்கிறார்கள். இவைகளெல்லாம் மேல் நாடுகளிலே, சிறிய நாடுகளாக இருந்தாலும், நல்ல அளவுக்கு திருப்திகரமான முறையிலே செய்துகொடுக்கப்பட்டிருக்கின்றன. **1-40 p.m.]** ஆகவே இம்மாதிரியான வகையில் மக்களுடைய நல்வாழ்வுக்காக வரவு செலவுதிட்டம் இந்த ஆண்டில் நமக்குச் சமர்பிக்கப்படவில்லை என்பது தான் என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம். இந்த வரவு செலவுத் திட்டம் அவ்வளவு நன்றாக வரவேற்கத் திட்டமாக இல்லை என்றும் எடுத்துக் காட்டினேன். நம்முடைய தமிழ்நாட்டில் நீண்ட நெடுங்காலமாக ஒரு பழமொழி வழங்கிக் கொண்டு வருகிறது. குல்லாவுக்கு ஏற்ற தலையா தலைக்கேற்ற குல்லாவா என்று சொல்வார்கள். அந்த முறையில் பார்ப்போமானால் நிதி மந்திரி அவர்கள் தலைக்கேற்ற குல்லா தைக்காமல், குல்லாவுக்கு ஏற்ற தலை தான் வைத்துக்கொள்ளவேண்டுமென்ற முறையில் இந்த பட்ஜெட்டைத் தயாரித்திருக்கிறார்கள். ஒவ்வொரு நாட்டிலேயும் எப்படி பட்ஜெட் தயாரிக்கப்படவேண்டுமென்றால் அந்த நாட்டினுடைய செல்வத்தை முதலில் நிர்ணயித்துக்கொண்டு அதன் பிறகு தான் வருமானத்தை வசூலிப்பதற்கு திட்டமிடவேண்டும். ஆனால், அதே சமயத்தில் ஒரு குடும்பத்தின் பட்ஜெட் எவ்வாறு தயாரிக்கப்படவேண்டுமென்றால், முதலாவது அந்தக் குடும்பத்தின் வருவாயை நிர்ணயம் செய்து கொண்டு அந்தக் குடும்பத்தின் செல்வத்தை நிர்ணயம் செய்ய வேண்டும். அதுபோல் இந்த நாட்டிலே ஜீவாதாரமான அடிப்படையான பிரச்னைகளைத் திருத்தி வைப்பதற்கும் நான் சுட்டிக்காட்டியதுபோல வேலையில்லாத் திண்டாட்டத்தை ஒழிப்பதற்கும், என்.ஜி.ஓ.க்களுடைய கோரிக்கைகளைக் கவனிப்பதற்கும், வேலையில்லாமல் திண்டாடுகிறவர்களுக்கு வேலை கிடைக்கின்ற முறையில் அவர்களுக்கு " ஆல்டர்னேடிவ் ஆப் எம்பிளாய்மெண்டு அவின்யூ " என்ற முறையில் செலவினங்களைத் தயாரித்துக் கொண்டு அந்தச் செலவினங்களுக்கு எவ்வளவு கோடி ரூபாய் நம் மாநிலத்திற்குத் தேவை என்பதை முடிவு கட்டிக்கொண்டு பட்ஜட் திட்டத்தைத் தயாரிக்கவேண்டும். அப்படியின்றி குல்லாவைச் சிறிதாக செய்து கொண்டு அந்தச் சிறிய குல்லாவைப் பெரிய தலையில் வைத்துவிடுவதற்கு முயற்சி செய்திருக்கிறார்கள். மக்களுடைய நல்வாழ்வுக்காக அவர்கள் செய்ய வேண்டிய நல்ல காரியங்களை எல்லாம் கைவிட்டு ஒரு சிறிய பட்ஜெட்டைத் தயாரித்துவிட்டு இதை 15 லட்சம் உபரி பட்ஜட் என்று சொல்லும் அளவுக்கு காங்கிரஸ் சர்க்கார் போய்க்கொண்டிருக்கிறது. இது மிகவும் வருந்தக்கூடிய நிலைமைதான். உண்மையில் நாம் பார்க்கப்போனால் இந்த ரெவின்யூ பட்ஜட்டை 15 லட்சம் உபரி பட்ஜட்டாகக் காட்டியிருக்கிறோம் என்று தான் பெருமைபடலாம். இந்தப் 15 லட்சம் ரூபாய் எப்படி வந்தது என்று பரிசீலனை செய்து பார்க்க வேண்டும். உண்மையில் நமக்கு மத்திய சர்க்கார் கொடுத்திருக்கிற 30 லட்சம் மானியம் கிடைக்கவில்லையென்றால் உண்மையில் இந்தச் சர்க்கார் கொண்டுவந்திருக்கிற புதிய வரிகள் மூலம் அவர்கள் எதிர்பார்க்கின்ற 1.20 லட்சம் ரூபாய் வரவில்லையென்றால் இந்த ரெவின்யூ பட்ஜட் பற்றுக்குறை பட்ஜட்டாக இருக்கும்.

மத்திய சர்க்கார் கொடுக்கும் என்று எதிர்பார்க்கிற 30 லட்சம் ரூபாயை எதிர்பார்த்துக்கொண்டு 15 லட்சம் ரூபாய் உபரி பட்ஜட்டாக தயாரித்திருப்பது ஒருவகையில் வரவேற்கத்தக்க அம்சம்தான் என்றாலும், இது எந்த அளவுக்கும் நன்மை பயக்கக் கூடியதாய் இருக்கப்போவது இல்லை என்பது என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம். எப்படியும் வேலை

அண்டு மீன்ஸ் பட்ஜட் முக்கியமானது. சாதாரணமாக ரெவின்யூ பட் ஜட்டிலே நிர்வாகத்தைச் சமாளிப்பதற்கு இந்த வருமானம் உபயோகப்படுமே தவிர வேஸ் அண்டு மீன்ஸ் பட்ஜட்டிலே முக்கியமான செலவினங் களுக்கு உபயோகப்படாது. வேஸ் அண்டு மீன்ஸ் தேடிக்கொள்வதற்கு நல்ல வருமானம் இருக்கவேண்டும். முக்கியமாக நீர்ப்பாசனத் திட்டங் களுக்கு, கூட்டுறவு சங்கங்களுக்கு, தொழில் துறைகளுக்கு இதுபோன்ற முக்கியமான அம்சங்களுக்கு வேஸ் அண்டு மீன்ஸ் தொகை இருக்கவேண் டும். அந்தத் தொகையை ஈட்டிக் கொள்வதற்கு சர்க்கார் தக்க நடவடிக் கையை எடுக்காததுதான் மிகவும் வருந்த வேண்டியதாக இருக்கிறது. வேஸ் அண்டு மீன்ஸ் பட்ஜட்டிலே ஏறக்குறைய 23·97 கோடி செலவாகும் என்று கணக்கிட்டிருக்கிறார்கள். இந்தச் செலவுக்கு அவர்கள் காட்டுகிற வருமானம் மத்திய சர்க்காரிடத்திலிருந்து அவர்கள் எதிர்பார்க்கக்கூடிய அளவுக்கு இருக்கிறது. மத்திய சர்க்காரிடத்திலிருந்து அவர்கள் ஏறக் குறைய 20 கோடி ரூபாய்க்கு கடன் மூலமாக எதிர்பார்க்கிறார்கள். மூல தனச் செலவிலே விழக்கூடிய துண்டுக்காக, பற்றுக்குறைக்காக சர்க்கார் என்ன செய்திருக்கிறார்கள் என்று பார்க்கும்போது கனம் நிதி அமைச்சர் அவர்கள் குறிப்பிட்ட அறிக்கையிலிருந்து நாம் ஒரு உண்மையைத் தெரிந்துகொள்கிறோம். இந்த மூலதனச் செலவிலே ஏற்படும் பற்றுக் குறைக்காக பொதுஜனங்களிடத்திலிருந்து கடனை எழுப்பியும், சிறு சேமிப்புத் திட்டங்களினால் ஈடு செய்ய முடியும் என்பதாகவும் நினைக்கவேண்டி யிருக்கிறது. நாம் உண்மையில் பத்து கோடி ரூபாய் சிறு சேமிப்புத் திட்டங்கள் மூலம் எதிர்பார்க்கிறோம். இந்தப் பணத்தில் நமக்கு கணிச மான அளவுக்கு மத்திய சர்க்காரிடத்திலிருந்து பங்கு கிடைத்தாலொழிய வேஸ் அண்டு மீன்ஸ் பட்ஜட்டிலே சரிவர ஈடு செய்ய முடியாமல் இருக்கி றோம்.

இப்பொழுதே மத்திய சர்க்கார் மூன்றில் இரண்டு பாகம் கொடுப்பதா கக் குறிப்பிட்டிருக்கிறார்கள் என்று நிதி அமைச்சர் அவர்கள் சொல்கிறார். நம்முடைய தேவைக்கு அது போதுமான அளவிலே இல்லை என்பதைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். நம்முடைய மாநிலத்திலே எவ்வளவு பணம் கிடைக்கிறதோ அவ்வளவு பணத்தையும் நம்முடைய மாநில மக்களுடைய நன்மைக்காகவே கொடுக்கப் படவேண்டும். பட்ஜட்டிலே தேவைப்படுகிற செல வினங்களுக்கு அவர்கள் பணத்தைக் கடன் மூலமாகவோ மத்திய சர்க்காரிடமிருந்து பெற்று, ஐந்தாண்டுத் திட்டத்தில் கண்டுள்ள அபிவிருத்தி களையும், "நியூ சர்விஸெஸ்" என்று சொல்கின்ற புதிய திட்டங்களையும் அமுலுக்குக் கொண்டு வந்து அவைகளை நிறைவேற்றி மக்களுடைய வாழ்க்கை தரத்தை உயர்த்துவதற்கு ஆவன செய்திருந்தால் உண்மையில் நான் இந்த வரவு செலவுத் திட்டத்தைப் பாராட்டியிருக்க முடியும். வரவேற்றிருக்க முடியும்.

1·50 p.m.

அது மாத்திரமல்ல. இந்த வரவுசெலவுத் திட்டத்திலே குறிப்பாக பின்தங்கிய சமுதாயத்திற்கும், ஹரிஜன மக்களுக்கும் ஏதாவது அவர் களுக்கு அதிகப்படியான, கணிசமான முறையிலே பணம் ஒதுக்கிவைத்திருக் கிறார்களா என்று பார்த்தால் அதுவும் திருப்திகரமாக இல்லை எனபதுதான் எனது அபிப்பிராயம். ஏனென்றால், அவர்களுக்கு ஒதுக்கியிருக்கிற தொகை யானது பின்தங்கிய சமுதாய மக்களின் தேவைகளுக்கும், ஹரிஜன மக்க ளின் தேவைகளுக்கும் மிகக் குறைவான ஒரு தொகையாகத்தான் இருக்கிறது. இந்நாட்டில் வாழ்கிற லட்சக்கணக்கான பின்தங்கிய மக்க ளும் ஹரிஜன மக்களும் வாழ்க்கையில் பல துறையிலும் மிகவும் பிற் போக்கான நிலைமையில் இருக்கிறார்கள். அவர்கள் பொருளாதாரத்துறை யில் மிகவும் பின்தங்கிக் கிடக்கிறார்கள். அவர்களின் கல்வி நிலைமை அதை விட மோசமாக இருக்கிறது. அதுமாத்திரமல்ல. அவர்கள் இந்த நாட்டில் மக்களாக வாழ்வதற்கு கூட, சாதாரண எலிமென்டரி நெஸ ஸிட்டீஸ் ஆப் லைப் என்று ஆங்கிலத்தில் சொல்வார்கள், வாழ்க்கையில் அடிப்படைத் தேவையைக்கூட பூர்த்தி செய்ய முடியாத நிலைமையில் மிகவும் கேவலமான நிலையில் வாழ்கிறார்கள் இந்த பின்தங்கிய மக்களும் ஹரிஜன மக்களும். அவர்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த இந்த

3rd March 1958] [Sri M. Jagannathan]

வரவு செலவுத் திட்டத்தில் ஏதாவது இருக்கிறதா என்று பார்த்தால் அவர்கள் வழக்கம் போல் காட்டுகிற புள்ளி விவரங்கள்தான் இருக்கின்றதே தவிர, வேறு அதிகப்படியான அல்லது கணிசமான முறையில் அவர்களுக்கு என்று கூடுதல் பணம் ஒதுக்கப்படவில்லை. இதுவரையில் சர்க்கார் ஹரிஜன முன்னேற்றத்தை அல்லது பின்தங்கிய சமுதாயத்தைச் சேர்ந்த மக்களின் முன்னேற்றத்தை எந்த கண்ணேட்டத்தோடு பார்த்து கொண்டு வந்திருக்கிருர்கள் என்ருல் ஏதோ ஒரு கண்துடைப்புக்காகத்தான் இந்த வேலைகளை செய்கிருர்களே தவிர, உண்மையில் இந்த மக்களை கை தூக்கிவிட, அவர்களின் வறுமையையும் பஞ்சத்தையும் போக்குவதற்கு ஒரு நடவடிக்கையும் எடுக்காமல், அவர்களின் அறியாமையை நீக்கிவிட்டால் அவர்கள் முற்போக்கு சமூகங்களோடு சமமாக வந்துவிடுவார்களோ என்ற கெட்ட நோக்கத்தோடுதான் என்று சொல்வேன். சர்க்கார் அவர்களின் வாழ்க்கை நிலையை உயர்த்துவதற்கு முன்வரவில்லை. இந்த அரசாங்கம் ஹரிஜன மக்களையும், பின்தங்கிய மக்களையும் உதாசீனப்படுத்திக்கொண்டுதான் வருகிருர்கள். அவர்களின் கையை தூக்கிவிட வேண்டும் அல்லது அவர்கள் நல்ல முறையில் முன்னேற வேண்டிய வழிவகைகள் வகுத்துக் கொடுக்க வேண்டுமென்ற நல்லெண்ணம் இருந்தால் உண்மையில் அந்தப் பிரச்னையை அனுதாபத்தோடு அணுகி அவர்கள் வாழ்க்கைத்துறையில் உயர்வு காண்பதற்கு வேண்டிய நல்ல திட்டங்களைத் தீட்டி அவர்களின் நல் வாழ்விற்காக அந்த வரவு செலவுத்திட்டத்தில் வழி செய்திருப்பார்கள். அவைகளை செய்ய இந்த சர்க்கார் தவறிவிட்டதால் நாம் இந்த வரவு செலவுத் திட்டத்தை குதூகலத்தோடும் உற்சாகத்தோடும் வரவேற்க முடியாது. அப்படி வரவேற்கத்தக்க ஒரு திட்டமாக இது இல்லை என்று சொல்லிக்கொண்டு நான் எனது உரையை முடித்துக்கொள்கிறேன். வணக்கம்.

Sri K. ANBAZHAGAN : மதிப்பிற்குரிய சட்டமன்ற தலைவர் அவர்களே, 1958–59வது ஆண்டு நிதிநிலை விளக்க அறிக்கையை நிதியமைச்சர் அவர்கள் நமக்கு அளித்திருக்கிருர்கள். நிதிநிலையை விளக்குவதற்காக அறிக்கை இருக்கிறது எனபதற்காக நான் நன்றி தெரிவித்த போதிலும் நாட்டின் நிலைமையை முற்றிலும் விளக்கக்கூடிய முறையில் இந்த நிதிநிலை அறிக்கை இல்லை என்பதை நான் முதலில் இங்கு குறிப்பிட விரும்புகிறேன். அரசாங்கத்தின் பொறுப்பேற்றிருக்கிற அமைச்சர்கள், இவ்வளவுதான் நிதி கிடைக்கிறது, அதைக் கொண்டு இன்னின்ன செயல்களைத்தான் செய்ய முடியும் என்பதற்காக விளக்கம் இவ்வறிக்கையில் செம்மையாக சுட்டிக்காட்டப் பட்டிருந்தபோதிலும், இன்னின்ன செயல்களை இந்நாட்டில் நிறைவேற்ற முடியவில்லை, நிறைவேற்ற முடியாத நிலைமையில் இருக்கிறேம் என்பதை விளக்காததற்காக எனது வருத்தத்தை. தெரிவித்துக்கொள்கிறேன். இந்த நிதிநிலை அறிக்கை ஏறத்தாழ சென்ற ஆண்டைப் போல்தான் வெளி வந்திருக்கிறது, ஆண்டின் எண் மாத்திரம் மாறி யிருக்கிறது. அதோடு அச்சிட்ட தமிழிலும் முன்னேற்றம் காண்கிறேன். சற்று வழவழப்பான தாளில் அச்சிட்டிருக்கிருர்கள். அவளுக்கு இவள் எழுந்திருந்து உண்பாள் என்பது போல் ஒருவள் படுத்து உண்பாள், மற்றவள் எழுந்து உண்பாள். அதுபோல்தான் இருக்கிறது இந்த ஆண்டு நிதிநிலை அறிக்கையும் போன ஆண்டு அறிக்கையும். எழுந்து உண்பாள் என்பது மாதிரி இருக்கிறது, இவ்வாண்டு நிதிநிலை அறிக்கை. வேறு ஒரு மாறுபாடும் இல்லை. இந்த ஆண்டு வரவு செலவுத் திட்டத்தில் இந்நாட்டில் முன்னேற்றத்திற்காக பலவிதப் பணிகள் நிறைவேற்றப்படும் என்ற உறுதி தரவில்லை. சென்ற ஆண்டில் நம் நாட்டிலிருந்து கேரளாவிற்கு இரண்டரை லட்சம் டன் உணவுப் பொருள்கள் சென்றது என்றும், அதற்குப் பதிலாக நமக்கு வெளி நாட்டிலிருந்து ஒரு டன் உணவுப் பொருள் வந்தது என்றும், ஆக உணவு நிலைமை எப்படியோ சரிக்கட்டிப் போய்விட்டது என்றும் தெரிவித்திருக்கிருர்கள். இந்நிலையைக் காணும் போது, வட்டார அமைப்பு முறையை ஏற்றுக்கொள்கிற கருத்துடையவன் நான் என்பதால் சொல்கிறேன், அந்த வட்டார அமைப்பில் உள்ள பிரதேசங்களில், ஒரு பகுதியின் உணவு நிலைமையை சரிக்கட்டாமல் அங்கிருந்து மற்றெரு பகுதிக்கு உணவுப் பொருள் செல்வது

தவறு. அப்படிப்பட்ட ஒரு தவறான காரியத்திற்கு நாம் இடம் அளிக்கக் கூடாது. அப்படி தமிழ்நாட்டிலிருந்து வெளிநாட்டிற்கு உணவுப் பொருள்கள் செல்லலாம் என்பதால் பெரும்பாலும் அதனால் பாதிக்கப்படுவார்கள் தமிழ்நாட்டில் உள்ள ஏழை மக்கள்தான். பெரிய நிலச்சுவான்தாரர்களும், பொருள் வளம் உள்ளவர்களும் வெளி வட்டாரங்களுக்கு உணவு அனுப்புவதின் மூலம் தங்கள் பொருள் களஞ்சியத்தை நிறைவு செய்து கொள்ளமுடியும். ஆனால் ஏழை மக்கள், அப்படி அனுப்பப்படுகிற ஒவ்வொரு கவளம் காரணமாக உணவுப் பொருள்களின் விலையும் ஏறி அவர்கள் தவியாய்த் தவித்து மிகவும் அல்லல் உறுகிறார்கள். கடந்த இரண்டாண்டு காலத்தில் ஏழை மக்களின் சராசரி வாழ்க்கை புள்ளிவிவரம் எப்படி எப்படி மாறி இருக்கிறது என்பதை நாம் எண்ணிப் பார்ப்போமானால் அவர்களின் நிலை நன்கு விளங்கும். **1957** ஜனவரியில் வாழ்க்கை புள்ளிவிவரம், 494. மார்ச்சில் 470. இது என்னுடைய தனித்திறமையால் சொல்வதல்ல, அறிக்கையில் காண்பதைச் சொல்கிறேன். போன டிசம்பரில், இது உயர்ந்து 512 அளவில் நின்றது. இப்பொழுது அது சற்று குறைந்துள்ளது என்று சொல்லும் நேரத்தில் மக்களின் வாழ்க்கையில் நல்ல முன்னேற்றம் இருக்கிறதா? மழை வளம் இருந்தபோதிலும், ஓரளவு திறமையான ஆட்சி நடந்தது என்று ஒப்புக்கொண்டாலும் இந்நாட்டு மக்களின் வாழ்க்கைத்தரம், அவர்களின் வாழ்க்கையை நல்ல முறையில் அமைத்துக்கொள்ள இத்திட்டம் வழிவகை வகுக்கிறதா என்றால் இல்லை. இப்பொழுது இருக்கிற நியாயவிலைக் கடைகள் கூட மார்ச் **1**-ம்தேதி மூடப்படப் போவதாக தெரிவிக்கப்படுகிறது. அப்படி எவ்வளவுக்கெவ்வளவு நியாயவிலைக் கடைகள் மூடப்படுகிறதோ அவ்வளவுக்கவ்வளவு பாதிக்கப்படுகிற மக்கள் அடித்தட்டில் உள்ள ஏழை மக்கள்தான். விலைவாசி ஏறினாலும், விரும்புகிற பொருள்கள் விரும்புகிற விலைக்கு கிடைக்காது போனாலும் சரி, அதிலும் குறிப்பாக உணவுப்பொருள்கள் கிடைக்காததால் பாதிக்கப்படுகிறவர்கள் ஏழை மக்களே. நியாயவிலைக் கடைகள் திறந்துவைத்துக் கொண்டிருந்தே நியாயவிலைக் கடைகள் தேவைப்படாமல் போகிற ஒரு நிலையைத்தான் ஒரு அரசாங்கம் எதிர்பார்க்க வேண்டுமே தவிர, இந்த ஆண்டு அவைகளை மூடி விடுகிறோம் என்று சொல்வது ஜனநாயக அரசாங்கத்தின் குறிக்கோளிற்கு ஏற்றதல்ல. ஏனெனில், மக்களின் தேவையை நிறைவு செய்ய நாங்கள் தயார், என்றுசொல்லி நியாயவிலைக் கடைகளை வேண்டிய அளவு திறந்து வைக்கவேண்டும். ஓரிடத்தில் உணவுப் பற்றுக்குறையும், இன்னொரு இடத்தில் ஏராளமான கைத்தறித் துணி உற்பத்தி செய்யப்பட்டு அது தேங்கியும் மக்கள், ஏழை மக்கள் மிகவும் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். அவர்கள், உழைக்கத் தயாராயிருக்கிறார்கள். எனக்குத் தெரிந்தவரையில், ஏறத்தாழ 5 கோடி ரூபாய் மதிப்புள்ள கைத்தறித் துணி இன்றையதினம் தேங்கிக்கிடைக்கிறது. சுமார் 20 லட்சம் மக்கள் கைத்தறித் தொழிலை நம்பி வாழ்கிறார்கள். இப்படி 5 கோடி ரூபாய் மதிப்புள்ள கைத்தறி தேங்கிக் கிடைப்பதன் மூலம் பாதிக்கப்படுகிறவர்கள், முதலாளிகள் அல்ல, இடையில் இருப்பவர்களும் அல்ல, கடைசியில் அதனால் பாதிக்கப்படுகிறவர்கள் ஏழை பாட்டாளி மக்கள்தான். ஆகவே, உணவுக்கு இருப்பதுபோல் உள்ள வட்டார அமைப்பு முறையை இதற்கும் ஏற்படுத்தி பிற நாடுகளில் இருந்து இறைக்குமதி செய்வதையும் தடை செய்து, பம்பாய், அலகபாத், அஹமதாபாத், ஜப்பான், சைனா போன்ற இடங்களில் இருந்து துணி இறக்குமதி செய்யப்படுவதைத் தடை செய்து, நம் நாட்டில் உற்பத்தியாகிற துணிக்கு போதுமான மார்க்கட் கிடைக்காத நிலையில் வெளிநாடுகளில் இருந்து இறக்குமதி செய்வதை தடை செய்து, உணவிற்கு ஏற்பட்டிருக்கிற வட்டார அமைப்பு முறைபோல் ஓரளவு இதற்கும் ஒரு வட்டார அமைப்பு முறை கொண்டு வர வேண்டும். அப்படி ஒரு முறையைக் கொண்டுவர இந்த அரசாங்கம் முனைந்து நிற்க வேண்டும்.

2–00 p.m.

இதற்கு முன்னால் சட்டமன்றத்தில் எடுத்துச்சொன்னது போல சில துணிகளை மட்டும் உற்பத்தி செய்வதற்கு கைத்தறிக்கு மாத்திரம் உரிமை கொடுக்கவேண்டும். ஆலைகள் அம்மாதிரி ஒதுக்கிவைக்கப்பட்ட துணிகளை உற்பத்தி செய்யக்கூடாது என்று உத்தரவு போடவேண்டும். எதிர்கட்சிகள் இதை பல தடவைகள் எடுத்துச் சொல்லியிருக்கின்றன. எதிர்கட்சிகள்

3rd March 1958] [Sri K. Anbazhagan]

மாறுபட்ட கருத்தில் இருந்தாலும்கூட இதுபோன்ற கருத்துக்களை இந்த சட்டமன்றத்தில் எதிர்கட்சிகள் எடுத்து சொல்லியிருக்கின்றன. கைத்தறிக் கென்று கரை போட்ட வேட்டியும் கலர் புடவையும், அகலமான துணியும் உற்பத்தி செய்வதற்கு உரிமை கொடுக்கவேண்டும். வரவு செலவு திட்டத் தைப்பற்றி புள்ளிவிவரங்கள் கொடுக்கப்படும்பொழுது எதிர்கட்சிகள் சொன் னதை ஆளும் கட்சி சிந்தித்திருப்பதாக உணர முடியவில்லை. ஜனநாயகத் தில் எதிர்கட்சிகள் சொன்னதற்கு விலை கொடுக்கவேண்டும், அதுவன்றி ரூபாய், அணுவுக்கு மாத்திரம் விலை கொடுப்பது என்பது மக்களுக்கு நல் வாழ்வை தேடித்தருவதாய் இருக்காது என்பதை தெரிவித்துக்கொள் கிறேன். அதே நேரத்தில் மாறுபட்ட கருத்துடையவர்கள் இருப்பதனால் அவர்கள் கூறக்கூடிய கருத்துக்களையும் சேர்ந்து பரிசீலித்தால்தான் ஜனநாயகம் பயனுடையதாக இருக்கும். சென்ற ஆண்டில் இந்த விவா தம் இங்கு நடைபெற்ற பொழுது இந்த சட்டசபைக்கூட்டத்தை மௌண்டு ரோடு கட்டிடத்திற்கு மாற்றவேண்டும் என்று எதிர்கட்சிகளாகிய நாங்கள் எடுத்துச் சொன்னோம். ஆட்சியாளர்கள் கேட்கவில்லை. ஆனால் அவை களுக்கான செலவை மாத்திரம் செலவு கணக்கில் எடுத்துச் சொல்லப்பட்டது. அதே போன்றுதான் கவர்னர் பதவி இந்த நாட்டில் அவசியமில்லை. தமிழ்நாடு அதிக வரிகளை கொடுத்துவருகிறது. இந்த சூழ்நிலையில் பெரு வாரியாக செலவு செய்யப்படுகின்ற இந்த கவர்னர் பதவி தேவையில்லை என்று எதிர்கட்சிகளால் எடுத்துச்சொல்லப்பட்டது. அதையும் ஆளும் கட்சி யினர் எடுத்துக்கொள்ளவில்லை. அதே போன்றுதான் தமிழ்நாடு என்று பெயர் வைக்கவேண்டும் என்றும் எடுத்துச்சொல்லப்பட்டது. அதையும் ஆளும்கட்சியினர் ஏற்றுக்கொள்ளவில்லை. அதோடு "இந்த கட்சிகள் என்ன சுண்டைக்காய் கட்சிகள்" என்று அலட்சியப்படுத்தப்பட்டது. ஆளும் கட்சி யினருக்கு தமிழ்நாடு என்ற எண்ணம் ஏற்பட்டிருப்பதாக உணர முடிய வில்லை. கைத்தறியை பொறுத்தவரையில் இன்று அல்ல, திரு. ராஜ கோபாலாச்சாரியார் அவர்கள் முதல் மந்திரியாக இருந்த காலத்திலேயே காங்கிரஸ் கட்சியை சேர்ந்தவர்கள் உட்பட பேசியிருக்கிறார்கள், என்றாலும் இப்போது கைத்தறிக்கு பாதுகாப்பு தரப்படவில்லை. இந்த சட்டமன்றத்தில் பல தடவைகள் நீதி மன்ற விசாரணைகள் வேண்டும் என்று கேட்டுக்கொள்ளப் பட்டிருக்கிறது. ஒரு தடவை நடந்த நீதி மன்ற விசாரணை கேலிக்கூத்தாக நடந்தது. அதன் பின் ஏற்கனவே ஒரு அதிகாரியை நியமித்து விசாரணை நடத்தி விட்டு நீதிமன்ற விசாரணை தேவையில்லை என்று அரசாங்கம் கூறினது. அதற்கும் பின்னர் சமீபத்தில் ஒரு நீதிமன்ற விசாரணை வேண்டும் என்று கேட்டதற்கு அதுபற்றி இதுவரை எந்தவிதமான பதிலும் தரவில்லை. இவைகளைப்பற்றி இந்த வரவுசெலவு திட்டத்தில் குறிப்பிடவும் இல்லை. நாட்டை பிரிக்கவேண்டும் என்று சொன்னதையும் ஏற்றுக்கொள்ள வில்லை. நான் இதை எல்லாம் ஏன் எடுத்து சொல்லுகிறேன் என்றால் ஆளும் கட்சியினர் மாறுபட்ட கருத்துக்களை சிந்தித்து பார்க்கவில்லை என் பதை குறிப்பிடுவதற்காகத்தான். வரவு செலவு திட்டத்தில் வரவுக்கு ரோமன் நம்பரையும் செலவுக்கு அரபிக் நம்பரையும் குறிப்பிட்டிருக்கிறார் களே தவிர அரசாங்கத்தின் கருத்துக்களை மறுத்துச் சொன்ன கருத்துக் களை ஏற்றுக்கொள்ள ஆளும் கட்சியினர் தயாராகவில்லை. சிந்திரி முந்திரி என்று சொல்லப்பட்டதை கேலியாக எடுத்துச்சொன்னார்கள். சென்ற ஆண் டில் நிதி அமைச்சர் அவர்கள் குறிப்பிடும் பொழுது "முந்திரிக் காடுகள் நாங்களும் வளர்க்க ஆரம்பித்திருக்கிறோம்" என்று கூறி "இது எதிர்கட்சிக்கு திருப்தியைக் கொடுக்கும்" என்று குறிப்பிட்டார்கள். சிந்திரி முந்திரி என்று நாங்கள் குறிப்பிட்டிருந்தது, சிந்திரியில் 35 கோடி ரூபாயில் தொழில்கள் வளருகிறது, அதே நேரத்தில் திருவிதாங்கூர்–கொச்சி பகுதி யில் அதிகமாக கிடைக்கின்ற முந்திரி தொழில் குன்றிப்போகிறது. முந்திரி ஓட்டை எடுத்து பிளாஸ்டிக் சாமானங்கள் செய்து வருகிறார்கள். இந்த தொழில் குன்றி வருகிறது என்று எடுத்துச்சொன்னோம். நாங்கள் இவ் விதம் சொன்னதை கேலியாக எடுத்துச் சொல்லிக்கொண்டு நாங்கள் முந்திரி மரம் வளர்க்கிறோம் என்று . . .

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நீங்கள் சொல்லுவ தற்கு முன்பே முந்திரி வளர்க்க ஆரம்பிக்கப்பட்டது.

[3rd March 1958

SRI K. ANBAZHAGAN : சென்ற ஆண்டில் பேசும்பொழுது கனம் அமைச்சர் சுப்பிரமணியம் அவர்கள் அண்ணா அவர்களைப் பார்த்து, முந்திரி காடுகள் வளர்க்கப்படுகிறது என்று கூறி இது இவர்களுக்கு திருப்தி அளிக்கும் என்று சொன்னார்கள். சட்ட சபையில் கேள்வி நேரத்தின் போது ஜயங்கொண்டான் தொகுதி அங்கத்தினர் இந்த திட்டத்தைப்பற்றி கேட்டார்கள். அதன் பேரிலும் பதில் அளித்தார்கள். மற்றொரு காங்கிரஸ் உறுப்பினர், முந்திரி ஒட்டை எடுத்து வெளிநாடுகளுக்கு அனுப்பி பிளாஸ்டிக் செய்யப்படுகிறது என்று கூறுவது தவறுதானா என்பதை காங்கிரஸ் கொரடா அவர்கள் கேட்டார்கள். இதைப்பற்றி விசாரிக்கலாம் என்று பதில் தரப்பட்டது. இதற்கான சரியான புள்ளிவிவரங்கள் கேட்கப்பட்ட பொழுது அதற்கு எல்லாம் சரியான புள்ளி விவரங்கள் கொடுக்கப்படவில்லை. ஆனால் கனம் நிதி அமைச்சர் அவர்கள் "இவ்விதம் நான் 5,000 எக்கர் முந்திரி காடு செலவு செய்து வைத்திருக்கிறேன், அதற்கு சிந்திரி உரம் போட்டு வளர்க்கிறேன்" என்று, அமைச்சா அவர்கள் கூறுவதாக சொல்லுகிறார்கள் என்றும், அவ்விதம் கூறுவது பொய் என்றும் மதுரையில்வைத்து சவாலுக்கு அழைத்திருக்கிறார். சவாலுக்குப் பயப்படுபவன் அல்ல நான். அது தேவையில்லை என்பதுதான் என் கருத்து. என்போன்றவர்கள் பேசுகிறார்கள், இதே சட்டமன்றத்தில் பேசப்படுகிற தமிழ் நாட்டு மக்களின் சராசரி வருமானத்தைப்பற்றியும் கேரள நாட்டு மக்களின் சராசரி வருமானத்தைப்பற்றியும் குறிப்பிடுகிறார்கள். இதைப்பற்றி மாறுபட்ட கருத்துக்கள் நிபுணர்களால் பேசப்படுகிறது. இதைப்பற்றி கூறப்படும் பொழுது இதில் எது உண்மை என்று அறிய வேண்டும். அதற்குத்தான் புள்ளிவிவரங்கள் கோரப்படுகிறது. நான் கேட்ட புள்ளிவிவரத்திற்கு இது வரையில் பதில் கிடைக்கவில்லை. எதிர்கட்சிக்குத்தான் தரவில்லை என்றாலும் ஆளும் கட்சிக்கும் கொடுக்கப்படவில்லை. அது வெட்கமான காரியம் என்றுதான் நான் சொல்லுவேன். கணவன்தான் மனைவியிடம் இன்றைக்கு சமையல் என்ன என்று கேட்கவேண்டுமே தவிர, மனைவி கணவரிடம் கேட்கமாட்டாள். புள்ளிவிவரங்கள் வேண்டுமென்றால் வேண்டிய விவரங்களை கொடுக்க வேண்டுமே தவிர அதனால் ஜனநாயகம் குழம்பி விடுமோ என்று நினைப்பது ஜனநாயகத்திற்கு ஏற்றதல்ல என்பதை சொல்லிக்கொள்கிறேன். அதுமட்டுமல்ல . . .

THE HON. SRI C. SUBRAMANIAM : புள்ளிவிவரங்கள் வேண்டுமென்றால் கேள்விகள் நேரத்தின்போது கேட்கப்பட்டால் கொடுக்கப்படும். புள்ளிவிவரங்களை எவ்விதம் பெற்றுக்கொள்வது என்று தெரியாமல் இருந்தால் அதற்கு அரசாங்கம் பொறுப்பல்ல.

SRI K. ANBAZHAGAN : பெரும்பாலும் புள்ளிவிவரங்கள் கொடுப்பதெல்லாம் முற்றிலும் உண்மையானதாக இருக்கமுடியாது. இதை யாரும் மறுக்க முடியாது. நீதியினுடைய கோட்டில் நின்று பேசவேண்டுமென்றால் புள்ளிவிவரங்களை வைத்துக்கொண்டு பேசுவதற்குத்தான் எல்லோரும் விரும்புவார்கள். மாற்றுக் கட்சிகள் புள்ளிவிவரங்கள் கோரினால் அதற்கான விவரங்களை பெற்றுக் கொள்ளுங்கள் என்று தாராளமாக பதில் கொடுக்கவேண்டும். ஆகவே இந்நாட்டிலுள்ள எத்தனையோ பிரச்னைகளை தீர்ப்பதற்கு இதில் பரிகாரம் காணவில்லை. அகதிகள் விஷயமாக இலங்கையிலிருந்து வருகிற அகதிகளையும் பாகிஸ்தானிலிருந்து வருகிற அகதிகள் இவர்களோடு சேர்ந்து குழப்ப வேண்டாம் என்று அடிக்கடி எத்தனையோ பேர்கள் தெரிவிக்கிறார்கள். அகதிகள் யாராய் இருந்தாலும் சரி அகதிகள் அத்தனைபேரையும் ஒன்றாக கருத வேண்டும். ஆட்சியாளர்கள் மட்டுமல்ல, வடநாட்டிலுள்ள தலைவர்கள் மனதில் இருக்கின்ற எண்ணம் இவர்கள் இலங்கையில் பிழைக்கப்போனவர்கள் தானே, அவர்கள் திரும்பி வருகிறார்கள் என்று சாதாரணமாக சொல்லிவிடலாம். எல்லோருக்கும் வயிறு ஒன்று தான். பசி வந்திட பத்தும் பறந்து போகும் என்ற பண்பாடு எல்லோருக்கும் ஒன்று தான். இவர்கள் இலங்கைக்கு போனது இந்த நாட்டில் பிழைக்க வழியில்லாமல் தான். இவர்கள் எல்லாம் அங்கு கவர்னர்களாக போகவில்லை.

3rd March 1958] [Sri K. Anbazhagan]

மந்திரிகளாக போகவில்லை. கலக்டர்களாகப் போகவில்லை. பாடுபட்டு வேலை செய்ய சென்றார்கள். நெடுஞ்சாலைகளில் கல் போட போனார்கள். இன்று அவர்கள் வாழ்க்கையில் கல் விழுந்திருக்கிறது. அவர்கள் எல்லாம் கள்ள தோணி ஏறி போனார்கள் என்றால் அவர்களை கள்ளத்தோணி ஏறி போவ தற்கு, அந்த நிலைமையை ஏற்படுத்தியதற்குள்ள பொறுப்பை நாம் ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும். நம் இனத்தவரை வெளியேற்றுகிறார் கள் என்ற உணர்ச்சி நமக்கிருந்தாக வேண்டும். அந்த முறையில் பார்ப் போமானால் வடநாட்டிலுள்ள அகதிகளுக்கு ஒரு நாளைக்கு 3 லட்சம் ரூபாய் செலவு செய்யப்படுகிறது. ஒரு ஆண்டுக்கு 10 கோடி ரூபாய் செலவு செய்கிறார்கள். அங்கே இவ்வளவு திட்டங்கள் இருக்கின்ற நேரத்தில் இங்குள்ள அகதிகளுக்கு நல்ல முறையில் வசதி செய்து தரப்படவில்லை . .

Sri S. NAGARAJA MONIGAR : Point of order, Sir. இந்தியா சுயராஜ்யம் பெறுவதற்காக, இந்த தென் பிராந்தியத்திலுள்ள சென்னை போன்ற பகுதிகள் எல்லாம் உள் நாட்டு சுயராஜ்யம் பெற்று சந்தோஷமாக முன்னேறுவதற்காக, வட பகுதியில் ஒரு சிலரை பலியிட்டு, அதன் விளைவாக ஏற்பட்ட ரத்த வெள்ளத்தில் கொடுமையைத் தாங்க வொண்ணாத ஒரு சிலருக்கு சில சலுகைகள் கொடுக்கப்பட்டிருக்கலாம். அதையொட்டி "வடநாடு, தென்னாடு" என்று சொல்லுவது இந்திய யூனியனுக்கு விரோதமாக இருக்காதா? அம்மாதிரி வார்த்தைகளைச் சொல் லலாமா? இந்திய யூனியன் ஒற்றுமைக்கு அது விரோதமானது அல்லவா என்று கேட்க விரும்புகிறேன்.

2-10 p.m.

Mr SPEAKER : It is not against the Constitution. Mr. Anbazhagan may continue.

Sri K. ANBAZHAGAN : இந்த அளவுக்கு இலங்கை அகதிகளை கவனிக்கவேண்டிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. ஆகவே மத்திய அரசாங்கத்தை வலியுறுத்தும் அளவுக்கு நமக்குக் கடமை இருக்கிறது. அவர்கள் எல்லாம் திரும்பி வந்தபிறகு கிராமங்களுக்குச் சென்று சிறு தொழில்களை ஆரம்பித்து வாழ வழிகாணவேண்டுமென்ற கருத்து உண் மையிலேயே அவர்கள் வாழச் செய்வதற்குப் போதுமானதாக ஆகாது. அந்தந்த கிராமங்களில் சிறு தொழில்கள் செய்ய முடியாத காரணத்தால் தான் அவர்கள் வெளியே செல்ல நேர்ந்தது. அவர்களுக்குப் புதுவாழ்வு அளிக்க பெரிய திட்டங்களை நிறைவேற்ற அரசாங்கம் முன்வரவேண்டும். ஏதோ "வடக்கு, தெற்கு" என்று எதிர்கட்சியிலுள்ள நாங்கள் பேசுவதாக ஆளும் கட்சியினர் வருத்தப்படுகிறார்கள். ஆனால் சிலபல நேரங்களில் இந்த "வடக்கும் தெற்கும்" அவர்களிடமிருந்து மறைமுகமாகவும், உள்ளத் திலிருந்து வெளிப்படுவதையும் நான் பார்த்திருக்கிறேன். அதற்கு நமது நிதி அமைச்சரின் பேச்சுகளிலிருந்து சான்று காட்டுவேன். முன்பு பேசிய பேச்சுக்கள் சான்றாக இருந்தாலும்கூட, இப்பொழுது இந்த வரவு செலவுத் திட்டத்தில் ஒரு கணக்கைப் பற்றிச் சொல்லும்பொழுது குறிப்பிட்டிருக்கிறார் கள். திரு. டி. டி. கே. அவர்கள் மத்திய அரசாங்கத்தை விட்டு வெளி யேறவேண்டிய நிலைமை ஏற்பட்ட காரணத்தால், நம்முடைய மாநிலத்தோடு அவர் கொண்டிருந்த தொடர்பைப் பற்றிச் சொல்லும்போது, இவர் விலகி யதால் ஏற்பட்டுள்ள நஷ்டம் ஈடு செய்ய முடியாது என்று சொல்லும்போது அந்த இரங்கல் உணர்ச்சியில் நாமும் கலந்துகொள்ளலாமென்று சொன் னாலும், "அவர் நம்மிலே ஒருவர்" என்ற அருமையான ஒரு கருத்தினைக் குறிப்பிட்டிருக்கிறார் அவர். இன்றுவரையில் நம்முடைய சென்னை மாநிலத் தில் நிதி அமைச்சர் அவர். நாளை எப்படி வேண்டுமானாலும் ஆகலாம். மத்திய சர்க்காரின் நிதி அமைச்சராக இருந்த அவரை, நம்மில் ஒருவர் என்று நம்முடைய நிதி அமைச்சர் சொல்லும்போது, நாம் என்ற கருத்து, அதிலும் "தமிழன்" என்ற கருத்து, தண்ணீரை விட இரத்தம் அழுத்த மானது, இரத்தத்தை விட சதை அழுத்தமானது, அதில் மொழிப் பற்று இருக்கும் என்ற கருத்து, மொழிப்பற்றில் இனவாடை வீசுகிறது என்ற கருத்து புலப்படுகிறது. டி.டி.கே. அவர்கள் செய்த பெரும் தொண்டைப் பற்றிக் குறிப்பிடும்போது, அவர் நம்மில் ஒருவர் என்று சொல்லும்போது,

என்னைப் போன்றவர்கள் எல்லோரையும் சேர்ந்து நாம் எல்லோரும் தமிழர்கள், நாம் எல்லோரும் திராவிடர்கள், நாம் எல்லோரும் தென்னுட்டவர், என்று குறிப்பிடுகிறபொழுது, அதிலே தவறு எதுவும் இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை.

THE HON. SRI C. SUBRAMANIAM : தமிழர் என்றே, தென்னுட்டவர் என்றே குறிப்பிடுவதில் தவறு எதுவும் இல்லை. ஆனல் நாம் பிரிந்து போகவேண்டுமென்று சொல்வதில் தான் தவறு இருக்கிறது. பிரிவினை உணர்ச்சியின் அடிப்படையில் பேசுவது தவறு என்பது என்னுடைய அபிப்பிராயம்.

SRI K. ANBAZHAGAN : பிரிவினை உணர்ச்சி தவறு என்று சொல்வதற்கு அமைச்சருக்கு அதிக உரிமை உண்டு. அதை வரவேற்கிறேன். அதே நேரத்தில் நமது திட்டங்களுக்காக நிதி கேட்கிற பொழுது பிரிவினை உணர்ச்சிதான் வருகிறது. ஐந்தாண்டுத் திட்டத்தில் பங்கு கேட்கிற பொழுது பிரிவினை உணர்ச்சிதான் வருகிறது. பெரிய திட்டங்களை எல்லாம் நிறுவும் பொழுது பிரிவினை உணர்ச்சி தான் வருகிறது. எந்த ராஜ்யத்து அமைச்சர் என்ற கேள்வி எழும்பொழுது பிரிவினை உணர்ச்சிதான் வருகிறது. அமைச்சர்களுக்குள் "போர்ட்போலியோ"வை நிர்ணயிக்கும்பொழுது பிரிவினை உணர்ச்சிதான் வருகிறது. ஏன் இதனைக் குறிப்பிடுகிறேன் என்றல், "பிரிவது என்பதும் தீதல்ல". நல்லதற்காகப் பிரிவதும் வரவேற்கத்தக்கது. கூடிவாழ முடியாத கணவன் மனைவி சேர்ந்து தான் இருக்கவேண்டு மென்று சொல்லுவது ஒரு ஆணையும் பெண்ணையும் சித்திரவதை செய்வது போலாகும் என்பதை உலகம் அறியும். எங்கோ இருப்பதாகக் கருதப்படுகிறவர்களுடன் தொடர்பு இருந்துதான் தீர வேண்டும், பிரிவினை கூடாது என்று சொல்லுவது நீதியோடு ஒட்டியது அல்ல. நான் சொல்லக்கூடிய ஒரே அழுத்தமான கருத்து என்ன வென்றல், இந்த வரவு செலவுத் திட்டம் சமர்ப்பிக்கின்ற காரணத்தாலே மட்டும் இந்த நாடு ஒன்றுபடுவதற்கு இது அடையாளமாகி விடவில்லை. நோயுள்ள நேரத்திலே மருந்து தரவேண்டுமே ஒழிய, சிற்றுண்டி தருவது சரியாகாது.

வரவுச் செலவுத் திட்டத்தில் இரண்டொரு வரி விதிப்புக்கள் இருக்கின்றன. இந்த வரிவிதிப்புக்கள் நிதிக் குறைவை ஓரளவு சரிக்கட்டுவதற்கு போட்டதாக வரவேற்ருலும்கூட, இந்த விவசாய வருமான வரி விதிப்பானது, நிலத்திற்கு உச்ச வரம்பு கட்டும் திட்டத்தை ஒத்திப் போடுவதற்கு இதைப் பயன்படுத்துவார்களோ என்று நினைக்கவேண்டியிருக்கிறது. கவர்னர் அவர்கள் உரையில்கூட நிலத்திற்கு உச்சவரம்பு கொண்டுவருவதற்கு முன்னதாக நிலம் அதிகமாக வாங்குவதற்கு தடை விதிக்கப்படும் என்று தெரிவித்திருக்கிருர்கள். விவசாய வருமான வரிக் கொள்கை வரவேற்கக் கூடியது தான். ஆனல் நடைமுறையில் எவ்வளவோ சிக்கல்கள் ஏற்படும். வருமானத்தைக் குத்துமதிப்பாக தீர்மானிக்கும் பொறுப்பை அதிகாரிகளிடத்தில் விட்டால், அதிகாரிகளின் ஆசாபாசங்களுக்கு உட்பட்டு, குத்துமதிப்பு தவருகப் போகக்கூடிய நிலைமை பலருக்கு ஏற்படக்கூடும். ஆகவே அவைகளை எல்லாம் தீர்மானித்து மசோதாவில் இருக்கக்கூடிய குறைகளை நீக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக "தமாஷா வரி" யைப் பற்றி ஒருசில வார்த்தைகள் சொல்ல நினைக்கிறேன். பொழுதுபோக்கு வரி என்று சொன்னர்கள். பொழுதுபோக்கு அரசாங்கங்களே சில இருக்கினறன. பொழுதுபோக்கு என்ற சொல் கூடாது. என்னல் ஏற்றுக்கொள்ளக்கூடியது அல்ல. மகிழ்ச்சி, இன்பகால செலவிற்காக வரி என்ற பெயர் பொருத்தமாக இருக்கலாம்.

THE HON. SRI C. SUBRAMANIAM : அதை நீங்களே சொல்லலாம்.

SRI K. ANBAZHAGAN : நல்ல பெயரைச் சிந்தித்து நானே சொல்வதாக இருக்கிறேன். ஏனென்றல் அமைச்சர் அவர்கள் ஏற்றுக் கொள்வார்கள்போல் இருக்கிறது (சிரிப்பு). சினிமாக்கள், குதிரைப்பந்த

3rd March 1958] [Sri K. Anbazhagan]

யம் தவிர மற்ற எல்லாப் பொழுதுபோக்குகள் மீதுள்ள வரி ரத்துசெய்யப் படுமென்று சொல்லப்படுகிறது. குதிரைப் பந்தயத்திற்கு பொழுதுபோக்கு வரியை அதிகரித்திருப்பதால், அரசாங்கம் குதிரைப்பந்தயத்தை நிறுத்தப் போவதில்லை என்ற கருத்துத் தொனிக்கிறது. குதிரைப் பந்தய சூதாட்டத் திற்குப் போடுகிற வரி தீமை பயக்குமே தவிர, நன்மை பயக்காது. கள் குடிப்பு, இழிவான ஒழுக்கத்திற்கான வாய்ப்புகள் இருக்கக்கூடாது என்று பார்க்கிற அரசாங்கம் இப்படிப்பட்ட சூதாட்டத்தை வளர்த்து, அதிலிருந்து 15 அல்லது 20 லட்சம் கிடைக்கிறது என்பதற்காக அதைக் கைவிடமுடியாது என்று சொல்லுவது, அவர்களின் உயர்ந்த லட்சியத்திற்கு குறைப்பாட்டை உண்டாக்குவதாகும். ஆகவே, குதிரைப் பந்தயத்தை ஒழித்தாகவேண்டும் என்று வலியுறுத்திச் சொல்லுவேன்.

அது மட்டுமல்ல. இந்த ஆட்சிமன்றம் பொதுமக்களுடைய நலனைக் கருதுவதாக இருந்தால் அரசாங்க நிர்வாக ஊழல்களை களைந்தாகவேண்டும். இந்த ஊழல்கள் பலவகையில் வளர்கின்ற வரி இலாக்காக்கள் மூல மாகப் பெருகிக்கொண்டே இருக்கின்றன. ஊழல் வளர்ந்தால் எவ்வளவு நல்ல திட்டத்தை நிறைவேற்றினாலும் பயன் ஏற்படாது. ஓட்டைக் குவளை யில் எவ்வளவுதான் மொண்டாலும் தண்ணீர் வராது. வருகின்ற தண்ணீர் வாய்க்கும் எட்டாது. அதுபோல நிர்வாக இயந்திரத்திலுள்ள குறைகளை நீக்கினால்தான் பொதுமக்களுக்கு உண்மையான பயன் கிட்டும். ஆகவே, நிர்வாக ஊழல்களை நீக்கி, முன்னேறுவதற்கான வழி வகைகளைச் செய்யவேண்டுமென்று சொல்லிக்கொண்டு, இந்த வரவு செலவுத் திட்டத் தின் மீதுள்ள என்னுடைய உரையை முடித்துக்கொள்கிறேன்.

**SRIMATHI K. KAMALANBUJA AMMAL : On a point of information, Sir.** பொழுதுபோக்கு அரசாங்கம் என்பது என்ன என்று அறிய விரும்புகி றேன்.

**MR. SPEAKER :** பதில் சொல்லவேண்டும் என்ற கட்டாயம் இல்லை. உங்களுக்கு சந்தேகம் இருந்தால் அவர்களுக்கும் அதில் சந்தேகம் இருக்க லாம்.

***SRI V. K. KRISHNAMURTHY :** அவையின் தலைவர் அவர்களே திருவும் தெளிவும் வேறெனினும் இவை ஒன்ருகி நீதியால் அலங்கரிக்கப் பெற்றுத் திகழும் அமைச்சர் திரு. சுப்பிரமணியம் அமைத்த வரவு செலவு திட்டம் நம் முன்னர் நிற்கிறது. "உடன்பாடும், எதிர்மறையும், நடுநிலையும் இயல்பென்ருலும், எப்பொருள் யார் யார் வாய் கேட்ப பினும், அப்பொருள் மெய்ப்பொருள் காண்பதறிவு"—என்ற அறமுறைபடிப் ஓர்ப்புக்கிரையாகி மெய்யைக் காண விழையின் நாடு நலமுற, நாடு சீர்பெற, நாடு மேன்மையுற, நடைமுறைக்கேற்ற நல்ல திட்டங்கள் இருத்தலால் இந்த வரவு செலவுத் திட்டத்தை வரவேற்கிறேன். ஒற்றுமை நயத்தின் ஒன்றெனத் தோன்றினும், வேற்றுமை நயத்தின் வேறே உடல் உயிர் —என்ற நிலை நிலவுமாயின் உலகம் அழிவுக்குச் செல்லும். ஆங்கிலத்தில் **"Men may construe things after their fashion clean from the purpose of the things themselves."** என்று செகப்பிரியர் கூறியவாறு அரசியல் இயங்கத் தொடங்கின் நாடு நலிவுற்று போகுமே தவிர, நலமுருதென்பதை ஏற்றுக்கொள்ள வேண்டும். என்ருலும் உள்ளத்தைக் கொண்டு நல்லதைச் செய்யவேண்டு மென்ற நோக்கத்தோடு சில திட்டங்கள் சிறந்து விளங்கு கின்றன.

பருவமழையின் அளவையும் தான்ய விளைச்சலின் அளவையும் ஒப்பு நோக்கிப் பார்க்குங்கால், மழை குறைந்திருந்தாலும் விளைச்சல் அதிகமாக இருந்திருக்கிற புள்ளிவிவரத்தை காண்கையில், விவசாயம் வளர்ச்சி எய்தி வருவதைக் கண்டு மகிழாமலிருக்க முடியவில்லை. பைந்தமிழன்னைக்கு பன்னீ ராயிரம் பாமாலை புனைந்த கம்பர், அமைச்சருக்குக் கூறிய, "வினையின் வந்ததாயினும் மாற்றலாற்றும் பெற்றியர்" என்ற இலக்கணத்திற்கேற்ப இவ்வமைச்சரவை இருப்பதைப் போற்றுகிறேன். விவசாயம் வளர்ச்சியுற விதைப் பண்ணைகளை அமைத்து ஏழை விவசாயிகளுக்கு உதவ முன் வந்திருப்பது மிகவும் போற்றத்தக்கது.

[Sri V. K. Krishnamurthy] [3rd March 1958

2–20 p.m. விவசாயத்திற்கு உதவியாக, பயிர்களுக்குப் பூச்சிகள் விழுந்தால் அதைப் போக்குவதற்கு மருந்துகள் வாங்கிக்கொடுத்தும், அந்த மருந்தை தெளிப்பதற்கு வேண்டிய கருவிகளையும் பாதி விலைக்கு வாங்கிக்கொடுத்திருப்பது மானது மிகவும் வரவேற்க வேண்டி இருக்கிறது. இதைக் கண்டு எல்லோரும் பாராட்ட வேண்டியதுதான். அத்துடன் ஏழை விவசாயிகளுக்கு என்று மூன்று கோடி பதினைந்து லட்சம் ரூபாய் ஒதுக்கியிருக்கிறார்கள். அதன் மூலம் அவர்கள் முன்னேற்றமடையவேண்டும் என்று அப்படி ஒதுக்கியிருக்கிறார்கள். இதுவும் ஒரு நல்ல முறைதான். இதற்கு நாம் அரசாங்கத்தைப் பாராட்ட வேண்டியதுதான். ஆனால் விவசாயிகளுக்கு என்று கொடுக்கக்கூடிய பணமானது அவர்களுக்கு காலா காலத்தில் குறித்த நேரத்தில் குறிப்பிட்ட அளவில், அவர்களுக்குக் கிடைக்கவில்லை என்ற ஒரு புகார் இருந்து கொண்டிருக்கிறது. இந்தக் குறையைப் போக்குவதற்கு அரசாங்கம் உடனடியாக நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

நீர்ப்பாசனத்தைப் பொறுத்தவரையில் பெரிய நீர்ப்பாசன அணைக்கட்டு திட்டங்கள் வெற்றியெய்தி பலனளித்து வருகிறதென்றியம்பவேண்டுவதில்லை. ஆறு இருந்தும் நீரில்லா வடாற்காடு மாவட்டத்திற்குச் சரியான நீர்ப்பாசன வசதி செய்துகொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். அறப் பழங்காலத்தில் சோழ-பாண்டிய மன்னர்களால் அமைக்கப்பட்ட ஏரிகள்—குளங்கள்—கால்வாய்கள்—கசங்கள் மண்மேடிட்டிருக்கின்றன. இவைகளை ஆழப்படுத்த உடனடியாக அரசாங்கம் முனைந்து அதிகாரிகளனைவரும் விரைவில் இப்பணியில் ஈடுபட ஆணையிட்டாலொழிய மழை குறைந்த மாவட்டங்கள்—வளங்குறைந்த மாவட்டங்கள் மறுமலர்ச்சி எய்தி வறுமை மாய்ந்து வளமை தளிர்க்காதென்பதில் ஐயம் இல்லை. ஏழை விவசாயிகளுக்கு நல்ல லனைக்கொடுக்குமளவில் சிறிய நீர்ப்பாசனத் திட்டங்களை எடுத்து நடத்திக்கொடுக்கவேண்டும்.

விவசாயத்திற்கு ஏற்ற காடுகளை வளர்ப்பதற்கு அரசாங்கம் திட்டம் வகுத்து நடவடிக்கை எடுத்துக்கொண்டு வருகிறது. இது மிகவும் வரவேற்கத் தக்கது. அதை நடைமுறைக்குக் கொண்டு வந்தால் அதன் மூலம் விவசாயம் நல்ல முறையில் அபிவிருத்தி அடைவதற்கு வாய்ப்பாக இருக்கும். வட ஆற்காடு மாவட்டத்தில் அதிகப்படியான காடுகளை வளக்கிறார்கள். அங்கெல்லாம் முந்திரி செடியையும் வளர்த்து வருகிறார்கள். அதையும் பெரிய அளவில் வளர்த்து வருகிறார்கள். அதனால் ஓரளவு அங்கே நல்ல முறையில் இது வளர்ச்சி பெறும் என்பதில் ஐயம் இல்லை. முந்திரி செடி வளர்ப்பு இல்லை என்று இல்லாமல் அது நல்ல முறையில் உற்பத்தி யாவதற்கு வாய்ப்பு இருக்கிறது. அத்துடன் ஆரணி தாலுக்கா பூசிமலை குப்பத்தில் பெரிய காடுகள் இருக்கின்றன. அங்கேயும் இதை பயிர் செய்யலாம். அதற்கெல்லாம் காட்டிலாகா அதிகாரிகள் நல்ல முறையில் பணம் செலவு செய்யவேண்டும். இப்படிப்பட்ட இடங்களில் எல்லாம் காட்டிலாகா அதிகாரிகள் நல்ல முறையில் கவனம் செலுத்தி முந்திரிச் செடிகளை வளர்த்து வந்தால் அந்த மாவட்டத்தின் வளம் நல்ல முறையில் பெருகும் என்பதை சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

சமுதாய நலத்திட்டம் நல்ல முறையில் இப்பொழுது பயன்பட்டு வருகிறது. சமூகமும் அரசாங்கமும் இரண்டறக் கலந்து நல்ல முறையில் பணத்தைச் செலவு செய்து உழைத்து வந்தால் இன்னும் அதிகப்படியான பலனை அதன் மூலம் நாம் அடையலாம். பல இடங்களில் சாலைகளை அமைத்து, மருத்துவ மன்றங்கள் அமைத்து—மனமகிழ் மன்றங்கள் அமைத்து பள்ளிக்கூடங்களைக் கட்டிக்கொண்டு வருகிறார்கள். இப்படி இன்னும் அனேக இடங்களில் இந்த திட்டத்தை அமுலுக்குக் கொண்டு வந்தால் நல்ல முறையில் அபிவிருத்தி அடைவதற்கு வசதியாக இருக்கும் என்பதையும் சொல்லிக் கொள்ளுகிறேன். இந்த திட்டத்தின் மூலம் பல இடங்களில் குளங்கள் கூட வெட்டப்படுகின்றன. அந்தந்த மாவட்டங்களில் இத்தகைய திட்டங்களை அமுலுக்குக் கொண்டு வந்து அங்குள்ளவர்களுடன் இரண்டறக் கலந்து வேலை செய்தால் சமுதாய நல திட்டம் சிறந்த முறையில்

3rd March 1958] [Sri V. K. Krishnamurthy]

பயன்படும். ஆகவே அந்தந்த மாவட்டங்களில் இந்த திட்டங்களை அமுலுக்குக் கொண்டுவரவேண்டும் என்று அரசாங்கத்தைக் கேட்டுக்கொள் கிறேன்.

மின்சார திட்டம் சம்பந்தமாக குறிப்பிடும்போது நமது மாநிலத்தில் மின்சாரம் நல்ல முறையில் அபிவிருத்தி அடைந்து வருகிறது என்று சொல்லலாம். மின்சார இயக்கம் சிறந்த முடைறயில் இயங்கிக்கொண்டு வருகிறது. அது மின்னல் வேகத்தில் போகிறது என்று கூட சொல்லலாம். அப்படிப் போவதைக் கண்டு நாம் பெருமைப்பட வேண்டியதுதான். வட ஆற்காடு மாவட்டத்தில் அதிகாரிகளுடன் இரண்டறக் கலந்து அவர்கள் வேலை செய்து வருவதால் இந்த இயக்கம் நல்ல முறையில் பயன் அடைந்து வருகிறது என்றும் சொல்லலாம். மின்னல் வேகத்தில் நிறைவேறும் திட்டம் இது என்பதை இப்பொழுது ஏற்பட்டிருக்கும் அபிவிருத்தியி லிருந்து நன்கு தெரிய வரும். அனைத்திந்தியாவில் மிகுந்த மின்சார வசதி தென்னகத்திலிருக்கிறது என்பது பெருமைக் குறியதே. இலக்கை யும் கடக்கும் நிலையிலிருப்பது மின்சாரம். இதைப்பற்றி குறிப்பாக கூறும் போது ஆயிரம் பம்பு செட்டுகள் ஓராண்டில் தமிழ்-தெலுங்கு மாநிலங் களுக் களித்தார்கள். அப்படிக் கொடுக்கப்பட்டிருக்கும்போது ஒரு தாலூக்கா வில் மட்டும் 800 பம்பு செட்டுகள் இவ்வாண்டு கொடுத்திருக்கிறார்கள் என்றால் இந்த மின்சார இயக்கம் எவ்வளவு தூரம் மின்னல்வேகத்தில் பயனடைந்திருக்கிறது என்பது நன்கு தெரிய வரும்.

ஒவ்வொரு மாவட்டத்திலும் ஆய்வு மன்றங்கள் நிறுவி சோதனை செய்து அதன் விடையைக் கொண்டு மருந்தளிக்கும் முறை வந்தாலொழிய மருத்துவ கடமை நிறைவேறாது. மேலே நாடுகளுக்கு அனுப்பி வைக்காம லேயே இந்நாட்டிலேயே மருத்துவர்களுக்கு முழு பயிற்சி பெறும் துறை வளர்ச்சியுற்றிருப்பது பெருமையே. அதன் மூலம் மருத்துவ குறையை விருத்தி செய்யலாம். மயக்கமின்றி அறுதியிட்டு உறுதியாக குறித்த நோய் இது என்பதை அறிய ஆய்வு முறை அவசியம். இல்லையெனில் "**Medicine is based on conjecture and develops by murder**" என்ற பழமொழி நீடிக்கும். ஆகவே ஒவ்வொரு மாவட்டத்திலும் ஒரு லெபரட்ரியை அமைத்து அங்கு வரக்கூடிய நோயாளிகளின் நோய் இன்னது என்று கண்டு பிடித்து அவர்களுக்கு ஏற்ற மருந்து கொடுக்க ஏற்பாடு செய்தால் மருத்துவம் நல்ல முறையில் இயங்கும் என்பதை தெரிவித்துக் கொள்ளுகிறேன். இல்லா விட்டால் நாம் எவ்வளவு மருத்துவத்திற்கு என்று பணம் செலவு செய்தாலும் அது பலனின்றி போய்விடும். ஆகவே, இப்பழமொழி அழிந்தொழிய ஆய்வு மன்றங்களை அங்கங்கே அமைத்து நோயாளிகளை பரிசோதித்து அதன் பிறகு மருந்துக்களைக் கொடுக்க மருத்துவர்களுக்கு விதி செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

குறிப்பாகக் கூறும்போது அதிலும் மக்களுடைய நோயைப்பற்றிக் குறிப் பிடும்போது மக்களுடைய நோய்க்கு என்ன காரணம் என்று பார்த்தால் மக்களுக்கு போதிய சத்துப் பொருள் இல்லையாதலால் அவர்கள் நோய்க்கு இரையாகிறார்கள். டென்மார்க்கில் மக்கள் ஒரு ஆண்டிற்கு சுமார் 300 முட்டைகள் அருந்துகிறார்கள் என்றும் அதனால் அவர்கள் அங்கு நோ யற்று வாழ்ந்து வருகிறார்கள் என்றும் சொல்லப் படுகிறது. அதனால் அங்குள்ளவர்கள் உடல் நலமுற்று வாழ்கிறார்கள் என்றும் சொல்லப்படுகிறது. மாதிரிக்கு சில நோய்களைக்கூட அங்கு காண முடியவில்லையாம். அங்குள் ளவர்களுக்கு டி.பி. நோய் என்றால் என்ன, என்று கூட தெரியாமல் இருக்கிறார்களாம். ஆதலால் தாலுக்காக்களில் கோழிப்பண்ணைகள் வைத்து அதிக முட்டைகளை உற்பத்தி செய்து மிகக் குறைந்த விலைக்கு மக்களுக்கு விற்றால் மக்கள் நலமுறுவர். மருத்துவ துறைக்குச் செய்யும் செலவும் குறையும் என்று தோன்றுகிறது. ஆகவே ஒவ்வொரு தாலூக்கா விலும் ஒரு கோழிப்பண்ணையை அமைக்க வேண்டும் என்று தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

கல்வியின் இன்றியமையாமையை உணர்ந்து இவ்வாண்டு ஒரு கோடி ரூபாய் உயர்த்தியிருப்பது உவகையுற வைக்கிறது. வரப்போகும் ஆண் டிற்கு சுமார் இரண்டு கோடி ரூபாய் கல்விக்கு செலவு செய்யப்போவதாக

சொல்லப்படுகிறது. அதைக் கண்டு நாங்கள் பாராட்டுகிறோம். அதை வர வேற்கிறோம். அதே சமயத்தில் ஏழை பிள்ளைகள் படிப்பதற்கு நல்ல வசதி செய்திருக்கிறார்கள். ஆரம்பப்பள்ளி மாணவர்களுக்கு இலவச உணவு வழங்குவதற்கு திட்டமிட்டிருப்பது பாராட்டிற் குரியது. உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோர், பிடித்த கல்விப் பெரும் பிணிவிடுஉம், பசிப்பிணி என்னும் பாலி என்ற புலவர் பொன் னுரைக்கு ஏற்ப அரசினர் செய்துள்ளமையை நாம் பாராட்டுகிறோம்.

(இந்த சமயத்தில் ஸ்ரீ சட்டநாத கரையாளர் தலைமை) மத்தியான உணவு கொடுப்பது மிகவும் போற்றக்கூடியது. அதைப் போலவே எல்லா குழந்தைகளுக்கும் மத்தியான உணவு கொடுக்க அரசினர் முன் வர வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். ஆரம்பப் பள்ளிகளுக்கு ஆசிரி யர்களை நியமிக்கும்போது பத்தாவது படிவம் வரையில் படித்தவர்களை நியமித்தால் அவர்கள் நல்ல முறையில் குழந்தைகளுக்குப் படிப்புச் சொல்லிக் கொடுக்க வசதியாக இருக்கும் என்பதைச் சொல்லிக் கொண்டு இந்த வரவு செலவு திட்டத்தை வரவேற்றுப் பாராட்டுகிறேன்.

SRI A. R. SUBBIAH MUDALIAR : கனம் தலைவர் அவர்களே, கனம் நிதிமந்திரி அவர்களால் கொண்டு வரப்பட்ட வரவு செலவு திட்டத்தை நான் ஆதரித்து சில வார்த்தைகளைச் சொல்லப் பிரியப்படுகிறேன். இந்த வரவு செலவு திட்டத்தில் முக்கியமாக விவசாய அபிவிருத்திக்கு முதலிடம் கொடுக்கப்பட்டிருக்கிறது. கனம் நிதி மந்திரி அவர்களுடைய வரவு செலவு திட்டப் பிரசங்கத்தின் 6-வது பாராவில் விவசாய அபிவிருத்திக்கு தேவை யான பணம் ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கிறது என்று குறிப்பிட்டிருக்கிறார். அதாவது விதைப் பண்ணைகளுக்கு 72 லட்சம் ரூபாயும், கடன் தந்து உதவ 60 லட்சம் ரூபாயும், கழிவு உர உற்பத்திக்கு 7 லட்ச ரூபாயும், பூச்சி மருந்துக்கு 8 லட்ச ரூபாயும், அந்த மருந்துகளை அடிப்பதற்கு கருவிகள் வாங்குவதற்கு 4 லட்சம் ரூபாயும், ஆக 151 லட்ச ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. ஆனால், அதற்கு முக்கிய இடம் கொடுக்கப்பட் டிருந்தும், ஒதுக்கப்பட்ட தொகை குறைவாக இருக்கிற தென்பது எங்க ளுடைய அபிப்பிராயம். நிதி அமைச்சர் அவர் களுடைய பட்ஜெட் உரையில் 30-வது பாராவில், “ . . . இதில் 2 கோடியே 39 லட்ச ரூபாய் கட்டி டங்களுக்காக ” ஒதுக்கப்பட்டிருப்பதாக குறிப்பிடப்பட்டிருக்கிறது. இந்தத் தொகையானது மூலதனச் செலவாக இருந்தாலும் வருவாய் உள்ள செலவு இனம் இல்லை. அதைக் குறைத்து இம்மாதிரி விவசாயத் திட்டங் களுக்கு பணத்தை ஒதுக்கலாம். பருவ மழை தவறிக்கொண்டு வருவதால் கிணறுகளிலிருந்து தண்ணீர் எடுத்து பாசனம் செய்வதற்கு வசதியாக, கிணறு வெட்ட மானியம் கொடுப்பதன் மூலம் உணவு உற்பத்தியைப் பெருக்கலாம். **Loan-cum-subsidy scheme** ஏற்படுத்தி, அதற்குத் தொகை ஒதுக்கலாம். அத்துடன் அமோனியம் சல்பேட் போன்ற ரசாயன உரங்கள் 75 ஆயிரம் டன் தான் விநியோகம் செய்யப்பட்டிருக்கிறது. அன் னிய நாட்டுச் செலாவணித் தட்டு இருந்தபோதிலும், இந்த வகையிலும் கொஞ்சம் தொகை ஒதுக்கலாம். அத்துடன் நிர்வாகத்தை நடத்துவதில் ஒழுங்கீனங்கள் இருப்பதை நிவர்த்தி செய்தால் நேரடியாக விவசாயி களுக்கு ஒரு நன்மை ஏற்படும். இதனால், சிப்பந்திகள் செலவு ஓரளவு ஏற்பட்டாலும் பரவாயில்லை. ‘‘மிக்ஸட் பார்மிங்’’ மூலமாகவும் விவசா யத்தை அபிவிருத்தி செய்யலாம். நீர்ப்பாசனம் சம்பந்தமாக சில வார்த் தைகள் சொல்ல பிரியப்படுகிறேன். நீர்ப்பாசனத் திட்டங்களுக்காக 2 கோடி 86 லட்சம் ரூபாய் ஒதுக்கியிருப்பதாகத் தெரிகிறது. இது நடப்பு ஆண்டிற்கும், 1958–59-ம் ஆண்டில் 1 கோடி 69 லட்ச ரூபாய் செலவு செய்யவும் ஏற்பாடாகி உள்ளது என்று குறிப்பிடப்பட்டுள்ளது. குளங்களைத் தூரெடுக்க பத்து லட்ச ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. சிறு பாசனத் திட்டங்களுக்காக 70 லட்ச ரூபாய் செலவிடப்படும் என்று தெரி கிறது. அதோடு வடி முனைக் கிணறுகள் தோண்டும் திட்டத்திற்காக ஒன்பது லட்ச ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இப்படி ஒதுக்கப்பட்டிருந் தாலும், இது மிகக் குறைந்த தொகை என்று நான் நினைக்கிறேன். பாசனங்களை விருத்தி செய்வதற்கு வழியில்லை என்ற காரணத்தால்

2–30 p.m.

3rd March 1958] [Sri A. R. Subbiah Mudaliar]

இப்படி குறைந்த தொகை ஒதுக்கியிருக்கிறார்களோ என்று வருத்தத் துடன் நினைக்க வேண்டியிருக்கிறது. அநேக திட்டங்கள் " இன்வெஸ்டி கேட் " செய்யப்பட்டும், அவைகளை " அன்ப்ரொடக்டிவ் ஸ்கீம்கள் " என்று ஒதுக்கிவைத்திருக்கிறார்கள். உதாரணமாக, சங்கரன்கோவில் தாலூகாவில் கீரியாறு திட்டம் ஒரு கோடி 36 லட்ச ரூபாய் செலவில் நிறைவேற்றப்பட முடியும் என்று எஸ்டிமேட் போடப்பட்டிருக்கிறது. 20 ஆயிரம் ரூபாய் வரை எஸ்டிமேட் தயார் செய்வதற்குச் செலவு செய்யப்பட்டிருக்கிறது. ஆனால், அதை நிறைவேற்றுவதற்கு எடுத்துக் கொள்ளாததற்குக் காரணம் " அன்ப்ரொடக்டிவ் ஸ்கீம் " என்ற காரணத்தால் ஒத்தி வைத்திருப்பதாகத் தெரிகிறது. பலவிதத்தில் சர்க்காரிடம் முறையிட்டும் அதை இவ்வாண்டில் எடுத்துக் கொண்டதாகத் தெரியவில்லை. நிதி அமைச்சர் அவர்களின் பட்ஜெட் உரையில், மூன்றாவது பாராவில், " திருநெல்வேலி மாவட்டத்தில் குளத்துப் பாசன நிலங்கள் சில நீரின்மையால் பாதிக்கப்பட்டன " என்று குறிப்பிட்டு, அவர்களே ஒத்துக்கொள்கிறார்கள். இம்மாதிரி பாதிக்கப் பட்ட இடம் எங்களுடைய சங்கரன்கோவில் தாலுக்காவும், திருநெல்வேலி ஜில்லாவில் மற்ற சில பகுதிகளும் இருக்கின்றன. அப்படியிருக்க கீரியாறு திட்டத்தை ஏன் எடுத்துக் கொள்ளவில்லை என்பதைப்பற்றி வருத்தத் துடன் தெரிவித்துக்கொள்கிறேன். அத் திட்டம் முக்கியமானதொரு திட் டம். நெடுநாளாகக் கஷ்டப்பட்டு வந்த தொகுதி. அதற்கு வழி செய்ய வில்லை என்று வருத்தத்துடன் தெரியப்படுத்துகிறேன்.

நீர்ப்பாசனங்களில் ஒரு முக்கியமான வழி வகுக்கலாம். கண்மாய்களில் ஊற்றுக்கள் வெட்டி, அவைகளிலிருந்து தண்ணீரை எலெக்ட்ரிக் பம்பு செட்டுகள் மூலமாக விநியோகம் செய்யலாம். அப்படிச் செய்தால், ஒரு எக்கரா, இரண்டு எக்கரா நிலம் வைத்துதிருப்பவர்களுக்கு வசதி செய்ய லாம். அதன் மூலம் உணவு உற்பத்தி செய்வதற்கு ஏதுவாக இருக்கும்.

கால்நடை வளர்ப்பு சம்பந்தமாக நல்ல திட்டங்கள் வகுலிக்கப்பட்டு அந்தத் துறையில் முன்னேற்றம் காணப்படுகிறது. இந்த வருஷம் கூட நான்கு எக்ஸ்டன்ஷன் ஸெண்டர்கள் ஏற்படுத்துவதாகத் திட்டம் இருக்கிறது. அது ரொம்ப வரவேற்கத்தகுந்தது.

அதுபோல் தேசீய விஸ்தரிப்புத் திட்டம் எங்கள் பகுதியில் விரிவாகவும் நன்றாகவும் அமுல் நடத்தப்படுகிறது. ஆனால், அதிலும் சில நிர்வாக ஊழல் இருப்பது எல்லோருக்கும் தெரியும். அதைப்பற்றி கம்யூனிடி டெவலப்மெண்ட் சம்பந்தமான மான்யக் கோரிக்கை வரும்போது விரி வாகப் பேசப் பிரியப்படுகிறேன்.

மின்சாரம் சம்பந்தமாக சில வார்த்தைகள். இவ்வருஷம் ஆயிரம் கிராமங்களுக்குத்தான் மின்சாரம் கொடுக்கப்படும் என்று திட்டம் வகுக்கப் பட்டிருந்தாலும், 910 கிராமங்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. இப் பொழுதிருக்கும் நிலைமையில் 60 ஆயிரம் பம்பு செட்டுகள் இருப்பதாகத் தெரியவருகிறது. இதன்மூலம் 2 லட்சம் எக்கராக்களுக்குப் பாசன வசதி யைப் பெருக்க முடியும் என்று சொல்லப்படுகிறது. இரண்டு லட்சம் எக்கராக்களுக்கு நீர்பாசன வசதி செய்ய மின்சாரம் கொடுக்கக்கூடிய நிலைமையில் நாம் இருந்தும், அந்த வகையில் பலவிதமான சலுகை கொடுப்பதற்கு மின்சார போர்டு தயங்கிக் கொண்டிருக்கிறது. " க்ரூப் ஸிஸ்டம் " என்று அவர்கள் ஏதோ வைத்துக்கொண்டு, விவசாயிகளைப் பாதிக்கக்கூடிய நிலைமையில் அவர்களுடைய போக்கு இருக்கிறது. ஏழா வது மாதத்திலேயே மின்சார போர்டார் பதவியை ஏற்றுக்கொண்டாலும் அதற்குள்ளாக அது ஜனநாயக முறைப்படி நடக்கவில்லை என்று நான் வருத்தத்துடன் தெரியப்படுத்துகிறேன். மந்திரி அவர்களிடம் நாங்கள் முறையிடும்போது, அவர்களும் பச்சாதாபப் படுகிறார்கள். அவர்களால் ஒன்றும் செய்ய முடியவில்லை. காரணம் அந்தப் போர்டு தனிச் சுதந் திரத்துடன் இருக்கக்கூடியது. அதில் தலையிடுவதற்கு யாருக்குமே சுதந் திரம் இருக்காதோ என்ற பயம் இருக்கிறது. " க்ரூப் ஸிஸ்டம் " மூலமாக நாங்கள் ரொம்பக் கஷ்டப்படுகிறோம். இரண்டு லட்சம் எக்கரா பாசனத் திற்கு மின்சார வசதி செய்ய வேண்டுமென்று சர்க்கார் கணக்கிட்டிருக்கும்

[Sri A. R. Subbiah Mudaliar] [3rd March 1958

போது ஒரு லட்சம் ஏக்கரா கூட சாகுபடி செய்ய முடியாத ஒரு நிலை இருப்பது வருந்தத்தக்கது. "இரவு பூராவும் தண்ணீர் இறைத்துக்கொள்ளு வதில் என்ன சிரமம் இருக்கிறது ?" என்று போர்டார் கேட்கிருர்கள். இப்படிக் கேட்பது, விவசாய நடைமுறைகள் தெரியாத ஒரு தன்மையைத் தான் காட்டுகிறது. அந்த நிலைமைக்கு இன்றையதினம் விவசாயிகள் மின்சார போர்டாரிடம் அகப்பட்டுக் கொண்டிருக்கக்கூடிய நிலைமையைக் கண்டு வருந்துகிறோம். அப்படியில்லாமல், இந்த நிர்வாகம் சர்க்கார் தரப்பில் இருக்குமானுல், நாங்கள் மந்திரியிடம் முறையிட்டுக்கொள்ள முடியும். எங்களுக்கு இந்தக் கஷ்டம் எல்லாம் வராது **Duel system** இருப்பது விவசாயிகளுக்குக் கஷ்டமாக இருக்கிறது. மின்சார போர்டு ஜனநாயக ரீதியில் நடக்காமல் இருந்துகொண்டிருப்பதை நான் வருத்தத் துடன் தெரியப்படுத்துகிறேன்.

கைத்தறி விஷயமாகச் சொல்லவேண்டுமானுல், "ரிபேட்" டினுல் பல விதமான நன்மைகள் இருக்கின்றன. கொஞ்சம் ரிபேட் தொகை குறைக் கப்பட்டிருக்கிறது. அதனுல் ஏற்படும் கஷ்டத்தைத் தவிர்க்க மந்திரி அவர் கள் உணர்ந்து நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக்கிருர்கள். இது சம் பந்தமாக மத்திய சர்க்காரிடம் முறையிட்டு, குறைந்த தொகையை மறு படியும் பழைய அளவுக்குக் கூடுதலாக்கினுல், கைத்தறித் தொழில் விருத்தி அடைவதற்கு வாய்ப்பு ஏற்படும் என்று தெரிவித்துக் கொள் கிறேன்.

அடுத்தபடியாக சாலையைப் பற்றிச் சொல்ல வேண்டுமானுல், ஜில்லா போர்டின் நிதி நிலைமை ரொம்பக் குறைவாக இருப்பதால், கிராம ரஸ் தாக்கள் ரொம்பப் பாழடைந்த நிலைமையில் இருக்கின்றன. எங்கள் திரு நெல்வேலி ஜில்லாவில் மார்ச் 1957-ல் முடிவடைந்த வேலைகளுக்கு இன் னும் பணம் கொடுக்காத நிலை இருந்து வருகிறது. ஒதுக்கப்பட்ட தொகை செலவிடப்படாமல் கஷ்டமாக இருக்கிறது. ஜில்லா போர்டார் ஒரு வேலைக்கு டெண்டர் விட்டால் அந்த வேலையை எடுத்துக்கொள்ள ஆட்கள் வருவது கஷ்டமாக இருக்கிறது. 1957 மார்ச்சில் முடிந்த வேலைகளுக்கு 1958 மார்ச் வரை பணம் கொடுக்கப்படாவிட்டால் எப்படி கிராம ரஸ்தாக்களைச் செப்பனிடுவது, எப்படி அவைகளைப் பராமரிப்பது ? ரஸ்தாக்களை காலா காலங்களில் பராமரிக்க முடியாததனுல் அவை பாழடைந்திருக்கின்றன. ஆகையால், கிராமாந்திரப் பகுதிகளில் செலவழிக்கக் கூடுதல் தொகை ஒதுக்குவது நலம் என்றுநினைக்கிறேன். ஒதுக்கப்பட்ட நான்கு கோடி 17 லட்ச ரூபாய் போதாது. உதாரணமாக, ஸ்தல அபிவிருத்தித் திட்டம், கம்யூனிடி டெவலப்மெண்ட் திட்டத்தின் கீழ் செய்யப்படும் திட்டங்களுக்கு குறைவாக தொகை ஒதுக்கப்படுவதால் ரஸ்தாக்கள் ரொம்ப மோசமாக இருக்கின்றன. அவைகளுக்காக கூடுதல் தொகை ஒதுக்குவதுதற்கு வழி செய்தால் நலமாக இருக்குமென்று தெரியப்படுத்துகிறேன்.

சுகாதார, மருத்துவ நிலைமை நம் ராஜ்யத்தில் நல்ல முறையில் இருக் கிறது. வைத்திய அதிகாரிகள் கிராமாந்திரங்களுக்குப் போய் வேலைசெய்வ தற்கு ஊக்கம் அளிக்கும் பொருட்டு, டாக்டர்களுக்கு தனிச் சலுகை கொடுக்கவேண்டும் என்பது நீண்ட நாளாக இருந்துவரும் ஒரு வேண்டு கோள். அது இப்பொழுது நிறைவேறியிருக்கிறது. அவர்களுக்கு தனிச் சலுகை, வீட்டு வசதி, அதிகப்படி அலவன்ஸ் முதலியன செய்து கொடுப்ப தன் மூலம் டாக்டர்கள் கிராமங்களுக்குப்போக வாய்ப்பு ஏற்பட்டு கிராமாந் திரங்களிலுள்ள மக்களுக்கு சுகாதார வசதி ஏற்படுவதற்கு அனுகூலமாக இருக்கும். வைத்திய அதிகாரிகளுக்கும், ஹெல்த் ஆபீசர்களுக்கும் இத் தகைய வசதிகள் இருப்பது அவசியம் என்று நான் நினைக்கின்றேன்.

புதிய வரிகளைப்பற்றி சில வார்த்தைகள், சொல்லப் பிரியப்படுகிறேன். டீசல் எண்ணெய்க்கு வரியானது பத்து நயா பைசாவிலிருந்து 35 நயா பைசாவாக உயர்த்தப்பட்டிருக்கிறது. இது வரவேற்கக்கூடியதுதான். ஆனுல், விவசாயம் சம்பந்தப்பட்டமட்டில் இந்த வரியிலிருந்து விதி விலக்கு கொடுப்பது நலம் என்று நான் நினைக்கிறேன். விவசாயிகள் உற்பத்தியை

அதிகரிக்க வேண்டும் என்று ஒரு பக்கம் சொல்லிக்கொண்டிருக்கும்போது, அதற்கு உபயோகமாக இருக்கக்கூடிய டீசல் எண்ணெய்க்கு அதிக வரி போடுவது சரியல்ல. விவசாயத்திற்கு மட்டும் இவ்வரியிலிருந்து விலக்கு அளிப்பதினால் நிர்வாகக் கஷ்டம் ஏற்பட்டுவிடும் என்று சர்க்கார் நினைக்க லாம். அப்படி ஒன்றும் கஷ்டம் இல்லை. விவசாயம் சம்பந்தப்பட்டமட்டில், ஒரு டீசல் இன்ஜின் ஒரு நாளைக்கு எத்தனை மணி நேரம் ஓடும், அதற்கு இவ்வளவு காலன் எண்ணெய் செலவாகும் என்பது எல்லோருக்கும் தெரிந்ததே. மழை காலத்தைக் கழித்துக்கொண்டு, கோடை காலத்தை மட்டும் கணக்கெடுத்துக்கொண்டு, இத்தனை காலன் செலவாகுமென்று மதிப்பிட்டு, பர்மிட் கொடுத்துவிட்டால் விவசாய அபிவிருத்திற்கு நன்மை செய்ததாகும் என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

விவசாய வருமான வரி விதிக்கப்பட்டிருக்கிறது. அதையும் ஓரளவு நான் வரவேற்கிறேன். ஆனால், சென்ற வருஷம்தான் பல வரிகள் விதிக்க சட்டம் செய்யப்பட்டிருக்கும்போது, அதனால் ஏற்பட்டுள்ள நன்மை தீமைகள் என்ன, அதனால் நடைமுறையில் என்ன என்ன கஷ்டங்கள் ஏற்பட்டன, என்பதை விவசாயிகளும் நிலச்சுவாந்தார்களும் இன்னும் தெரிந்துகொள்ள முடியாத நிலைமையில் இருக்கும்போது அடுத்த சுமையை நிலச்சுவாந்தார்களுக்குவைப்பது ரொம்பவும் வருந்தத்தக்கது.

இதற்குப் பதிலாக, வேறுவிதமாக வரி போட்டிருக்கலாம். விற்பனை வரியைபோல், உற்பத்தி செய்யக்கூடியதற்கேற்ப மூட்டைக்கு இவ்வளவு என்று உற்பத்தி வரி (**Production tax**) போட்டிருந்தால், இவ்வளவு அசௌகரியம் ஏற்படாது. சர்க்கார் கொண்டுவர உத்தேசித்திருக்கும் வரியி லிருந்தும் அனேகர் தப்பித்துக் கொள்ள வழி செய்வார்கள். அதனால் சர்க்கார் எதிர்பார்க்கக்கூடிய நிதி கிடைக்காமல் போகலாம். ஆகவே, இதற்குப் பதிலாக உற்பத்தி வரி விதிக்கலாம். சாதாரணமாக உங்களுக்குத் தெரியும்: தஞ்சை ஜில்லாவிலிருந்து நெல் அனுப்ப வேண்டி யிருந்தால், ஏதோ ராமசாமி, சுப்பையா என்று உற்பத்தி செய்கிறவர் களுடைய பெயரைப் போட்டு, அவர்கள் அனுப்பியதாக அனுப்புகிறார்கள். ஏன் இப்படிச் செய்யப்படுகிறதென்றால், உற்பத்தி செய்கின்றவர்கள் அனுப் பினால், அதற்கு வரி இல்லை. அம்மாதிரி யெல்லாம் ஏமாற்றக்கூடிய நிலைமை ஏற்படுகிறது. ஆகவே, உற்பத்தி பண்ணக்கூடிய தானியங்களுக்கு வரி விதிக்கக்கூடிய நிலைமையில் வரிவிதிப்பு முறை இருந்தால் சர்க்கார் எதிர்பார்க்கக்கூடிய வரி வரும். பட்ஜெட்டில் ஒன்றரை கோடி ரூபாய் துண்டு விழுவதைச் சரிக்கட்ட இந்த வரி விதிக்கப் போவதாகத் தெரிய வருகிறது. ஆனால் பட்ஜெட்டை அலசிப் பார்க்கும்போது குறைந்த வரு வாய் செலவு கூடுதலாகத் தரப்பட்டிருக்கிறது. பட்ஜெட் தயாரிப்பதற்கு வரி போட வேண்டியது அவசியமா என்ற ஐயம் ஏற்படுகிறது. உதாரணமாக 50 லட்சம் ரூபாய் ஜமீன் ஒழிப்புக்காகக் கொடுக்கவேண்டுமென்று இருக் கிறது. போன வருஷம் 10 லட்சம் ரூபாய் தான் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இவ்வாண்டு திடீரென்று 50 லட்சம் அந்த இனத்தில் காட்டப்படவேண்டிய அவசியம்தான் என்னவென்று தெரியவில்லை. வரியைப் போடுவதற் காகத்தான் இந்த மாதிரியாகக் காட்டியிருக்கிறார்களோ என்று எண்ண வேண்டியிருக்கிறது. மிகவும் கஷ்டமான இந்தச் சமயத்தில், உற்பத்தியை அதிகப்படுத்த வேண்டும் என்பதாக எல்லாவிதமான ஏற்பாடுகளையும் செய்து வரும் இந்தச் சமயத்தில், ஏற்கெனவே வரிச் சுமை அதிகமாக இருக்கும் இந்தச் சமயத்தில் எதற்காக வரியை அதிகப்படுத்த வேண்டும் என்பதை யோசித்துப் பார்க்கவேண்டும். வருமான வரி 3,000 ரூபாய் க்குமேல் என்று வைத்திருப்பதை 5,000 ரூபாயாக்குவது எவ்வளவு பெரிய நலம் என்று நினைக்கிறேன். இத்துடன் சிக்கன வாழ்விலும் வரவை கூட்டலாம். சிக்கனம் செய்வதற்கு ஸ்பெஷல் ஆபீசர் நியமிக்கப் படுவதாகத் தெரிகிறது. சிக்கனத்தை உத்தியோக முறையில் குறைப்ப தற்கு தயாராக மாட்டார்கள். இதற்காக ஒரு குழு நியமிக்கப்பட்டிருக்கிறது. அபிஷியல், நாண்அபிஷியல் என்று போட்டு இந்தக் கமிட்டியில் என்ன முடிவுவரும் என்று பயப்படுகிறேன். உதாரணமாக நான் சிக்கனத்தை எந்த முறையில் செய்வதற்கு வசதி இருக்கிறது என்பதைச் சுட்டிக் காட்ட

2–40 p.m.

முடியும். சங்கரன்கோயிலை எடுத்துக் கொண்டால் பிளாக் ஏற்படுத்தப் பட்டிருக்கிறது. அங்கே ஒரு தாசில்தார், ஹெட் குவார்டர் டெபுடி தாசில் தார் இருக்கிறார்கள். இவர்கள் என்ன வேலை செய்கிறார்கள் என்பது எனக்குத் தெரியவில்லை. தென்காசியை எடுத்துக் கொண்டால் அங்கே பிளாக் ஏற்படவில்லை. அதனால் அங்காவது வேலை இருக்கும். இங்கே ஒரு இடமும் பாக்கியில்லை. பிளாக் ஆக்கிவிட்டார்கள். ரெவின்யூ வேலை யைத் தவிர வேறு வேலை எதுவுமே இல்லை. அப்படியிருக்கும்போது அதிகமான சிப்பந்திகளை வைத்திருப்பதனால் செலவுதான் ஜாஸ்தியாக ஆகிறது. அதே மாதிரி யுத்த காலத்தில் ஒரு கலெக்டருக்கு இரண்டு பி.ஏ. வைக்கப்பட்டிருந்தது. இப்போது யுத்த காலம் இல்லை. எதற்காக அதுமாதிரியான வீண் செலவு. ஒரு ஜீப் இருந்தால் போதும் என்று சொல்லக்கூடிய இடங்களுக்கு நான்கு ஜீப் கொடுக்கப்பட்டிருக்கிறது. குறைந்தது இரண்டு ஜீப்புக்கு ஆகும் செலவையாவது குறைக்கலாம். இப்படி பலவகையில் சிக்கனத்திற்கு இடமிருக்கிறது என்பதை சர்க்கா ருடைய கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன்.

அடுத்தபடியாக நெல் சம்பந்தமாக ஸோனல்லிஸ்டத்தை ஒத்துக் கொள்கிறோம். வரவேற்கிறோம். ஒவ்வொரு இடத்திலும் எவ்வளவு டெபிஸிட் இருக்கிறது என்பதைக் கணக்கிட்டு அதற்கு ஏற்றபடி நெல் அனுப்பிவிட்டால் விலையேற்றம் இராது. அதோடு லாரி லாரியாக ரோடு களில் நெல் மூட்டைப் போய்க் கொண்டிருப்பதை இரவு 7 மணிக்குமேல் ரோடில் போய் நின்று கொண்டிருந்தால் பார்க்கலாம். அதற்கு ஒரு கணக்கும் இல்லை. கேரளாவுக்கு மிக அதிகமாகப் போய்க் கொண் டிருக்கிறது. ரோடு மூலமாகப் போவதுதான் மிகவும் ஜாஸ்தியாக இருக் கிறது. அதற்குக் கணக்கு எடுக்கவில்லை. நான் தென்காசிக்குப் பக்கத் தில் இருப்பதால் இதுபற்றிய விஷயம் தெரியும். அந்தப் பக்கத்திலுள்ள தானியம் வெளியே போய்விடுவதால் அங்கே தானிய விலை உயர்ந்து விடுகிறது. அதைக் கட்டுப்பாடு செய்ய ஏதாவது ஏற்பாடு செய்தால் நலம் என்று நினைக்கிறேன். "சுபீட்சத்திற்குக் குறுக்கு வழி கிடையாது. எல்லோரும் உழைக்கவேண்டும். எல்லோரும் பாடுபடவேண்டும்" என நிதி அமைச்சர் அவர்கள் எச்சரிக்கை கொடுத்திருக்கிறார்கள். அதை வரவேற்கிறேன். செலவிடக் கூடிய பணத்தில் பாதியாவது விவசாயி களுடைய நன்மைக்காகப் போகவேண்டும். அப்போது தான் நாட்டில் சுபீட்சம் ஏற்படும். அப்போதுதான் நாடு முன்னேறும் என்பதையும் தெரியப்படுத்திக் கொண்டு என் பேச்சை முடித்துக் கொள்கிறேன்.

12–47 p.m. **SRI V. K. KOTHANDARAMAN** : கனம் தலைவர் அவர்களே, இது வரையில் இல்லாத அளவுக்கு இந்த ஆண்டில் நமது நிதி அமைச்சர் அவர்கள் சுற்றுச்சார்பில் இருக்கக்கூடிய சூழ்நிலைகளை அனுசரித்து நாம் எதிர்பார்க் கக்கூடிய அளவுக்கு பட்ஜெட்டைத் திருப்திகரமாக தயாரிக்க வில்லையென்று சொன்னாலும்கூட ஒரு சிறிய மாறுதலோடு கொண்டு வந்திருக்கிறார். அது நாம் வரவேற்கக் கூடிய விஷயம் தான். அதே நேரத்தில் அதில் உள்ள குறைபாடுகளையும் நாம் அவசியம் கண்டு எடுத்துச் சொல்ல வேண் டியவர்களாக இருக்கிறோம். ஒரு குறிப்பிட்ட இடங்களைத் தவிர மற்ற எல்லா இடங்களிலும் பருவ மழை தப்பிவிட்டது. ஐந்து முதல் 50 சத விகிதம் வரை குறைந்து விட்டது. 1956-ம் ஆண்டிலே 377 ஆக இருந்த விலைவாசிப் புள்ளிவிவரம் இப்போது 512 ஆக உயர்ந்திருக்கிறது. அப் படி இருந்தாலும் நம்முடைய ராஜ்யத்திற்கு எந்த அளவு உணவுப் பொருள் தேவையோ அந்த அளவுக்கு உற்பத்தி செய்யப்படுகிறதாகச் சொல்கிறார்கள். ஆனால் எந்த அளவுக்கு விலைவாசி உயர்ந்திருக்கிறதோ அந்த அளவுக்கு தொழிலாளர்களுடைய விவசாயிகளுடைய ஊதியம் உயரவில்லை. வாழ்க்கைப் புள்ளிவிவரம் உயர்ந்திருக்கிறது.

(கனம் ஸ்ரீ ஸி. சுப்பிரமணியம் : உணவுப் பொருள்களை பொறுத்த அளவில்தான் அந்தப் புள்ளி விவரம்.) அப்படியே எல்லாப் பொருள்களுடைய விலைவாசிகள் உயர்ந்திருக்கிறது என்பதை ஒப்புக்கொள்கி றோம். அந்த அளவுக்கு வாழ்க்கை ஊதியம் தொழிலாளர்களுக்கோ,

3rd March 1958] [Sri V. K. Kothandaraman]

இதர சிப்பந்திகளுக்கோ உயர்ந்திருக்கிறதா என்ருல் இல்லே. இது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். உணவுப் பொருள்கள் அதிகப் படுத்தப்பட்டிருக்கிறது, கூடுதல் உற்பத்தி செய்திருக்கிறேம் என்று சொன்னுலும் உணவுப் பொருள்களின் விலேவாசி குறைந்திருக்கிறதா என்று பார்ப்போமேயானுல் விலேவாசி உயர்ந்து கொண்டுதான் போகிறதே ஒழிய குறையக் காணவில்லே. அப்படி விலேவாசிகள் உயர்ந்து கொண்டு போகக்கூடிய நேரத்தில் நியாயவிலேக்கடைகள் எல்லாம் மூடப்படுகிறது. குறைந்த விலே இருக்கிற நேரத்தில் இருந்த நியாய விலேக் கடைகளில் பாதிகூட இப்பொழுது கிடையாது. ஏன் 25 சத விகிதம்கூட கிடையாது. பூராவும் மூடக்கூடிய அளவிற்குத்தான் இன்றைய நிலே இருக்கிறது என்றுகூட சொல்லலாம். விலேவாசி குறைவாயிருக்கும்போதுதான் நியாயவிலேக் கடைகள் திறப்போமே தவிர விலேவாசி அதிகமாக இருக்கிறபோது நியாயவிலேக் கடைகள் திறக்க நாங்கள் தயாராகவில்லே என்பதுதான் அரசாங்கத்தின் கொள்கையாக இருக்கிறது என்றுதான் நாம் நினேக்க வேண்டியிருக்கிறது. அடுத்தபடி, விதைப் பண்ணேகள். இன்றைய தினம் ஓரளவிற்கு விதைப் பண்ணேகள் தாலுகா வாரியாக ஏற்படுத்தி வருவதை நான் பாராட்டுகிறேன். அதற்கேற்றவாறு உரம் விவசாயத்திற்கு தேவை என்பதால உரம் உற்பத்தியை அதிகப்படுத்த ஒன்றுமே செய்யக் காணும். ஆகவே, உர உற்பத்தியை அதிகப்படுத்த வேண்டும். அடுத்தபடி, நீர்பாசனம். இன்றைக்கு நம் ராஜ்யத்தில் எத்தனே ஆறுகள் இருக்கிறதோ, இன்னும் எங்கெங்கெல்லாம் இயற்கை வளம் இருக்கிறதோ அங்கெல்லாம் கட்டி முடித்து விட்டோம். இனி இயற்கை வளம் இல்லே. ஆகவே, மேலும் கட்டுவதற்கு வாய்ப்பு இல்லே என்று சொல்லப்படுகிறது. குறிப்பாக வட ஆற்காடு ஜில்லாவில் 1931-ம் ஆண்டு முதல், வெள்ளேயன் 1931-ம் ஆண்டிலே மோர்தாண டாம் கட்ட திட்டம் போடப்பட்டது. 1954-ல் இன்று நமது முதல் அமைச்சராய் இருக்கக்கூடிய காமராஜ் நாடார் அவர்கள் குடியாத்தம் தொகுதியில் தேர்தலுக்கு நின்றபோது, அங்கு சீப் என்ஜினியர் முதற்கொண்டு புடை சூழ அங்கு வந்து அதை பார்த்து விட்டு 75 லட்சம் ரூபாய்க்கு ஒரு எஸ்டிமேட் போடப்பட்டது. அதற்குப் பிறகு 30 லட்சமாகவோ 40 லட்சமாகவோ குறைக்கப்பட்டது என்று கேள்விப்படுகிறேன். இப்பொழுதும் அது நிறைவேற்றப்படவில்லே. இப்பொழுது கட்டப்பட்டிருக்கக் கூடிய எல்லா நீர்பாசனங்களே விட இயற்கை வளம் பொருந்திய ஒரு இடமாகும் அது. ஆகவே, அந்த இடத்தில் இது கட்டப் படவில்லே என்ருல் அதற்குக் காரணமென்ன ? அங்கு கம்யூனிஸ்டு வெற்றி பெற்று விட்டார் என்பதா காரணம் ? அதற்காக கட்டக் கூடாதா ? அதற்காக வேண்டித்தான் அது கட்டப்படவில்லே என்று நீங்கள் ஒப்புக்கொண்டாலும் அதை வரவேற்கிறேன். இயற்கை வளம் இல்லாததால் அது கட்டப் படவில்லே என்று சொன்ருல் அதை நான் ஒப்புக் கொள்ள முடியாது. பாலாற்றில் தண்ணீர் தேக்கம் கட்ட வேண்டுமென்று பல ஆண்டுக்காலமாக கேட்டு வரப்படுகிறது. அதில் எந்தளவு கவனம் செலுத்தப்படுகிறது ? ஆகவே, அதை உடனடியாக நிறைவேற்ற வேண்டுமென்று நான் இந்த சந்தர்ப்பத்தில் வலியுறுத்திக் கூற ஆசைப்படுகிறேன். இன்று பப்ளிக் செக்டரில், நெய்வேலி திட்டத்தைப் பற்றி இதில் கூறப்பட்டிருக்கிறது. அது, விரைவில் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் முடிவு பெறுவதற்குள்ளாக அது முடிவு பெறும் என்று கூறப்பட்டிருக்கிறது. சந்தோஷம். நெய்வேலித் திட்டத்திற்காக வேண்டி பல கிராமங்களில் இருக்கக்கூடியவர்களின் வீடுகளேயும், அவர்களின் நிலங்களேயும் அந்தத் திட்டத்திற்காக வேண்டி எடுத்துக் கொள்கிருர்கள் சர்க்கார். அப்படி எடுக்கக்கூடிய நேரத்தில் அதற்குள்ள கிரயத்தை கொடுத்துவிட்டு அவைகளே எடுக்க வேண்டும். அதற்குப் பதிலாக அவர்களுக்கு, ஏக்கர் ஒன்றிற்கு 250 ரூபாய் என்று மதிப்பிட்டு அவர்களுக்கு அவைகளே காலி செய்யும்படி நோட்டீஸ் அனுப்பி வைத்திருக்கிருர்கள். அவர்களும் பதில் நோட்டீஸ் கொடுத்திருக்கிருர்கள். நாங்கள் காலி செய்ய முடியாது. ஏக்கருக்கு 250 ரூபாய் என்று சொல்வது சரியல்ல. அது மட்டுமல்ல. அதே பிரதேசத்தில், சமீபத்தில் இச் சட்டசபையில் இருக்கக்கூடிய அங்கத்தினர் வாகீஸம் பிள்ளே, எம்.எல்.ஏ. அவர்கள் ஏக்கர் ஒன்றுக்கு 5,500

2-50 p.m.

ரூபாய்க்கும், பாரி அணட் கம்பெனியார் செண்ட்க்கு 100 ரூபாய் என்று ஏக்கர் ஒன்றுக்கு 10,000 என்றும், என்.எஸ்.கே. நாடார் ஏக்கர் ஒன்றுக்கு 10,000 வீதமும் வாங்கியிருப்பதாக கேள்விப்படுகிறோம்.

**Sri G. VAGHEESAM PILLAI** : ஏக்கருக்கு 5,500 ரூபாய் வாங்கி இருப்பதாகச் சொல்லுவது உண்மையா ?

**Sri V. K. KOTHANDARAMAN** : சப் ரிஜிஸ்தர் ஆபீஸில் சென்று பார்த்தால் தெரியும். இல்லாவிட்டால் 2,000-க்கோ 3,000-க்கோ வாங்கியிருப்பதாகச் சொல்லுங்களேன்.

**The Hon. Sri C. SUBRAMANIAM** : கல்லைத் தூக்கிப் போட்டு விட்டு இல்லையென்றால் ? நீங்கள் சொல்லுவது தவறு என்று அவர்கள் சொல்கிறார்கள். இது, கிராஸ் எக்ஸாமினேஷனா ?

**Sri V. K. KOTHANDARAMAN** : நீங்கள் எத்தனையோ கல்களைத் தூக்கிப் போட்டுக்கொண்டிருக்கிறீர்கள். அதற்குப் பதில் இல்லை. அப்படி வாங்கியிருப்பதாக நாங்கள் கேள்விப்படுகிறோம். சப் ரெஜிஸ்தரார் ஆபீஸில் போய் வெரிபை செய்தால் தெரியும். ஏக்கர் ஒன்றுக்கு 250 ரூபாய் தருகிறோம். காலி செய்து விடுங்கள் என்று சொல்லி, அவர்கள் காலி செய்யாததால் புல்டோஸர்களைக் கொண்டு கட்டிடங்களை இடித்துவிட முற்பட்டிருக்கிறார்கள். அதே போல் அங்குள்ள தொழிற்சங்கத்திற்கும் நோட்டீஸ் கொடுக்காமல் 5 நிமிஷத்தில் அதைக் காலி செய்துவிட்டு வெளியேற வேண்டுமென்று சொல்லப்படுகிறது. ஐந்து நிமிஷத்தில் எப்படி வெளியேற முடியும் என்று சொன்னபோது அந்தத் தொழிற்சங்கக் கட்டிடத்தின் கதவை உடைத்து அங்குள்ள ரிக்கார்டுகளை எடுத்து வீதியில் போட்டுவிட்டு அந்தக் கட்டிடத்தை இடித்து நிரவியிருக்கிறது போன 26-ம் தேதி என்பதை நான் இச்சந்தர்ப்பத்தில் கனம் அமைச்சர் அவர்களின் ஞாபகத்திற்கு கொண்டுவர விரும்புகிறேன். இதைச் சற்று சிந்தித்துப் பார்க்க வேண்டும். அடுத்தபடி சிறு தொழில்களுக்காக வேண்டி, பண உதவி செய்யப்படுகிறது என்று இருக்கிறது. சந்தோஷம். அதையும் நான் வரவேற்கிறேன். ஆனால் இந்த ராஜ்யத்தில் இருக்கக் கூடிய ஒரு மைனாரிட்டி இனத்தைச் சேர்ந்த முஸ்லீம் சகோதரர்கள் நடத்தக் கூடிய தோல் ஷாப் டானரிக்காக அவர்கள் கடன் கேட்டிருக்கிறார்கள். ஆனால் இது வரையில் கொடுக்கப்படவில்லை. அக்காரணத்தால், பம்பாய் ராஜ்யத்தில் இருந்து அவர்களுக்கு லெட்டர் எழுதியிருக்கிறார்கள். நீங்கள் அந்தத் தொழிலை இங்கு ஆரம்பித்தால் 50 சத விகிதம் சப்ஸிடி, இலவசமாகக் கொடுக்கிறோம் என்று எழுதியிருக்கிறார்கள். பணத்திற்கு ஆசைப்பட்டு இவர்கள் பம்பாய்க்குப் போனால் இங்குள்ள நிலைமை என்ன ? வேலை இல்லாத் திண்டாட்டம் இங்கு மேலும் தலை விரித்தாடும் என்பதை நாம் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். சிறு தொழில்களுக்கும், மைனாரிடிகளுக்கும் பாதுகாப்பு கொடுப்போம் என்று கவர்னர் உரையிலும் சொல்லப்பட்டது. அடுத்தபடி, கால்நடை செல்வம், அதற்காக வேண்டி பணம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. வரவேற்கிறேன். கால்நடைச் செல்வத்தை எதற்காக வளர்க்கிறோம். மைசூரில் இன்று மாடுகளைக் கொலை செய்வதில்லை. ஆகையால் இந்த ராஜ்யத்தில் ஆயிரக் கணக்கில் மாடுகளைக் கொலை செய்து இறச்சியாக வட ஆற்காடு ஜில்லா ஜோலார்பேட்டை ரெயில்வே ஸ்டேஷனில் தினந்தோறும் ஏற்றுமதி செய்யப்படுகிறது. அதைத் தடுக்காமல் கால்நடைச் செல்வத்தை அபிவிருத்தி செய்கிறோம், அதற்காக நாங்கள் ணம் ஒதுக்குகிறோம் என்று சொன்னால், அவைகளை வளர்த்து சாப்பிடுவதற்காகவா செய்கிறோம். அதை நாம் யோசிக்க வேண்டி இருக்கிறது. ஆகவே அப்படி கொலை செய்து ஏற்றுமதி செய்வதை தடை செய்ய வேண்டுமென்று நான் இந்த சந்தர்ப்பத்தில் கேட்டுக் கொள்கிறேன். அடுத்தபடியாக காடு அபிவிருத்தி. காடு அபிவிருத்தி சம்பந்தமாக, முந்திரி, சௌக்கு, தீக்குச்சி, வாட்டில் போன்றவைகளை அபிவிருத்தி செய்ய சர்க்கார் ஏற்பாடு செய்துள்ளது. அதோடுகூட இந்த ராஜ்யத்தில் லட்சக் கணக்கில் பீடி தொழிலாளர்கள் இருக்கிறார்கள்.

3rd March 1958] [Sri V. K. Kothandaraman]

அந்த பீடி தொழிலுக்கு அவசியமானது, பீடி இலை. அந்த பீடி இலையை இன்றையதினம் ஹைதராபாத்திலிருந்தும், ஆந்திராவிலும் இருந்துதான் வரவழைக்கப்படுகிறது. ஆகவே நாம் பீடி இலை உற்பத்தி செய்வதில் அதிகம் கவனம் செலுத்த வேண்டும். அடுத்தபடி மின்சாரம். எனக்கு முன் பேசிய என் ஜில்லா அங்கத்தினர்கூட சொன்னார். இதற்கு முன் ஒரு மாகாணத்தில்கூட 800 பம்ப் செட்டுகள் இருந்தது கிடையாது. இப்பொழுது ஒரு தாலுகாவில் 800 வந்துவிட்டது என்றார். காவேரி ஆறு போன்ற மற்ற தண்ணீர் வசதி இருக்கின்ற இடங்களில் பம்ப் ஸெட்கள் போட வேண்டிய அவசியம் இல்லை. தண்ணீர் வசதி இல்லாத மோசமான பிரதேசங்களில்தான், வீட்டை அடகு வைத்து நிலத்தை அடகு வைத்து, பம்ப் ஸெட் போட்டிருக்கிறார்கள். அப்படி ஸெட் போட்டிருந்தும் தண்ணீர் இருக்கிறதா ? ஏற்கனவே 10 ஹார்ஸ் பவர் போட்டிருக்கிறவர்கள், ஐந்து ஹார்ஸ் பவர் போதும் என்கிறார்கள். அதற்கு விதிவிலக்கு இல்லை. ஆக, நான் சொல்லுவது விவசாயம் அபிவிருத்தி அடைய வேண்டுமானால், மின்சார சார்ஜை குறைக்க வேண்டும். எந்த அளவு மின்சாரத்தை உபயோகப்படுத்துகிறார்களோ, அந்த அளவிற்குத்தான் அவர்களிடம் இருந்து சார்ஜ் வசூலிக்க வேண்டும். அவர்கள் பம்ப் ஸெட் வேண்டியதில்லை என்று சொன்னாலும்கூட அவர்களுக்கு விதிவிலக்குக் கொடுப்பதில்லை. இன்று கரும்பாலை ஓட்டுவதற்கு, வெல்லம் உற்பத்தி செய்வது பகல் நேரத்தில்தான். கரும்பாலைகளுக்கு இரவு நேரத்தில்தான் மின்சாரம் கொடுப்பதால் அவ் விவசாயம் பாதிக்கப்படுகிறது. ஆகவே, பகல் நேரத்தில் அதற்கு மின்சாரம் கொடுக்க வேண்டுமென்று நான் இந்தச் சந்தர்ப்பத்தில் கேட்டுக்கொள்ளுகிறேன்.

(Mr. Speaker in the Chair)

கைத்தறி நெசவுத்தொழிலாளர்களைப்பற்றி இந்த நேரத்தில் சொல்லாமல் இருக்க முடியாது. அவர்களுடைய நிலையைப் பற்றி மத்திய சர்க்காருக்கு சிபாரிசு செய்திருக்கிறோம், என்றெல்லாம் இந்த அரசாங்கம் சொல்லுவது ஏதோ எதிர் கட்சி அங்கத்தினர்களை திருப்தி செய்வதற்கு மாத்திரம்தான் ஆகுமே தவிர உண்மையிலே கைத்தறி நெசவாளர்களை வாழ வைக்க வேண்டுமென்றுள்ள எண்ணம் இந்த சர்க்காருக்கு இருப்பதாக தெரியவில்லை. அதற்காக மத்திய சர்க்காரிலிருந்து போராடி அவர்களுடைய குறைகளை நீக்கி தொடர்ந்து ரிபேட் கிடைப்பதற்கு வழி செய்யவில்லை. இவ்விதம் கைத்தறி நெசவுத்தொழிலாளர்களுடைய நிலைமை மோசமாகிக் கொண்டே போகிறது. நூல் இன்றைக்கு அதிக விலையாக இருக்கிறது. அவை குறைந்த விலையில் கிடைக்க வழி செய்யவேண்டும். அடுத்ததாக கல்வியை எடுத்துக் கொண்டால், அந்த மான்யம் வரும்பொழுது விவரமாக என் அபிப்பிராயத்தைச்சொல்லுகிறேன். இப்போது குறிப்பாக சொல்லுவது என்னவென்றால் பெண்களுக்கு அதிகமான அளவில் கல்வி பெற வசதி செய்து கொடுக்கவேண்டும். 200 ரூபாய்க்கு குறைவான வருவாய் உள்ள குடும்பத்தில் உள்ள பெண்களுக்கு இலவசமாக கல்வி பயிலுவதற்கு வசதி செய்து கொடுக்க சர்க்கார் முன் வரவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். அது போன்று பாலிடெக்னிக் 15 லட்சம் ரூபாய் செலவில் வட ஆற்காடு ஜில்லாவில் ஏற்படுத்துவதற்காக முயற்சி நடந்தது. இதைப் பற்றி பிளானிங் கமிட்டி ஏகமனதாக தீர்மானம் போட்டு சர்க்காருக்கு அனுப்பி வைத்திருக்கிறது. இதற்கிடையில் இதை வேறு ஏதோ ஒரு ஜில்லாவுக்கு மாற்றப் போவதாகவும் கேள்விப்படுகிறேன். தயவு செய்து இவ்விதம் மாற்றாமல் பின் தங்கியிருக்கிற வட ஆர்காடு ஜில்லாவிலேயே ஏற்படுத்த வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அடுத்ததாக ஹரிஜனங்களுக்கு ஒதுக்கிருக்கக்கூடிய பணம் போதாது என்பதுதான் என் அபிப்பிராயம். மேலும் கூடுதலாக பணம் ஒதுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அதோடு ஒதுக்கப்படுகிற பணம் காலாகாலத்தில், குறிப்பிட்ட நேரத்தில் அந்த மக்களுக்கு போய் சேருகிறதா என்பதை பார்த்தால் அவ்விதம் சரியான காலத்தில் போய் சேருவது கிடையாது. குறிப்பாக மாணவர்களுக்கு கிடைக்கக்கூடிய பணம், புஸ்தகத்திற்காக ஒதுக்கப்படுகிற பணம், வேறு பல வழிகளிலும் ஒதுக்கப்படுகிற பணம் மாணவர்களுக்கு பள்ளிக்

3-00 p.m.

கூடத்தில் சேர்ந்து ஆறு மாதத்திற்கு பின்னால்தான் போய் சேருகிறது இந்த நிலைமையை பார்க்கிற பொழுது இவர்கள் முன்னேறுவதற்காக இந்த பணம் ஒதுக்கப்படவில்லை என்று தான் நினைக்க வேண்டியிருக்கிறது. இவ்விதம் மாணவர்கள் இதனால் தோல்வியடைகின்ற காரணத்தை வைத்துக்கொண்டு மேற்கொண்டு கொடுக்கக்கூடிய பணத்தை நிறுத்தி விடக்கூடிய நிலைமை வந்து விடும். ஆகவே தயவு செய்து இவர்களுக்கு கொடுக்கப்படுகிற பணத்தை பாடசாலை திறந்து முதல் மாதத்திலேயே கொடுத்து விடவேண்டும் என்றும் கேட்டுக்கொள்கிறேன. இன்றைக்கு உணவு பிரச்னையை எடுத்துக்கொண்டால் விவசாயம் எந்த அளவிற்கு இருக்கிறது என்று பார்த்தால், இன்றைக்கு உணவுப்பிரச்னை தீரவேண்டுமெனில் நிலச் சீர்திருத்தத்தை கொண்டுவருவதின் மூலமாகத்தான் தீர்க்கமுடியுமே தவிர வேறு ஒரு விதத்திலும் தீர்க்க முடியாது என்பது என் அபிப்பிராயம். சர்க்கார் உச்ச வரம்பு கட்டப்போகிறது என்று சொல்லப்படுகிறது. இன்னும் நிலச் சீர்திருத்தச்சட்டம் கொண்டுவருவதற்கு எவ்வளவு காலம் ஆகுமோ என்று பலர் நினைக்கிறார்கள். அவ்விதம் நினைக்கின்ற அளவுக்கு இன்று அரசாங்கத்தின் போக்கு இருக்கிறது. ஆகவே உடனடியாக நிலச் சீர்திருத்தச்சட்டத்தை கொண்டு வரவேண்டும். அதோடு சர்க்காருக்கு சொந்தமான தரிசு நிலங்களை ஏழை விவசாயிகளுக்கு கொடுப்பதற்கு முன் வரவேண்டும். கடந்த தடவை நடந்த பட்ஜட் கூட்டத்தில் இதைப் பற்றி தீர்மானம் கொண்டுவந்தபொழுது இதை ரெவின்யூ மான்யம் வரும்பொழுது அதன் மீது பேசிக்கொள்ளலாம் என்றும் இதை மூன்று மாதத்திற்குள் கவனித்து விடுகிறோம் என்றும் சொல்லப்பட்டது. இப்போது அடுத்த ஒரு ஆண்டும் கழிந்து விட்டது. இப்பொழுதும் இந்த பட்ஜெட்டில் நிலச் சீர்திருத்தத்தைப்பற்றி ஒன்றுமே சொல்லப்படவில்லை என்று சொன்னால் அது மிகவும் வருத்தப்பட வேண்டிய நிலைமையாகும் என்பதை தெரிவித்துக்கொள்ளுகிறேன். ஆகவே தயவு செய்து உடனடியாக நிலச் சீர்திருத்தம் கொண்டுவந்து அதன் மூலம் உணவுப் பிரச்னையை சரிக்கட்டுவதற்கு வழி செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அப்பொழுதுதான் குறைந்த விலையில் உணவுப் பொருள்கள் கிடைக்க முடியும். அப்போதுதான் பஞ்சப் படி உயர்வு, சம்பள உயர்வு இந்தப் பிரச்னைகளுக்கெல்லாம் இடமில்லாத அளவுக்கு ஒரு நல்ல சூழ்நிலையை உண்டுபண்ண முடியும் என்பதை இந்த சந்தர்ப்பத்தில் சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன். அதே போன்று டி. டி. கிருஷ்ணமாச்சாரி அவர்களைப் பற்றி நிதி அமைச்சர் அவர்கள் தனது பட்ஜெட் உரையில் பிரமாதமாக போற்றிப் புகழ்ந்திருக்கிறார்கள். பார்லிமெண்டில் ஜவஹர்லால் நேரு அவர்களினாலும் காலஞ்சென்ற ஆசாத் அவர்களினாலும் நிலைமை தெளிவாக்கப்பட்டிருந்தும்கூட சாக்ளா ஜட்ஜின் விசாரணையின் முடிவால் ராஜிநாமாவை ஏற்றுக்கொள்ளக் கூடிய நிலைமை ஏற்பட்டும் கூட இப்போது மீண்டும் அவரைப் பற்றி மிக பிரமாதமாக போற்றிப் புகழ்ந்திருப்பதைப் பார்த்தால் மறுபடியும் அவரை இங்கே நிதி மந்திரியாகக் கொண்டுவந்து, இவர் மத்திய சர்க்காரின் நிதி மந்திரியாகப் போய் விடலாம் என்ற எண்ணம் ஏதாவது ஏற்பட்டிருக்கிறதோ என்று நினைக்க வேண்டியிருக்கிறது. அவர்கள் பேரில் தவறு இருந்தும் அதன் காரணமாக வெளியே வந்த பிறகும் அவரைப் பிரமாதப்படுத்தி பேசுவது சரியல்ல, அதோடு இது தனிப்பட்ட விஷயமும்கூட என்பதையும் கூறிக் கொள்கிறேன். ஒரு வேளை அவர் பெரிய மனிதராக இருக்கலாம். தவறுகள் செய்யக் கூடியவர்கள் எல்லாம் பெரிய மனிதர்களாகத்தான் இன்று காணப்படுகிறார்கள். அப்படிப்பட்ட குற்றம் செய்தத ஒருவரை போற்றிப் புகழுவது என்று சொன்னால் அது சரியல்ல. அதோடு இம்மாதிரி போற்றுவது உண்மையில் அவர்களைத் தூற்றுவது போலாகும். இன்றைக்கு டி. டி. கே. யாருக்கு உடைந்தையாக இருந்தாரோ அது போன்ற முந்ராக்கள் இன்னும் எத்தனையோ பேர்கள் இந்த நாட்டில் இருக்கிறார்கள். இந்தியா தேசத்தில் பல இடங்களிலும் இருக்கிறார்கள். அவர்களுக்கெல்லாம் சரியான பாடம் கற்றுக்கொடுப்பதின் மூலம்தான் மக்களுடைய பிரச்னைகளைத் தீர்க்க முடியும். அதை விட்டுவிட்டு இம்மாதிரி பட்டவர்களை புகழுவது என்று சொன்னால் இந்த நாட்டில் இன்னும்

எத்தனையோ முந்தராக்கள் வேண்டுமானாலும் இருங்கள், நாங்கள் உங்களுக்குப் பக்க பலமாக இருக்கிறோம் என்று சொல்லுவது போலத்தான் ஆகும். ஆகையினால் இம்மாதிரிப் புகழக் கூடிய வாசகத்தை அதிலிருந்து கண்டிப்பாக நீக்க வேண்டுமென்று வற்புறுத்திக் கேட்டுக்கொள்ளுகிறேன். ஆகவே பொதுவாக இந்த பட்ஜெட்டில் சில பிரச்னைகள் வரவேற்கக் கூடிய தன்மையில் இருந்தாலும்கூட இம்மாதிரிப்பட்ட சில குறைபாடுகளும் இருக்கின்றன என்பதை எடுத்துக் காட்டி இம்மாதிரிப்பட்ட குறைகளைத் தீர்த்து வைக்கக் கூடிய தன்மையில் நாம் செல்வோமானால் மக்களுடைய பிரச்னைகளையும் கவனித்து அவைகளையும் தீர்த்து வைக்கக் கூடியவர்களாக ஆவோம் என்பதை தெரிவித்துக்கொண்டு என்னுடைய பேச்சை முடித்துக்கொள்ளுகிறேன்.

Sri A. VEDARATHNAM : கனம் அவைத் தலைவர் அவர்களே, இந்த ஆண்டு கனம் கல்வி அமைச்சர் அவர்கள் கொண்டுவந்திருக்கின்ற (நிதி அமைச்சர் அவர்களும் அவர்களே ஆவார்கள், கல்விதான் எனக்கு முக்கியமாக இருப்பதால் கல்வி அமைச்சர் என்று குறிப்பிட்டேன்). வரவு செலவு திட்டத்தை நான் மனமார வரவேற்கிறேன். அதைக் குறித்து எதிர்க்கட்சி அங்கத்தினர் அன்பழகன் அவர்கள் பேசிய பொழுது இப்போது அறிக்கை அழகான தாளில் வெளியிடப்பட்டிருக்கிறது என்று சில உண்மைகளைக் குறிப்பிட்டார்கள். பட்ஜெட் காகிதம் சென்ற ஆண்டை விட கொஞ்சம் வழவழப்பாக இருக்கிறது என்றும் சொன்னார்கள். அதிலிருந்து அவர்கள் என்ன உண்மையைக் குறிப்பிட்டிருக்கிறார்கள் என்றால் ஆண்டு தோறும் சர்க்கார் தங்களுடைய வரவு செலவு திட்டத்தை கையினால் செய்த காகிதத்தில் அச்சிட்டு வெளியிடுகின்றார்கள். இப்போது அந்தக் கைத்தொழில் நல்ல முறையில் முன்னேறியிருக்கிறது, சென்ற ஆண்டைக் காட்டிலும் அந்தக் காகித உற்பத்தி நல்ல வளர்ச்சி அடைந்திருக்கிறது என்பதை அவர்கள் மறைமுகமாக குறிப்பிட்டிருக்கிறார்கள் என்றுதான் நான் கருதுகிறேன். 3–09 p.m.

இன்னொரு அழகிய தமிழ்ப் பழமொழியையும் அவர்கள் குறிப்பிட்டார்கள். "அவளுக்கு இவள் எழுந்திருந்து உண்பாள்" என்று சொன்னார்கள். அதிலும், நம்முடைய நிதி அமைச்சரவர்கள் தயாரித்திருக்கும் வரவு செலவுத் திட்டம் முன்னேற்றப் பாதையில் செல்லுகின்றது என்று அவர்கள் சுட்டிக்காட்டியிருப்பதை நான் இங்கே குறிப்பிட விரும்புகிறேன். படுத்த படுக்கையிலிருந்து ஆகாரம் சாப்பிட முடியாமல் நிலையிலிருந்த அந்த மனைவி இப்பொழுது எழுந்து உட்காரும் நிலையிலிருக்கிறாள் என்று சொன்னால், அது வளர்ச்சியின் அறிகுறியைக் காட்டுகிறதே தவிர, குறை கூறுவதற்கு அதில் இடம் இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. உணவு பற்றாக் குறை தீருவதற்கு முன்பே நியாய விலைக் கடைகளை எல்லாம் மூடிவிட்டதாகக் குறிப்பிட்டார்கள். நியாய விலைக் கடைகளை இன்னும் மூடியதாகத் தெரியவில்லை. ஆனால், அங்கே அரிசிக்குப் பதிலாக, அதைக் காட்டிலும் சத்துள்ள கோதுமையை இப்பொழுது வினியோகம் செய்கிறார்கள். எனினும், ஏதாவது குறை சொல்ல வேண்டுமென்பதற்காக, எதிர்க்கட்சியிலிருப்பவர்கள் பேசத்தானே வேண்டும். அவர்களுடைய அழகிய தமிழில், இந்தப் "பொழுது போக்கு வரி" க்கு ஒரு நல்ல பதம் கண்டுபிடித்துச் சொல்லுவதாக ஸ்ரீ அன்பழகன் அவர்கள் சொன்னார்கள். அதை ஆவலுடன் எதிர்பார்ப்போம். இந்த வரவு செலவுத் திட்ட இறுதிக்குள்ளாவது, ஒரு நல்ல பெயர் அழகான தமிழிலே கிடைக்குமென்று எதிர்பார்க்கிறோம். 3–10 p.m.

இந்தப் பக்கத்திலே உள்ள நாங்கள் எங்கள் பகுதிகளிலே நடக்கும் விஷயங்களைத் தெரிந்து, வரவு செலவுத் திட்டத்தில் அபிவிருத்தி செய்ய வேண்டியதற்கான யோசனைகளை அரசாங்கத்துக்குச் சொல்ல வேண்டியது எங்களுடைய கடமையாயிருக்கிற காரணத்தினால், அதில் ஏதேனும் ஓரிரு குறைகள் இருந்தபோதிலும் கனம் நிதி மந்திரி அவர்கள் சென்ற ஆண்டு வரவு செலவு திட்டகாலத்தில் குறிப்பிட்டதுபோல அது பூனை தன் குட்டியைப் பருகுவது போல் அல்லாமல் எதிர்க்கட்சியைப் போன்று, "பூனை எலியை விழுங்குவது போல்" அல்ல என்பதைக்

கூறிக்கொள்ள விரும்புகிறேன். இப்பொழுது நமது மாகாணத்தில் எல்லாவற்றையும் விட மிக முக்கியமான பிரச்னை உணவுப் பிரச்னை. அது இந்த ஆண்டு கொஞ்சம் திருப்திகரமாக இருந்த போதிலும், நிரந்தரமான திருப்தி ஏற்பட்டுவிட்டது என்று சொல்லுவதற்கில்லை. இந்தப் பிரச்னையைத் தீர்ப்பதற்கு இதற்கு முன் பல முறை இந்த அவையில் யோசனைகளைக் குறிப்பிட்டிருந்த போதிலும், வரவு செலவு திட்டத்தில் அதைப் பற்றி ஒன்றும் குறிப்பிடாததின் காரணம் எங்களைப்போன்றவர்களுக்குத் தெரியவில்லை. எங்களைப் பொறுத்த வரையில், "நெற்களஞ்சியம்" என்று சொல்லக் கூடிய காவிரி நதி பாய்கிற தஞ்சை ஜில்லாவில், என்னுடைய தாலுகாவான திருத்துறைப்பூண்டியில் மாத்திரம், முதல் தரமான நஞ்சை நிலம், 10,000 ஏக்கருக்கு அதிகமான சாகுபடிக்கு லாயக்கான, சர்க்கார் நிலம் தரிசாகக் கிடக்கிறது. அதை விவசாயம் செய்ய அங்குள்ள விவசாயிகள் தயாராக இருக்கிறார்கள். ஆற்று நீரை உபயோகிப்பதன் காரணமாக யாருக்கும் இடைஞ்சல் இருக்கப் போவதில்லை. யாராவது கோபித்துக்கொள்வார்களேயானால், "கடல்" தான் கோபித்துக்கொள்ள வேண்டுமே ஒழிய, மனிதர்கள் யாரும் சண்டைக்கு வர மாட்டார்கள். அந்த நீரைப் பயன்படுத்தி, அந்த நிலங்களை விவசாயத்திற்குக் கொண்டுவருவதற்கு அரசாங்கம் என்ன முயற்சி எடுத்துக்கொண்டிருக்கிறார்கள் என்பதை விளக்கினால் உதவியாக இருக்கும். கனம் மராமத்து இலாகா மந்திரி அவர்கள் அந்தப் பகுதிக்கு வருகிறார்கள் என்ற செய்தியைக் கேட்ட மாத்திரத்திலே ஆயிரக் கணக்கான மக்கள் அவர்களுடைய கார் அந்தப் பக்கம் வரவேண்டுமென்பதற்காக, இரவு பகலாக உழைத்து, ரோடு அமைத்து, அந்த நிலத்தை ஆளுக்கு இரண்டு ஏக்கராகப் பிரித்து, வரப்புகள் அமைத்து, பாய்ச்சலுக்கு வேண்டிய வகையில் அதைச் செப்பனிட்டு, மந்திரி அவர்களை அழைத்துக்கொண்டு வந்து காட்டினார்கள். அவர்கள் வரும்பொழுது இரவு 2 மணி. அந்த நேரத்தில் ஆயிரக் கணக்கான மக்கள் கூடி, அவர்களை ஆரவாரத்துடன் வரவேற்று, அந்த இடத்தைக் காட்டி, தாங்கள் சாகுபடிசெய்ய அனுமதிக்கும்படி கேட்டார்கள் என்று சொன்னால், அதிலே அவர்களுக்கு இருக்கிற ஆர்வத்தை கொஞ்சம் கூர்ந்து கவனிக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன். அரசாங்கம் இதற்காக ஒரு தம்பிடிகூட செலவழிக்க வேண்டாம். அந்த நிலம் பூராவும் சாகுபடிக்கு வந்தால், அதிலிருந்து கிடைக்கும் நிலவரி, தண்ணீர் வரி, அரசாங்கத்திற்கு வருமானமாக இருக்குமே ஒழிய, நஷ்டம் ஒன்றும் கிடையாது. தில்லைவிளாகப் பகுதியிலுள்ள முசல்வெளிப் பிரதேசத்தைக் குறிப்பிடுகிறேன். அடுத்து இருக்கிற மதகைக்கூட புதிதாக கட்ட வேண்டியதில்லை. அதிலே இருக்கிற கண்மாயைத் திறந்துவிட்டால், கடலிலே வீணைகப் போகிற தண்ணீர் பாய்ந்து, 10,000 ஏக்கர் 1-ம் நம்பர் நிலம் சாகுபடிக்கு வரும். சாகுபடி செய்யலாம் என்று சர்க்கார் சொல்லுவார்களேயானால், அந்த நிலம் முழுவதும் விவசாயத்திற்கு வந்துவிடும். இவ்வளவு பரந்த நிலம் தரிசாகக் கிடப்பதற்கு நிர்வாகக் குறைவோ, அல்லது அங்கேயுள்ள அதிகாரிகளின் போக்கோ, என்பதை எங்களால் அறிந்துகொள்ள முடியவில்லை. இந்த நிலங்களை விவசாயத்திற்குக் கொண்டுவந்தால், உணவுப் பற்றுக் குறை ஓரளவு தீர்வதுடன், நிலப் பசியால் வாடுகிற நிலம் இல்லாத விவசாயிகளின் பிரச்னையும் ஓரளவு தீரும். ஆகவே, கனம் நிதி அமைச்சரவர்கள் இதிலே கவனம் செலுத்தி, அந்த நிலங்களை உடனடியாக சாகுபடிக்குக் கொண்டுவருவதற்கு முயற்சி எடுக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்.

இந்தியாவிலேயே, முதன் முதலாக நம்முடைய ராஜ்யத்தில்தான் மேடான பகுதிகளில் **pumping sets**–கள் வைத்து, ஆயிரக்கணக்கான ஏக்கர் நிலங்களைச் சாகுபடிக்குக் கொண்டுவந்திருக்கிறார்கள். அதன் மூலமாக அனுஷ்டானத்தில் நல்ல பலனைக் கண்டிருக்கிறார்கள். பழைய டெல்டா பிரதேசத்தை விட, இப்பொழுது பம்பு செட்டுகள் மூலமாக சாகுபடிக்குக் கொண்டுவந்திருக்கும் நிலங்களில் இரு மடங்கு அதிகமான விளைச்சலிருக்கிற காரணத்தால், பிற பகுதிகளிலும் அந்த முறையை அமுலுக்குக் கொண்டுவர வேண்டுமென்று பல விவசாயிகள் மகஜர்கள்

3rd March 1958] [Sri A. Vedarathnam]

அனுப்பியிருக்கிறார்கள். இதில் அரசாங்கத்திற்கு செலவு ஒன்றுமும் கிடையாது. அதற்காக ஏறபடும் செலவு அனைத்தையும் அவர்களே ஏற்றுக் கொள்ளத் தயாராயிருக்கிறார்கள். ஆகவே, இந்த முறை சாகுபடியை பாக்கி இருக்கிற நிலங்களுக்கும் கொண்டு வந்தால், உணவுப் பஞ்சம் தீர்வதுடன், விவசாயிகளிடையே வேலை யில்லாத் திண்டாட்டமும் ஓரளவு குறையும் என்பதைக் குறிப்பிட விரும்புகிறேன்.

இந்த நிலைமை திருத்துறைப்பூண்டியில் மட்டும் அல்ல. தஞ்சை ஜில்லாவில் இதுபோன்று 40 ஆயிரம் ஏக்கர் நிலம் சாகுபடிக்கு லாயக் கான நிலம், முதல்தரமான நஞ்சைக்கு லாயக்கான நிலம், தரிசாகக் கிடக்கின்றன என்பதை இதற்குமுன் பலதடவை இந்த சபையில் நான் எடுத்துக் கூறியிருக்கிறேன். அப்படிச் சொல்லிக்கொண்டு வந்தும், அதை அப்படியே இன்னும் வைத்துக் கொண்டிருக்கிறார்கள். ஆகவே அதற்கு உடனடியாக பரிகாரம் கண்டுபிடித்து அவைகளை சாகுபடிக்குக் கொண்டுவர அரசாங்கம் நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும். மற்ற எல்லா பிரச்னைகளை எல்லாம் ஒதுக்கி வைத்துவிட்டு இதற்கு முதல் சலுகை கொடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அப்படி இதற்கு முதல் சலுகைக் கொடுத்தால் அதைப் பற்றி யாரும் குறை கூறமாட்டார் கள். சபையில் இருக்கக் கூடிய எதிர்க்கட்சி அங்கத்தினர்கள் உள்பட எல்லோரும் இதை முழு மனதுடன் வரவேற்பார்கள் என்று நான் கனம் அமைச்சர் அவர்களுக்கு நினைவூட்ட விரும்புகிறேன். 3-20 p.m.

அடுத்தபடியாக கைத்தொழில். இந்த விஷயத்தில் நம்முடைய தொழில் அமைச்சர் அவர்கள் தஞ்சை ஜில்லாவில் புதிதாக சைக்கிள் தொழிற்சாலையும், ஒரு தீக்குச்சி தொழிற்சாலையையும் ஆரம்பிக்கப் போவ தாக குறிப்பிட்டதை நான் முழுமனதுடன் வரவேற்கிறேன். அத்துடன் அவர்களிடத்தில் இரண்டொரு யோசனைகளையும் கூறி அவைகளையும் இத்துடன் சேர்த்துக்கொள்ள வேண்டும் என்றும் கேட்டுக்கொள்ளு கிறேன். தஞ்சை ஜில்லாவில் பெரிய "ஸ்வாம்ப்" அதாவது சுமார் 150 சதுர மைல் அளவில் அது இருக்கிறது. ஆண்டு தோறும் ஜனங்களுடைய முயற்சி இல்லாமலேயே, அகில இந்தியாவிலுள்ள யாவருக்கும் தம்படி செலவு இல்லாமல் உப்பு சப்ளை செய்யக் கூடிய அளவில் அங்கு உப்பு எடுக்கப்படுகிறது. இந்த இடத்தைத்தான் நமது மதிப்பிற்குரிய கனம் ராஜாஜி அவர்கள் தன்னுடைய உப்பு சத்தியாக்கிரகத்தின்போது தேர்ந்தெடுத்துக்கொண்டார் என்பது எல்லோரும் அறிந்த விஷயம். இது சரித்திரத்தில் இருக்கிறது என்பதை யாரும் மறந்துவிட முடியாது. மத்திய அரசாங்கத்தின் தொழில் துறை நிபுணர், மத்திய அரசாங்கத் திற்கு கைத்தொழில் சம்பந்தமாக ஆலோசனை கூறும் டாக்டர் கணே அவர்கள் அந்தப் பிரதேசத்தைப் பார்வையிட்டு அங்கு ஏராளமாக ஜிப்சம் உற்பத்தி செய்வதற்கு வசதி இருக்கிறது என்றும், அதை ஒரு நிபுணரைக் கொண்டு ஆராய்ச்சி செய்து அந்த இடத்தையும் சர்வே செய்ய சொல்லி இருக்கிறார். அப்படி அங்கே சர்வே செய்து ஒரு ரிப்போர்ட்டையும் அரசாங்கத்திற்கு சமர்ப்பித்திருக்கிறார். அதை எடுத்து நடத்துவதற்கு சுமார் மூன்று கோடி ரூபாய் மூலதனம் போட வேண்டும் என்றும், அப்படிப் போட்டு அந்தத் தொழிலை எடுத்து ஆரம்பித்தால் முதல் ஆண்டிலேயே அந்த மூன்று கோடி ரூபாயை எடுத்துவிடலாம் என்றும் அதன் பிறகு எந்த செலவும் இல்லாமலேயே ஆண்டு ஒன்றுக்கு மூன்று கோடி ரூபாய் மதிப்புள்ள ஜிப்சம் கிடைக்கும் என்றும் அவர் குறிப்பிட்டிருக்கிறார். அங் கிருந்து கிடைக்கக் கூடிய ஜிப்சத்திலிருந்து மட்டுமே மூன்று கோடி ரூபாய் கிடைக்கும் என்றும் இன்னும் மற்ற பொருள்களின் மூலமாக அதிகப் படியான லாபம் கிடைக்கும் என்றும் அவர் குறிப்பிட்டிருக்கிறார். இப்படி அந்த நிபுணர் கூறியிருப்பதை நான் கனம் மந்திரி அவர்களுடைய கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். இந்த வருமானம் அந்த ஜிப்சம் மூலமாகத்தான் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. இன்னும் பல ரசா யனப் பொருள்களும் அங்கிருந்து கிடைக்கும் என்று அந்த நிபுணர் குறிப்பிட்டிருக்கிறார். அதாவது மாக்னிஷியம் சல்பேட், ப்ரோமைன், போன்ற எவ்வளவோ உப ரசாயனப் பொருள்களும் அங்கிருந்து கிடைக்கும்

என்றும் குறிப்பிட்டிருக்கிறார். ப்ரோமைன் என்ற ரசாயனப் பொருள் ரொம்பவும் உயர்வானது என்று சொல்லப்படுகிறது. இவைகளை எல்லாம் கணக்குப் பார்த்தால் நமக்கு செலவு இல்லாமலேயே எவ்வளவோ லாபம் வரக் கூடியதாக இருக்கிறது. இன்னும் எவ்வளவோ கோடி ரூபாய் நாம் அதன் மூலம் சம்பாதிக்கலாம் என்று அந்த நிபுணர் சொல்லியிருக்கிறாரே தவிர, வேதரத்னம் சொல்லவில்லை. அங்கு கிடைக்கும் ஜிப்சத்தை வைத்துக்கொண்டு ஆசியா கண்டம் பூராவுமே நாம் சப்ளை செய்யலாம். ஒரு தம்பிடி காசு செலவு இல்லாமல்கூட அவைகளை உற்பத்தி செய்து வினியோகம் செய்யமுடியும். அப்படிப்பட்ட உப பொருள்கள் அங்கு கிடைக்கின்றன. இதைக் காட்டிலும் லாபகரமான தொழில் வேறு இருக்க முடியாது. அரசாங்கம் இதை எடுத்து நடத்த வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். மூன்று கோடி ரூபாய் மூலதனத்தில் ஆண்டு தோறும் மூன்று கோடி ரூபாய் வருமானம் வரக்கூடிய இந்தத் தொழிலை எடுத்து நடத்த வேண்டும் என்று நான் சர்க்காருக்கு நினைவுறுத்த விரும்புகிறேன்.

ஆனால், அரசாங்கம் ஒரு கருத்தைத் தெரிவிக்கலாம், மேல் நாடுகளிலிருந்து, டாலர் பஞ்சம் இருப்பதால், யந்திரங்களை வரவழைக்க கஷ்டமாக இருக்கும் என்று சொல்லலாம். இந்தத் தொழிலை ஆரம்பிப்பதற்கு யந்திரங்கள்கூட தேவையில்லை. அங்கே இருக்கக் கூடிய மண்ணைக் கொண்டே அதற்கு வேண்டிய உற்பத்தி சாதனங்களை அமைத்துக்கொள்ளலாம். அதனால் டாலர் கஷ்டம் இந்தத் தொழிலை ஆரம்பிப்பதற்கு குறுக்கே நிற்காது என்று நினைவூட்ட விரும்புகிறேன். ஆகவே இந்தத் தொழிலை ஆரம்பித்து வைக்கும்படியாக நான் சர்க்காரைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

இது போன்று இந்நாட்டிற்கு மேல் நாடுகளிலிருந்து ஏராளமாக இறக்குமதி செய்யக்கூடிய காஸ்டிக் சோடாவையும் நாம் அங்கே உற்பத்தி செய்துகொள்வதற்கு வசதி இருக்கிறது. காஸ்டிக் சோடா நமது நாட்டில் பற்றாக் குறையாக இருக்கிறது. ஆகவே அதையும் நாம் இங்கேயே உற்பத்தி செய்துகொள்வதற்கு வசதி இருக்கிறது. அதற்கு என்று ஒரு கோடி அல்லது முக்கால் கோடி ரூபாய் மூலதனம் போட்டால் போதுமானது. அப்படி மூலதனம் போட்டு அந்த உற்பத்தியையும் நாம் ஆரம்பித்தால் நாம் எவ்வளவோ லாபம் அடையலாம். இதையும் அங்கு ஆரம்பிக்கலாம் என்று நிபுணர்கள் கூறியிருக்கிறார்கள். தென்னாட்டில் எவ்வளவோ வளம் குறைவு என்று சொல்லுகிற அவர்களுக்கு எல்லாம் இது பதில் கூறுவதாகவும் இருக்கும். இதற்கு எல்லாம் மூலதனம் குறைவாகத்தான் ஆகும். தம்படி செலவு இல்லாமல் உற்பத்தியாகக் கூடிய உப்பு இருக்கிறது. ஆகவே இதை ஆலோசனை செய்து பார்க்கும்படியாக நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

சற்று முன்பு பிரமாதமாக ஒரு விஷயம் விவாதத்தில் இருந்தது. அதாவது முந்திரி உற்பத்தியைப் பற்றி. தஞ்சை ஜில்லாவில்தான் ஏராளமாக முந்திரி உற்பத்தியாகிறது. தஞ்சை ஜில்லாவில் ஒவ்வொரு இடத்திலும் ரயில்வே ஸ்டேஷன் இருக்கக் கூடிய இடங்களில் முழு பருப்புடன் முளை உடையாமல் தட்டு தட்டாக முந்திரி பருப்பு விற்பனையாவதைப் பார்க்கலாம். அப்படி முந்திரி இந்த ராஜ்யத்தில் அதிகமாக உற்பத்தியாகிறது. இன்னும் ஏராளமாக உற்பத்தி செய்வதற்கு அங்கே வசதி இருக்கிறது. அதற்கு வேண்டிய திட்டமும் இருக்கிறது. அத்துடன் முந்திரி ஓடுகளை உபயோகித்து சாதாரணமாக ஒரு ப்ளாஸ்டிக் பாக்டரியை அமைக்கலாம். அதன் மூலம் பல பொருள்களைச் செய்வதற்கு இடம் இருக்கிறது. இதிலும் கொஞ்சம் சிந்தனை செலுத்த வேண்டும் என்று அவர்களை நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

ஜில்லா போர்டின் அபாலிஷனால் ஜில்லா போர்டுகளுக்குக் கொடுக்கப்பட்டு வந்த ரயில்வே செஸ் பணம் இப்பொழுது அரசாங்கத்திற்குக் கிடைக்கிறது. அப்படி மத்திய அரசாங்கத்தினிடமிருந்து சுமார் $1\frac{3}{4}$ கோடி ரூபாய் இது வரையிலும் நமது அரசாங்கத்திற்கு கிடைத்திருக்கும் என்று நினைக்கிறேன். அந்த மூலதனத்திலிருந்து தஞ்சை ஜில்லாவில் ஒரு வைத்தியச்

கல்லூரியையும், பொறி இயல் கல்லூரியையும், ஒரு விவசாயக் கல்லூரியையும் அமைக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். இவைகளை அமைப்பதற்கான ஒரு சிறந்த பிரதேசம் அது. இவைகளை அமைக்கவேண்டும் என்று ஏற்கெனவே அங்குள்ள ஜில்லா போர்டு தீர்மானித்து அரசாங்கத்திற்கு தெரியப்படுத்தியிருக்கிறார்கள். அப்படியிருந்தும் அவர்களுக்கு பணம் கிடைக்கவில்லை. இப்பொழுது அந்தப் பணம் கிடைத்திருக்கிறது. அதுவும் மற்ற ஜில்லாக்களுக்கு அபிவிருத்தி வேலைகளுக்கு என்று கொடுக்கப்படுகிற பணத்துடன் இதையும் சேர்த்தால் அங்கு மூன்று கல்லூரிகளை அமைப்பதற்கு வழி ஏற்படும். இப்படிப்பட்ட மூன்று கல்லூரிகளை அங்கு அமைப்பதற்கு வேண்டிய வசதி இருக்கிறது. அங்கு ராஜா மிராசுதார் ஆஸ்பத்திரி இருக்கிறது. அதைப்போன்ற வசதியுள்ள இடம் வேறு எங்கும் இருக்காது. இஞ்சினியர் கல்லூரியை அமைக்கவேண்டும் என்றால் அதற்கும் அங்குதான் வசதி இருக்கிறது. தஞ்சை ஜில்லாவில் அமைக்கப்பட்டிருக்கக்கூடிய நீர்பாசன வசதிகளை பல இடங்களிலிருந்து வந்து பார்த்துவிட்டுப் போகிறார்கள். அவைகள் சோழ ராஜ்ய காலத்தில் அமைக்கப்பட்ட நீர்ப்பாசன வேலைப்பாடுகள். அப்படிப்பட்ட இஞ்சினீயரிங் வேலைகள் நடந்திருப்பதால் அங்கு ஒரு இஞ்சினியரிங் கல்லூரியை அமைப்பதற்கு வசதியாக இருக்கும். விவசாயத்தைப்பற்றி அங்கு சொல்ல வேண்டியதில்லை. அங்கு அதனால் ஒரு விவசாயக் கல்லூரியை அமைப்பதற்கு வேண்டிய வசதிகளும் இருக்கின்றன என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம்தான். அதைவிட சிறந்த இடம் வேறு எங்கிலும் இருக்க முடியாது. ஆகவே அங்கு இப்படிப்பட்ட மூன்று கல்லூரிகளையும் அமைக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். இதற்கு கனம் மந்திரி அவர்கள் முன் வர வேண்டும். ஆகவே அங்குள்ள நலன்களை பயன்படுத்திக்கொள்ளவேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். இது ரொம்பவும் முக்கியமான விஷயம்.

நிலத்திற்கெல்லாம் மேல் வரம்பு கட்டவேண்டும் என்று முதல் முதலாக ஜான் அவர்கள் கவர்னராக இருந்தபோதும் அதன் பிறகு இப்பொழுது வந்திருக்கிற கனம் மேதி அவர்களும் சொல்லியிருக்கிறார்கள். ஆகவே நிலத்திற்கு மேல் வரம்பு கட்டப்படும் திட்டம் எப்பொழுது எடுத்துக்கொள்ளப்படும் என்பதை அறிய விரும்புகிறேன்.

இப்பொழுது இந்த வரவு செலவுத் திட்டத்தைப் பார்க்கின்றபோது, இதில் விவசாய வருமான வரியைப்பற்றி குறிப்பிடப்பட்டிருக்கிற காரணத்தால், நிலத்திற்கு மேல் வரம்பு கட்டுவது கொஞ்சம் தூரப் போய்விட்டதோ என்று நினைப்பதற்கு இடம் தந்திருக்கிறது. அது அண்மையில் வருமானால் இந்த வரிக்கு அவசியம் இல்லை. இந்த வரிக்கு அவசியம் இருக்குமானால், அந்தத் திட்டத்தைக் கைவிட்டுவிடலாம் என்று நான் சொல்வேன். இந்த வரி வந்து நிலைத்துவிட்டால் அந்த வரியை வசூலிப்பதற்காக உள்ள நிர்வாக அமைப்பை அப்பால் மாற்றியமைப்பது என்பது எளிது அல்ல என்பதை நான் சர்க்காருக்கு நினைவூட்ட விரும்புகிறேன்.

3-30 p.m.

நிலத்திற்கு மேல் வரம்பு கட்டுவது என்றால், நாளைக்கோ மறுதினமோ கொண்டுவரவேண்டும். அப்படி இல்லாத நிலையில், என்று வருமோ என்று பெரிய மிராசுதார்களைபோலவும் ஜமீந்தார்களைப்போலவும் இருப்பவர் எல்லோரும் இரவு பகல் தூக்கம் இல்லாமல் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். அப்படியிருக்கும் அவர்களை இனியும் நீண்ட நாளுக்குச் சித்திரவதையில் வைத்திருக்கவேண்டாம். உடனேயே அதைக் கொண்டுவந்து முடிவுகட்டிவிடுங்கள். இல்லையானால் அவர்கள் பயந்துகொண்டேயிருக்கக்கூடிய நிலைதான் நீடிக்கும்.

இதர துறையிலே இருக்கும் வருமானங்களோடு விவசாய வருமானத்தையும் சேர்த்து "ஸ்லாப் லிஸ்டத்திலே கொண்டுவருவது, ஏற்கெனவே தொண்டைக் குழியில் இருக்கும் உயிர் தாங்கமுடியாமல் இருதயம் நின்றுவிடுமோ என்றுகூட அஞ்சும்படியான நிலையில் இருக்கிறதென்பதை கனம் நிதி மந்திரி அவர்களுக்கு நினைவூட்ட விரும்புகிறேன். எனவே, இந்த விஷயத்தை ஆராய்ந்து அவர்கள் ஒரு முடிவு செய்வார்கள் என்று நம்புகிறேன். சுப்ரமண்யம் கமிட்டி ரிபோர்டிலுள்ள சிபார்சுகளெல்லாம் அவர்களுக்கு நன்றாக நினைவு இருக்கும். அவைகளை இந்தச் சந்தர்ப்பத்தில்

நினைவூட்டினால் மட்டும் போதும் என்று நான் நினைக்கிறேன். தலைவர் மணியை அடித்துவிட்டால், அவகாசம் இல்லாததால், இந்த கமிட்டி யின் ரிபோர்ட்டை மட்டும் ஞாபகப்படுத்தினால் அமைச்சர் அவர்களுக்கும் கனம் அங்கத்தினர்களுக்கும் போதும் என்பதனால் அதை நினைப்பூட்டி, அதில் ஒரு நல்ல சமூகமான ஒரு முடிவை அவர்கள் காணவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்ததாக, நம்முடைய ராஜ்யத்திலே கால்வாய்ப் போக்குவரத்துக்கு பக்கிங்காம் கால்வாய் போன்று வேறு எந்த இடத்திலும் இல்லை. நாகப்பட்டிணம்-வேதாரண்யம் கால்வாய்தான் இருக்கிறது. அதில் படகுப் போக்குவரத்து இருந்துகொண்டு வருகிறது. ஏழெட்டு ஆண்டுகளுக்கு முன்னால், அக்கால்வாய் அபிவிருத்தி செய்வதற்காக ஏழரை லட்ச ரூபாய் 'ஸாங்ஷன்' செய்திருந்தார்கள். அந்த அபிவிருத்தி வேலை தடைப்பட்டி ருக்கிறது. இந்த வருஷ வரவு செலவுத் திட்டத்திலாவது சேர்க்கப்பட்டி ருக்கும் என்று எதிர்பார்த்திருந்தேன். 100 ரூபாய் மாத்திரம் ஒதுக்கப் பட்டிருக்கிறது. அந்த ஏழரை லட்ச ரூபாய் ஒதுக்கப்பட்டிருந்தது என்ன ஆயிற்று என்று தெரியவில்லை. நீர்ப்பாதைகள் மூலமாக சாமான்கள், மனி தர்கள் போக்கு வரத்து ஏற்படுவதற்குக் குறைந்த செலவே ஏற்படும். நீர்ப்பாதைப் போக்குவரத்து சிக்கனமானது என்று நிபுணர்கள் முதல் எல்லோரும் கூறுவதால் நாகப்பட்டிணம்-வேதாரண்யம் கால்வாயை அபி விருத்தி செய்வதற்காக ஸாங்ஷன் செய்யப்பட்ட தொகையை அதற்காக செலவிட்டு அதை அபிவிருத்தி செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள் கிறேன்.

இந்த மாகாணத்திலுள்ள சிறு துறைமுகங்களை **(minor ports)** அபிவிருத்தி செய்வதற்காக பல லட்சக் கணக்கான ரூபாய் குவிந்து கிடக்கிறது. அவைகளின் அபிவிருத்தி வேலைகளையும் எடுத்துக்கொண்டு, போக்கு வரத்திலுள்ள கஷ்டங்களைத் தீர்ப்பதற்காக நடவடிக்கை எடுத்து கடலோர போக்குவரத்தை **(coastal traffic)** அபிவிருத்தி செய்யவேண்டு மென்று கேட்டுக்கொள்கிறேன். நிதி அமைச்சர் அவர்களுக்கு இந்தப் போக்குவரத்திலே இருக்கும் கஷ்டங்கள் தெரியும். அந்த விஷயத்திலே அவர்களுடைய கவனத்தைச் செலுத்தவேண்டுமென்று கேட்டுக்கொண்டு, இந்த அவகாசம் அளித்த அவைத் தலைவர் அவர்களுக்கு என்னுடைய நன்றியைத் தெரிவித்து நான் என்னுடைய உரையை இத்துடன் முடித்துக் கொள்ளுகின்றேன்.

3–34 p.m.

*Sri R. SWAMINATHA MERKONDAR: மதிப்பிற்குரிய மன்றத் தலைவர் அவர்களே, இச்சபையிலே நிதி அமைச்சர் அவர்கள் கொண்டுவந்த வரவு செலவுத் திட்டத்தை நான் முழு மனதுடன் ஆதரிக்கிறேன். இத் திட்டத்தை நோக்கும்போது, நாட்டின் முன்னேற்றம், ஏழைகளின் முன் னேற்றம், பிற்போக்கு சமூகத்தின் முன்னேற்றம் என்ற அடிப்படையிலே திட்டம் அமைந்திருப்பதைப் பார்த்தால் அவர்களுடைய திறமை, அவர் களுடைய பொறுப்பு, அவர்களுடைய கடமை இவைகளை மனதில் கொண்டு நல்ல முறையிலே தீட்டியிருக்கிறார்கள் என்றால், அது மிகையாகாது.

கல்வித்துறையிலே பிற்போக்காக இருந்த நமது நாடு முற்போக்கு அடையவேண்டுமென்ற நோக்கத்தோடு ஆரம்பக் கல்விக்காக ஒரு கோடி 63 லட்ச ரூபாய் இவ்வாண்டு திட்டத்தில் உயர்த்தியிருக்கிறார்கள். அது நமது கல்வித் தரத்தின் உயர்வின் நோக்கத்தை காட்டுகிறது.

என்.ஜி.ஓ.-க்களின் குழந்தைகளுக்கு கல்விச் சலுகைகள் வழங்கப்பட்டி ருக்கின்றன. அது நடுத்தர வர்க்கத்திலுள்ள அவர்களுடைய கஷ்டங் களை நிவர்த்திப்பதற்கு ஒரு முக்கியமான சந்தர்ப்பம் என்று அறிவித்து கொள்ளகிறேன்.

இருந்தாலும், தகப்பனிடத்தில் குழந்தைகள் சில சலுகைகளைக் கோரு வதுபோல் இத்திட்டத்திலே சில திருத்தங்களை நான் கூறுகிறேன். இப்ப டிக் கூறும்போது, எதிர்கட்சி நண்பர்கள் சொல்லலாம்—ஆளும் கட்சி யில் இருப்பவர்கள் கூட குறை சொல்லுகிறார்களே—என்று. நாங்கள் இப்படிச் சொல்வதைக் குறை கூறமுடியாது. அப்படி நாங்கள் சொல்ல

3rd March 1958] [Sri R. Swaminatha Merkondar]

வேண்டியது எங்களுடைய கடமை. நாங்கள் எங்களுடைய கடமையைச் செய்வதற்காகத்தான் இங்கு இருக்கிறோம். அந்த வகையில் சில குறைகளை எடுத்துச்சொல்வதற்கு எங்களுக்கும் உரிமை இருக்கிறது என்று எங்களுடைய அமைச்சரே அனுமதி கொடுத்திருக்கிறார்கள் என்பதை நான் உணர்ந்து சில திருத்தங்களைச் சொல்ல விரும்புகிறேன்.

நமது நாட்டை எதிர்நோக்கி நிற்கும் நில வரம்புத் திட்டத்தை நான் முழு மனதுடன் வரவேற்கிறேன். ஆனால், என்னுடைய தொகுதியைப் பொறுத்தவரை, தஞ்சை தாலுகாவின் தென் பகுதி காடாரம்பமாகவும், வட பகுதி நீராரம்பமாகவும் அமைந்துள்ளது. தென் பகுதியிலே ஒரு எக்கரா நிலத்தின் பெருமானம் ரூ. 500 முதல் ரூ. 700 வரை இருக்கிறது. ஆனால், வட பகுதியிலே திருக்காட்டுப்பள்ளி ரேஞ்சில் ஆயிரத்திலிருந்து ஆயிரத்து ஐந்நூறு வரையில் பெறுமானம் இருக்கிறது. திருவையாறு ரேஞ்சில் படுகை நிலங்களிலே நாலாயிரம் ரூபாயிலிருந்து ஐயாயிரம் ரூபாய் வரை தற்போது மதிப்பாக இருக்கிறது. இவ்வாறு ரேஞ்சுக்கு ரேஞ்சு வித்தியாசமாக இருக்கிறது. நிலத்தின் வருமானத்தைப் பார்க்கும்போது, எக்கரா ஒன்றுக்கு 15 கலம், 30 கலம், 50 கலம் என்ற அடிப்படையிலே ஏற்றத் தாழ்வு இருக்கிறது. அந்தக் காலத்திலே நிலத்தின் மண்ணை ருசிபார்த்து வளத்தைக் கணக்கெடுத்து தரத்தை ஏர் வரிசைப் படுத்தியிருக்கிறதாக நாம் கேள்விப்பட்டிருக்கிறோம். ஆதலால், நிலத்தின் வளத்தின் பேரிலாவது, வருமானத்தின் பேரிலாவது தீர்வையின் பேரிலாவது ஒரு வரம்பு நிர்ணயிக்கவேண்டும். நஞ்சைக்குப் பத்து எக்கர், புஞ்சைக்கு 20 எக்கர் என்று நிர்ணயித்துவிட்டால் அது சமதர்ம அடிப்படைக்கோ சமத்துவ வாழ்க்கைக்கோ உகந்ததாக இருக்காது என்பது என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம்.

3-40 p.m.

அடுத்தபடியாக, தஞ்சை ஜில்லாவில் 60 : 40 என்று வாரத்திட்டம் இருக்கிறது. ஒரு வேலி நிலம் வைத்திருக்கும் விவசாயிதான் ஒரு ஏர் மாடும் வைத்துக்கொண்டு உழவடை செய்ய முடியும்; அதற்கு உட்பட்டிருந்தால், அவர்களால் சொந்த உழவடை செய்ய முடியாது. மாடு வைத்துக்கொள்ளவதற்கோ, ஏர் வைத்துக்கொள்வதற்கோ, உழவடைச் செலவு செய்வதற்கோ கட்டுபடியாகாது. ஆகையால்தான் 6 எக்ராக்களுக்கு உட்பட்டவர்கள் சொந்தப் பண்ணை வைத்துக்கொள்ளவதில்லை. அப்படியிருக்கும்போது, 6 எக்கர் வைத்திருப்பவர்களுக்கு ஒரு விதிவிலக்கு இருக்க வேண்டியது அவசியம். அதுவும் இல்லாமல், சில விதவைகள், நடுத்தர வர்க்கத்தில் உள்ள சில உத்தியோகஸ்தர்கள் பம்பாய், கல்கத்தா போன்ற ராஜ்யங்களிலே இருந்துகொண்டு அவர்களுடைய குடும்பத்தை அவரவர்களுடைய கிராமங்களிலே வைத்துகொண்டும் இருக்கிறார்கள். அவர்களெல்லாம் தாங்களே நேரிடையாக விவசாயம் செய்ய முடியாத நிலையிலே தங்கள் நிலத்தைக் குத்தகைக்கு விடுகிறார்கள். அத்தகையவர்கள் வார சாகுபடி முறையிலே பயிரிடவேண்டுமானால், அவர்களுடைய வாழ்க்கைத் தரம் பாதிக்கப்படும் என்று நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

டீசல் எண்ணெய் மீது நம்முடைய சர்க்கார் இப்பொழுது நாலணா வரி உயர்த்தியிருக்கிறார்கள். காலன் ஒன்று ரூ. 1–5–0 ஆக இருந்த டீசல் எண்ணெயின் விலை இப்பொழுது ரூ. 1–9–0 ஆக உயருவதில் தவறு இல்லை. ஆனால், விவசாயத்திற்காக உபயோகிக்கக்கூடிய பம்புகளுக்கு வாங்கும் டீசல் எண்ணெய்க்கு மட்டும் இந்த வரியிலிருந்து விதிவிலக்கு அளித்தால் விவசாய அபிவிருத்தி தடைப்படாது. ஆகவே, இது சம்பந்தப்பட்ட வரையில் விதிவிலக்கு அளிக்கவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன். அப்பொழுதுதான் உணவு உற்பத்தி முற்போக்கு அடையமுடியும்.

மின்சாரம் விஷயமாக நம் ராஜ்யம் அதிக முற்போக்கில் இருக்கிறது. ஆகவே, மின்சாரம் போதும், டீசல் எண்ணெய் இன்ஜின்களை விவசாயிகள் அதிகமாக உபயோகிக்கமாட்டார்கள் என்று சர்க்கார் அபிப்பிராயபடலாம். ஆனால், சில பிற்போக்கு பகுதிகளில், காடாரம்பப் பகுதிகளில், மின்சாரம் வைத்துக்கொள்ள முடியாத நிலையில் உள்ளவர்கள் டீசல் எண்ணெயைத்தான் உபயோகிக்க முடியும் என்பது என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம். அடுத்தபடியாக முந்திரித் தோப்பு வளர்ச்சித் திட்டத்திற்கு

இந்திய சர்க்கார் லட்சக்கணக்கான ரூபாய் ஒதுக்கியிருக்கிருர்கள். ஒரு ஏக்க ருக்கு 300 ரூபாய் லாங் டெர்ம் லோன் என்று கொடுக்கிருர்கள். பொதுவாக முந்திரிப் பயிர் ஆறு ஆண்டுகளுக்கு மேல் தான் பலன் அளிக்கும். ஆகவே நீண்ட காலக் கடன் என்று கொடுக்கப்படும் தொகையை குறைந்தது பத்து ஆண்டுக்கு என்று மாற்றி அமைத்தால் முந்திரி பலன் தர ஆரம்பித்துவிடுமாதலால் விவசாயிகள் சுலபமாகக் கடனைத் தந்துவிட முடியும். மேலும் 300 ரூபாய் கடனையும் மான்யூர் லோன், சீட் லோன் என்பதாகத் தவணைகளில் கொடுத்தாலும் நன்மை பயக்கும் என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக எங்களுடைய தொகுதியிலே—தஞ்சை ஜில்லாவிலேயே மிகவும் பிற்போக்கான தொகுதியாக பிரதேசமாக இருப்பது என்னுடைய பிரதேசம் தான். பொதுவாக எங்கள் ஜில்லாவில் 13 தாலுக்காவில் பனை மரங்கள் இருக்கின்றன. கோயம்பத்தூர், ராமநாதபுரம் முதலிய ஜில்லாக்களில் பனை மரம் ஏறும் தொழிலாளர்களுக்கு பதனி இறக்குவதற்கு லைசென்ஸ் கொடுத்து இருக்கிருர்கள். 5–2–58-ல் இருந்து கூட சேலத்திற்கு லைஸென்ஸ கொடுத்திருக்கிருர்கள். அதன்படியே எங்கள் ஜில்லாவில் பனை மரம் ஏறும் தொழிலாளர்களுக்கு லைஸென்ஸ் கொடுத்தால் அவர்களுடைய வாழ்க்கைத் தரம் உயரும் என்று கேட்டுக்கொண்டு என்னுடைய உரையை முடித்துக்கொள்கிறேன்.

**Sri A. V. P. PERIAVALAGURUVA REDDI**: கனம் தலைவர் அவர்களே, கனம் நிதி மந்திரி அவர்கள் சமர்ப்பித்திருக்கும் பட்ஜெட் விவாதத்திலே நானும் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இந்த பட்ஜெட்டிலே ஒவ்வொரு இனத்திற்காகவும் ஒதுக்கப்பட்டிருக்கும் தொகையை பார்த்தால், நிர்வாகம் அதன்படியே நடந்தால் மிகமிக நல்லதாக இருக்கும். ஆனால் இது வெறும் ஏட்டுச் சுரைக்காயாகத்தான் இருக்கிறது. ஏட்டுச் சுரக்காய் கறிக்கு ஆகுமா என்பது போல பட்ஜெட் புத்தகத்திலே அதற்கு இவ்வளவு பணம், இதற்கு இவ்வளவு பணம் என்று ஒதுக்கிவிட்டால் போதாது. மந்திரக்காரன் மாங்காயைக் காட்டுகிருன். மாங்காயை பார்க்கிறோம். அது பொய் இல்லை. ஆனல் அந்த மாங்காய் ஊறுகாய்க்கு ஆகுமா ? அதுபோல பட்ஜெட் புத்தகத்திலே பணம் ஒதுக்கப்படுகிறதே தவிர அந்தப் பணம் நல்லமுறையில் செலவு செய்யப்படுவதில்லை.

முதலாவதாக ஹரிஜனங்களுக்கு வீடு கட்டுக்கொடுப்பதாக ஒரு திட்டம் போட்டு 550 ரூபாய் அரசாங்கம் கொடுப்பது என்றும், 250 ரூபாய் அந்த வீட்டுக்குரிய ஹரிஜன் கொடுப்பது என்றும் தீர்மானித்து வீடுகளை கண்ட்ராக்டரிடம் விட்டுக் கட்டச் சொன்னர்கள். எங்கள் பக்கத்தில் அம் மாதிரி 20 வீடுகள் கட்டினர்கள். மொத்தம் கண்டிராக்டரிடம் 15 ஆயிரம் ரூபாய்க்கு விட்டதில் கண்டிராக்டருக்கு அதில் மாத்திரம் 6 ஆயிரம் லாபம் என்பது எனக்குத் தெரியும். மண்ணுலேயே வீட்டைக் கட்டிவிட்டு நான்கு பக்கமும் மேலே சிமிண்டைப் பூசிவிட்டு கூரைபோட்டுப் போய்விட்டான். இன்று அந்த வீடுகளைப் போய் பார்த்தால் தெரியும் சிமிண்டு பாறை பாறையாக விழுந்துவிட்டது. மண் இடிந்து வீடு சரிந்து வெறும் கூரை மாத்திரம்தான் நிற்கிறது. கன்ட்ராக்டர் ரூ. 6 ஆயிரம் கொள்ளை அடித்துக்கொண்டு போய்விட்டான். இந்தமாதிரியான நிலைமையில் பணத்தை விரயம் செய்து எதற்காக ஹரிஜனங்களுக்கு வீடு கட்டித் தருகிறோம் என்று சொல்லவேண்டும் என்பதை அமைச்சர்கள் நன்கு ஆலோசிக்கவேண்டும். இதற்கு என்ன செய்யலாம் என்றுல் சர்க்கார் கொடுக்கிற பணத்தை நேரிடையாக ஹரிஜனங்களிடமே நான்கு ஐந்து தவணைகளில் கொடுக்கலாம். முதலில் 100 ரூபாயைக் கொடுத்து மரம் போன்றவைகளை சேகரித்துக்கொள்ளச் சொல்லலாம். அவைகளை அவன் சேகரித்துக்கொண்டவுடன் இன்னொரு 100 ரூபாயைக் கொடுத்து கட்டிட வேலையை ஆரம்பிக்கச் சொல்லலாம். அஸ்திவாரம் எழும்பியவுடன் மேல் கூரை, சிமெண்டு இவைகளுக்கு இன்னொரு 100 ரூபாயைக் கொடுக்கலாம். இப்படி அவர்களிடத்திலேயே பணத்தைச் கொடுத்து வீடு கட்டிக் கொள்ளச் சொன்னல் தாங்கள் தாம் அவ்வீட்டில் இருக்கப் போகிறோம் என்பதை உணர்ந்து ஹரிஜனங்களும் நல்ல முறையில் வீடுகளைக் கட்டிக்

கொள்வார்கள். மிகுந்த அக்கரையோடுகூடக் கட்டிக்கொள்வார்கள். அப்படியின்றி இன்றையதினம் பல இடங்களில் ஹரிஜனங்களுக்குக் கட்டிக் கொடுக்கும் வீட்டை கண்டிராக்டரிடம் விடுவதானால் அவர்கள் கட்டியிருக்கிற வீடுகள் எத்தனை நாசமாகிக் கிடக்கின்றன. குடியிருப்பதற்குத் தகுதியே இல்லாமல் போயிருக்கின்றன என்பதை காணலாம். திருமாலுஞ்சோலையில் கூரை தலைகீழாய்த் தொங்கிக்கொண்டிருக்கிறது. எந்த எந்த இடங்களில் எவ்வளவு வீடுகள் நாசமாகி இருக்கின்றன என்பதற்குப் புள்ளி விவரம் குறித்து வைத்திருந்தேன். இன்று சபாநாயகர் திடுதிப்பென்று என்னைப் பேச அழைத்துவிட்டதால் அந்தக் குறிப்புகளைக் கொண்டுவர முடியவில்லை. ஆகவே நான் சொல்கிற யோசனைப்படி செய்தால் ஹரிஜனங்களுக்கு உண்மையில் குடியிருக்க வீடுகள் கட்டித் தந்ததாகவும் ஆகும், சர்க்கார் பணமும் விரயமாகாது.

அடுத்தபடியாக ஏழை மாணவர்களுக்கு இலவசமாக பிற்பகல் உணவு கொடுக்க வேண்டுமென்று சொல்லியிருக்கிறார்கள். எனக்குத் தெரிந்த மட்டில் நாட்டில் நடைபெறுகிற விஷயத்தைச் சொல்கிறேன். அங்கங்கே கிராமங்களில் உள்ளவர்களை ஒரு கமிட்டியாக நியமித்திருக்கிறார்கள். அவர்கள் 50 ரூபாய், 40 ரூபாய் வரையில் பாகம் பிரித்துக் கொண்டு விடுகிறார்களே தவிர உண்மையில் மாணவர்களுக்கு பிற்பகலில் உணவு கொடுப்பதே இல்லை. உண்மையிலேயே மாணவர்களுக்கு பிற்பகலில் உணவு கொடுக்க வேண்டும் என்பது சர்க்காருடைய நோக்கமாக இருந்தால், பணமும் விரயமாகக் கூடாது என்று எண்ணினால் ஹோட்டல் காரரிடம் பிற்பகலில் இவ்வளவு மாணவர்களுக்கு இவ்வளவு பொட்டலம் கொடுக்கவேண்டும் என்பதாகக் காண்டிராக்ட்டுக்கு விட்டுவிடவேண்டும் என்பது என்னுடைய அபிப்பிராயம். அது தான் சரியான முறை. வேண்டுமானால் கமிட்டியின் மூலம் உணவு கொடுப்பது என்கிற ஏற்பாட்டினால் எத்தனை கிராமங்களில் பிற்பகல் உணவு கொடுக்கப்படுவதில்லை என்பதை நிதி மந்திரி அவர்கள் என்னோடு வந்தால் காண்பிக்கத் தயாராய் இருக்கிறேன். அதில் ஒன்றும் சந்தேகமில்லை.

அதோடு மின்சார விஷயத்தில் அறுபதாயிரம் பம்பு செட்டுகள் வைத்திருப்பதாகச் சொல்கிறார்கள். அது உண்மை தான். மின்சாரம் வேண்டுமென்றால் போதும், கம்புகளை நட்டு கம்பிகளை இழுத்துவிடுகிறார்கள். அதனால் உணவு உற்பத்தியும் அதிகமாகிக்கொண்டிருப்பதாகச் சொல்கிறார்கள். ஆனால் இன்றைக்கும் ஒரு ரூபாய்க்கு ஒரு படி அரிசியாகத் தான் இருக்கிறதே தவிர $1\frac{1}{2}$ படியாகவில்லை. அதற்காக எந்த விதமான திட்டமும் இன்னும் வகுக்கவில்லை. இப்போது சமீபத்தில் 2-ம் தேதி மதுரையில் விவசாய மகாநாடு கூட்டினார்கள். மந்திரிகள், கலெக்டர்கள் எல்லோரும் வந்திருந்தார்கள். அதிலே யாராவது பரம்பரை விவசாயி இருந்தானா? ஏதோ ஆங்கிலத்தில் எழுதிப் படித்தார்கள். போனார்கள். அவ்வளவு தான். உண்மை விவசாயி, ஜனங்களுடைய பிரதிநிதி விவசாயத்திலுள்ள கஷ்டங்களை எடுத்துச் சொன்னானா? இல்லை. விவசாய அபிவிருத்தி இந்த நிலைமையில் இருக்கிறது. மின்சாரத்தை பம்பு செட்டுகளுக்குக் கொடுக்கலாம் என்றால் உண்மையில் எவ்வளவு தூரம் விஸ்தரிக்கலாம் என்பதற்குக் கணக்குக் கிடையாது. இங்கே உள்ளவர்கள் மணி காட்டும் டப்பியை கையில் போட்டுக்கொண்டிருக்கிறார்கள். விவசாயிகளிடத்தில் அது இருக்குமா? ஷிப்ட் ஸிஸ்டம் என்று சொல்கிறார்கள். வயலுக்குப் போய் மண்வெட்டியை எடுத்து ஒரு கொத்து கொத்தி தண்ணீரை விடுவான். பொக்கென மின்சார சப்ளை நின்று விடும். கேட்டால் ஷிப்ட் ஸிஸ்டம், என்பார்கள். 1938-ம் வருஷத்திலிருந்தே நான் ரோடு மேலேயே பம்பு செட்டுகள் எல்லாம் வைத்து விவசாயம் செய்கிறேன். திருமங்கலம் கள்ளிக்குடி கிராமம். மிளகாய் போட்டிருக்கிறேன். தண்ணீர் இல்லாமல் பூ உதிர்ந்து போகிறது. பிஞ்சுகள் உதிர்ந்து போகின்றன. இதை கண்ணாலேயே மின்சார இலாகா மந்திரி அவர்களுக்குக் காண்பிக்கவேண்டும் என்று நான் நினைத்தேன். அவரும் எங்கள் பக்கத்திற்கு இப்போது வந்திருந்தார்கள். மந்திரியவர்களிடம் நேரில் காண்பிக்கலாம் என்று நினைத்தேன். ரோட் ஸைடிற்கு

3-50 p.m. வந்தேன் நான். என் டிரைவர் மந்திரியின் கொடி தெரிகிறது என்று சொன்னான். அதற்குள் அந்தக் கார் 60, 70 மைல் பறந்து போய் விட்டது. ஆக, மந்திரியவர்களிடம் அதைக் காண்பிக்க முடியவில்லை. நான் சொல்வது, மினிமம் சார்ஜ் குறைக்கப்பட வேண்டும். அந்த மினிமம் சார்ஜை வருடா வருடம் கொடுக்கும்போது, அதை நான்கு நாள் கழித்து தருகிறேன் என்று சொன்னால், ரெவன்யூ டிப்பார்ட்மெண்டி லிருந்து அந்த பம்ப் செட்களை ஜப்தி செய்ய ரெவன்யூ இன்ஸ்பெக்டர் வந்து விடுகிறார். ஆக, கரண்டும் கொடுப்பதில்லை. ஷிப்ட் முறை வைத்து மூன்று மணி நேரந்தான் கொடுப்பேன் என்கிறார்கள். அவர்கள் கையில் வாச்சா வைத்திருக்கிறார்கள், மணிக் கணக்கில் வருவதற்கு. ஆகவே, இதைப் பற்றி எல்லாம் சற்று நன்கு ஆலோசிக்க வேண்டும். மின்சார விஷயத்தில் ரொம்ப மாறுதல் செய்ய வேண்டும். ஒரு கிராமத்திற்கு நான்கு ஸெட் வருகிறது. அதற்கு லைன் இழுக்க ஒரு மணி நேரம் ஆகிறது. அதற்கு 10,000 ரூபாய் ஆகிறது. அதற்கு மினிமம் சார்ஜ் கொடுக்க எல்லோரும் ஒத்துக்கொள்ள மாட்டார்கள். அடுத்தப்படியாக, இப்பொழுது மின்சார போர்ட் நிறுவப் பட்டிருக்கிறது. நம்மிடம் வந்து தொல்லை பண்ணுவார்களே என்று நினைத்து மந்திரியவர்கள் அந்த பொறுப்பை ஒரு போர்டின் தலையின் மீது தள்ளி விட்டார்கள். ஒவ்வொரு பிளாக் மார்க்கெட் வியாபாரிகளை பார்த்தால் 36 டூம் லைட்களும், 46 பீங்கான் விளக்குகளும் அவர்களுடைய பங்களாக்களில் தொங்குகிறது. அதற்கெல்லாம் சப்ளை செய்ய கரண்ட் இருக்கிறது. ஆனால் விவசாயம் செய்வதற்காக கரண்ட் கொடுக்க கரண்ட் இல்லை. இப்படி இருக்கிறது, சமாசாரம்.

SRI N. R. THIAGARAJAN: உங்கள் பங்களாவில் பீங்கான் லைட்டுகளும், டூம் லைட்களும் இல்லையா ?

SRI A. V. P. PERIAVALAGURUVA REDDI: என் பங்களாவில் ஒரு லைட்தான் இருக்கிறது. நான் ப்ளாக் மார்கட்காரன் அல்ல. ப்ளாக் டெவலப்மெண்டில், மூன்று ரெவின்யூ பிர்க்காவிற்கு சேர்ந்து ஒரு ப்ளாக் டெவலப்மெண்ட் ஆபீஸர் இருக்கிறார். அதற்கு பின் கிராம சேவக் என்று ஏழு பேர்கள் இருக்கிறார்கள். அதில், கல்விக்கு என்று ஒரு அதிகாரி. விவசாயத்திற்கு என்று ஒரு அதிகாரி, கூட்டுறவுக்கு என்று ஒரு அதிகாரி. ராட்டு சொல்லிக் கொடுக்க என்று ஒரு அதிகாரி. இன்னும் என்ன என்னவெல்லாம் உண்டோ. நான் இங்கு எழுதி வைத்ததை காணவில்லை. (சிரிப்பு). கள்ளிக்குடியை எடுத்துப் பார்த்தால், ஏழு கிராம சேவக்குகள் நன்றாக காப்பி சாப்பிட்டுவிட்டு, பீடா கடையில் உட்கார்ந்து கொண்டு "பூ" என்று புகை விட்டுக் கொண்டிருக்கிறார்கள். நான் தமாஷாக்காக சொல்லவில்லை. பகவான் பேரில் சத்தியமாய் சொல்கிறேன். கிராமங்களில் உள்ள ரோடுகளை பார்த்தால் பரிதாபமாக இருக்கும். மூன்று நான்கு வருடம் மழை பெய்து, ரோடு என்று சொல்லும்படி இல்லாமல், அதில் சுக்கான் மண் கூட அடைக்க வில்லை. ரோடுகளை ரிப்பேர் செய்ய மாட்டேன் என்கிறார்கள். ரோடுகளை சரியாக பழுது பார்க்க ஆள் இல்லை. ஆனால் ராட்டு நூற்க சொல்லிக் கொடுக்க ஆட்களை நியமிக்கிறார்கள். ராட்டு நூற்பவர்கள் ராட்டு நூற்கட்டும். அவர்கள் இப்பொழுதும் ராட்டு நூற்றுக் கொண்டுதான் இருக்கிறார்கள். ராட்டு நூற்க சொல்லிக் கொடுக்க வேண்டியதில்லை. கிராமங்களில் சென்று கிராமச் சேவக்குகள் ஒன்றும் செய்து விட முடியாது. செய்யப் போவதுமில்லை. மூன்றில் ஒரு பங்கு கொடு. நாங்கள் மீதியை போட்டு 5,000-க்கு ஒரு பள்ளிக்கூடம் கட்டுகிறோம் என்கிறார்கள். இரண்டொரு கிராமங்களில் பணம் கொடுப்பது ப்ளாக் டெவலப்மெண்டுக்காக கொடுக்கப் படும் பணத்தை மோசம் பண்ணுவதற்குத்தான். நீங்கள் பணத்தை போட்டு அபிவிருத்தி செய்துவிட்டு ரூபாய்க்கு ஒரு அணா, இரண்டு அணா என்று கிஸ்தி போட்டு வசூலித்தால் என்ன? இந்த ப்ளாக் டெவலப் மெண்ட் என்று சொல்லி, இந்த கிராம சேவக் அப்படி இப்படி என்று சொல்லி பணம் செலவு செய்வது பணத்தை விரயமடிப்பது தவிர வேறொன்றுமில்லை. பணம் போகிறதே தவிர காரியங்கள் ஒழுங்கான முறை

3rd March 1958] [Sri A. V. P. Periavalaguruva Reddi]

யில் நடப்பதில்லை. முன்பு, ஜில்லா போர்டின் கீழ் ரூரல் டிஸ்பன்ஸரி இருந்தது. அதில் ஒரு டாக்டர் கூட வர மாட்டார்கள். அந்த டாக்டர்கள், சட்டையும், பூட்ஸும் போட்டுக்கொண்டு கிராமத்திற்கு வருவார்களா? வர மாட்டார்கள். கிராமங்களில் டாக்டர்கள் இல்லை என்று சொன்னால், எப்போதும் " அதைப் பற்றி யோசித்துக் கொண்டிருக்கிறோம், யோசித்துக் கொண்டிருக்கிறோம் " என்று அமைச்சர்கள் எப்போதும் அப்படி பதில் சொல்கிறார்கள். நீங்கள் எப்பொழுது யோசித்து விட்டு முடிவு செய்யப் போகிறீர்கள். காப்பிக் கடைகளில் " இன்று கடன் இல்லை " என்று போர்ட் போட்டிருப்பது போல் அமைச்சர்களும் யோசித்துக் கொண்டிருக் கிறோம் யோசித்துக்கொண்டிருக்கிறோம் என்று சொல்கிறார்களே தவிர எப்போது யோசனை தீர்ந்து அங்கு டாக்டர்களை போடப்போகிறீர்கள். நீங்கள் கிராமங்களில் டாக்டர்களை போடும்போது, அங்குள்ள மக்கள் செத்துத்தான் போக வேண்டும். வைத்தியக் கல்லூரிகளில் ஐந்து வருடம் படிக்கிறார்களே, ஒரு வருஷம் கிராமத்தில் போய் வேலை பார்த்தால் தான் சர்டிபிகேட் தருவோம், இல்லாவிட்டால் ஸர்டிபிகேட்டும் இல்லை ஒன்றும் இல்லை போ என்று சொல்லி விட வேண்டும். அப்படி கிராமங்களில் டாக்டர்களை போடுவதற்குள்ள வழி பற்றி மந்திரி அவர்கள் யோசித்துப் பார்த்து ஒரு முடிவிக்கு வரவேண்டும். என்னைப் போன்றவர்களின் காரியத்தை சொல்லவில்லை. எனக்கு ஏதாவது வந்தால் நான் குருஸ்வாமி முதலியாரிடம் சென்று ஒரு ஊசி போட்டுக் கொண்டு போய் விடுவேன். ஆனால் எல்லோருக்கும் அப்படி முடியுமா? ஒரு தலைவலி, கால்வலி என்று வந்தால் ஏதோ ஒரு சாம்பலைக் கொடுத்து விட்டு இது தான் மருந்து என்று சொன்னாலும்கூட அவர்களுக்கு ஒரு மன சாந்தி ஏற்படுகிறது. இதை எல்லாம் மந்திரி அவர்கள் பார்த்து ஏதோ ஒரு ஆயுர்வேத அல்லது யூனானி அல்லது ஒரு அலோபத்தி டாக்டரை கண்டிப்பாக கிராமங்களில் வேலை செய்யும்படி கட்டாயப்படுத்தவேண்டும். அதற்கு வேண்டுமானால் ஒரு சட்டம் போடட்டும். அடுத்தபடியாக, நான் ஒரு தடவை திருநெல்வேலியில் இருந்து முக்கூடலிற்குப் போனேன். போனபோது பேட்டையில் ஒரு அரசாங்க கோழிப் பண்ணை இருந்தது. என்ன என்று பார்க்கலாம் என்று அதற்குள்ளே போனேன். அங்கு செவத்த கோழி 50 இருந்தது. அது இங்கிலீஷ் கோழி என்றார்கள். அது வருஷத்திற்கு 300 முட்டைவைக்கிறதாம். அங்கு மேஸ்திரி மாதிரி ஒருவர் இருந்தார். எத்தனை கோழி இருக்கிறது என்று கேட்டேன். 50 இருக்கிறது என்றார். அங்கு நான்கு பேர்கள் வேலையில் இருக்கிறார் கள். அவர்கள் ஒவ்வொருவருக்கும் மாதச் சம்பளம் 40 ரூபாயாம். நான்கு பேர்களுக்கு மாதம் 160 ரூபாயாகிறது. அவர்களை மேற்பார்வை செய்ய ஒருவர் இருக்கிறார். அவருக்கு சம்பளம் என்ன என்று கேட்ட போது அவருக்கு சம்பளம் 95 ரூபாயாம். நான் அவரிடம் கேட்டேன், எனக்கு 50 முட்டை வேண்டும், என்ன விலை என்று கேட்டேன். அதற்கு 10 முட்டைதான் வைக்கும் என்று பதில் வந்தது. 50 கோழி இருக்கிறதே என்று கேட்டதற்கு அப்படித்தான் என்று பதில் சொல்லப் பட்டது. நான் சொல்கிறேன். கோழிப்பண்ணை ஏரியாவில், வெளியில் முட்டை ஒன்றுக்கு இரண்டணா என்றிருந்தால் கோழிப்பண்ணை ஏரியாவில் ஒன்றரை அணாவிற்கு ஒரு முட்டை கிடைக்க வேண்டும். எங்கள் பகுதியில் முட்டை ஒன்றிற்கு ஒன்றேகால் அணா வீதம் எவ்வளவு வேண்டுமானாலும் வாங்கித் தருகிறேன்.

இன்னும் ஒரு சில வார்த்தைகளை கூற விரும்புகிறேன். நமக்கு 4 p.m. பணம் இல்லை என்பது உண்மைதான், அதற்காக விவசாயிகளைப் போட்டு சிறுசேமிப்பு திட்டத்திற்கு என்று ரூபாய்க்கு 3 ரூபாய் வேண்டுமென்று குரவளையை பிடிக்கிறார்கள், விவசாயிதான் என்ன செய்ய முடியும். நிலத்தை சீர்திருத்த கடன், மாடு வாங்க கடன், வீடு கட்டு வதற்கு கடன், இதற்கிடையில் சிறு சேமிப்பு திட்டத்திற்கும் பணம் வேண்டுமென்றால் அவன் என்ன செய்ய முடியும். பணம் அரசாங்கத் திற்கு தேவைதான், அதற்காக இவ்வளவு கஷ்டப்படுத்தக்கூடாது, நானும் எங்கள் பக்கத்தில் தாசில்தாரோடு போய் இதற்கு வேலை செய் தும் வருகிறேன். இந்த நிலைமையில் இருக்கிறது. இந்த பணத்தை

யெல்லாம் யாரிடமிருந்து வாங்க வேண்டுமென்றால் ஆறு மாதத்திற்கு ஒரு தரம் புது பியூக், ப்ளேமௌத் என்று புதிய கார்கள் மாற்றிக் கொண்டிருக்கிறார்கள், இதைகூட ஒரு வருடம் வைத்துக் கொண்டிருந்தால் அதுவே பெரிய சேமிப்பாக இருக்கும், அதையெல்லாம் விட்டு விவசாயிகளிடம் வந்து சிறு சேமிப்புக்கு பணம் வேண்டும் என்றால் அவனால் என்ன செய்ய முடியும் ? நான் இதையெல்லாம் சொல்லுவதால் மந்திரி அவர்கள் கோபப்பட்டுக்கொள்ளக் கூடாது, சமீபத்தில் மணிமுத்தார் அணையை திறப்பதற்கு நான்கு மந்திரிகள் போயிருக்கிறார்கள், இதற்காக அங்கு 68 ஜீப், மற்றும் ஆயிரக் கணக்கில் போலீஸ்காரர்கள், இவ்விதமாக பாழாக பணம் வீணாக்கப்பட்டிருக்கிறது. அணையை திறப்பதற்கு ஒரு மந்திரி போய் திறந்திருக்கலாம், ஆகவே, இம்மாதிரியான செலவுகளை எல்லாம் நிறுத்த வேண்டும் என்று கேட்டுக்கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

SRI V. SANKARAN : கனம் சபாநாயகர் அவர்களே, நான் நமது நிதி மந்திரி அவர்கள் கொண்டு வந்திருக்கும் வரவு செல்வு திட்டத்தை ஆதரிக்கும் முறையில் ஒரு சில வார்த்தைகள் சொல்ல ஆசைப்படுகிறேன். ராஜ்யத்தில் என்ன என்ன திட்டங்கள் நடந்திருக்கின்றன, என்னென்ன நடவடிக்கைகளை எல்லாம் எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கின்றன, இதன்மேல் அரசாங்கத்தின் கொள்கைகள் நடைமுறைகள் என்னென்ன என்பதைப்பற்றியெல்லாம் நன்றாக விரிவாக எடுத்திச் சொல்லியிருக்கிறார்கள். இரண்டாவது மிக முக்கிய அம்சம் என்னவென்றால் மேலும் புது வரிகள் போடவில்லை, ஒன்றிரண்டு வரிகளை தவிர கூடுதலாக வரிகள் போடவில்லை, மேலும் பல சலுகைகள் கொடுப்பப்பட்டிருக்கிறது, கஜெட் பதிவில்லாத உத்தியோகஸ்தர்களுக்கு அவர்களின் பிள்ளைகளுக்கு உயர்நிலை பள்ளி வகுப்புகளிலும் இலவசமாக படிப்பதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அது தவிர விற்பனை வரி சம்பந்தமாக வியாபாரிகளுக்கு பல அனுகூலங்கள் இருக்கும்படியான முறையில் அதைச் சீர்திருத்தம் செய்யப்போவதாக அறிவிக்கப்பட்டிருக்கிறது, இவ்விதம் பல நல்ல அம்சங்கள் பொருந்திய ஒரு திட்டம் இது என்பதை சொல்லிக் கொள்கிறேன். முதன் முதலாக எடுத்துக்கொண்டால் பெரிய நீர்பாசன திட்டங்கள் எல்லாம் நம் ராஜ்யத்தில் அநேகமாக முடிந்து விட்டன. சிறிய நீர் பாசன திட்டங்கள் பலவற்றை இன்னும் முடிக்க வேண்டியிருக்கிறது, ஆகவே அதில் அதிக கவனம் செலுத்தப்பட்டு இருக்கிறது. கண்மாய்களை எடுத்துக் கொண்டால் அரசாங்கத்தினுடைய டிராக்டர்களை உபயோகித்து உழுது அதிலுள்ள வண்டல்களை அந்த ஆயக்கட்டைச் சேர்ந்த உழுகிற விவசாயிகளே எடுத்துக் கொள்ளலாம் என்று முன்கூட்டி அரசாங்கம் விளம்பரம் சொல்ல வேண்டும். அவர்களே போட்டி போட்டுக் கொண்டு காலதாமதமின்றி எடுத்துக்கொண்டு போய்விடுவார்கள். மேடுகள் தாழ்ந்து விடும். ஊளவாய் நன்றாக ஆழபடுத்தப்படும். அடுத்தபடியாக மலைகளிலும் காடுகளிலும் உயர்ந்த ரக மரங்கள் வளர்க்கப் போவதாக தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. இதில் இதற்கு முன்னால் எல்லாம் மலைகளிலிருந்து குழைகளை எடுத்துக்கொள்வதற்கு அனுமதிக்கப்பட்டு வந்தது. இப்போது மரக்கன்றுகள் நடும் காரணத்தைக் கொண்டு அடியோடு நிறுத்திவிட்டார்கள். இவ்விதம் குழைகளை எடுக்கக் கூடாது என்று தடை விதிக்கப்பட்டிருக்கிறது. அதை சற்று தளர்த்தி மலையிலுள்ள குழைகளை எடுத்துக்கொள்வதற்கு முன்போல் அனுமதி கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அடுத்ததாக விவசாயிகளுக்குக் கடன் வசதிக்காக 300 பெரிய கூட்டுறவு சங்கங்களும், 200 சிறிய கூட்டுறவு சங்கங்களும் ஆரம்பிக்கப்படப்போவதாக தெரிகிறது. இதை கிராம மக்களிடத்தில் பிரபல்யப்படுத்தவேண்டும், இன்றைக்கு சாதாரணமாக கிராமம் மக்கள் எல்லோரும் கடன் வாங்கக்கூடிய நிலைமையில் இல்லை, அனேகப் பேருக்கு அப்ளிக்கேஷன் போடுவதற்கே தெரியாது, ஆகவே இந்த முறைகளை கிராம மக்களிடத்தில் பிரபல்யபடுத்த வேண்டும், இது சம்பந்தமாக கடன் வாங்கப்படும் பொழுது **security** வேண்டும் என்று கேட்கப்படுகிறது. இதற்கு சாதாரணமாக கிராம மக்களிடையில் 100-க்கு 10 பேர்கள் கூட வில்லங்கம் இல்லாத முறையில் போதிய செக்யூரிட்டி கொடுக்கக்

3rd March 1958] [Sri V. Sankaran]

கூடியவர்களாக எதிர்பார்க்க இருக்க முடியாது, இந்த நிலைமையில் இருப்பதினால்தான் கடன் வசதி பெற முடியவில்லை, இதைப்பற்றி லேவாதேவிச் சட்டத்திலும் நாம் பார்த்தோம், இதனால் உண்மையில் அவசியமுள்ளவர்களுக்கு சரியாக கடன் உதவப்படுவதில்லை. ஆகவே எளிதான முறையில் அதை வழங்குவதற்கு ஏற்பாடு செய்ய வேண்டுமென்றுக் கேட்டுக்கொள்கிறேன். அடுத்தப்படியாக சொல்லும்பொழுது "நவீன விவசாய ஆராய்ச்சியின் பலன்களை ஒவ்வொரு விவசாயியும் உணரும்படி செய்வதற்கான அளவில் விவசாய இலாகா அமைந்திருக்கவில்லை" என்று பக்கம் 9-ல் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இதுவரை சரியாக அமையவில்லையென்றாலும் இனிமேல் அவ்வாறு இருக்காது. விவசாய அதிகாரிகள் ஊக்குவிக்கப்பட்டு இருக்கிறார்கள். இது வரை குறைவாக இருந்த விவசாய அதிகாரிகளுடைய சம்பளம் உயர்த்தப்பட்டு போதிய அளவாக கொடுக்கப்படவில்லை என்று சொல்லப்பட்டு வந்தது. இப்போது **(Agriculture Demonstrator)** வேளாண்மை விளக்குநர்களுக்கு 100 என்று இருந்ததிலிருந்து தற்போது **135** ரூபாயாக உயர்த்தப்பட்டிருக்கிறது. ஆனால் இந்த **new scale**-ல் குறை **(Anomaly)** இருக்கிறது. அதாவது 15 வருடம் ஆகிவிட்ட உடன் பழைய சம்பளத்திலுள்ளவன் 210 ரூபாய்க்கு வந்து விடுகிறான். அதே சமயத்தில் புது சம்பளத்திலுள்ளவனும் 15 வருடத்தில் 210 ரூபாய்க்குத் தான் வரமுடியும், 16-வது வருடத்தில் பழைய **scale** உள்ளவன் 220 ரூபாய் அடைகிறான். புதிய **scale**காரன் 215 தான் பெற முடியும். இந்த **Anomaly**-யை இந்த யாகபுதிய **scale**-லிருந்து இதை போக்க வேண்டும். அடுத்தபடி சிறு ரகத் தொழில்களை எடுத்துக் கொண்டால் நமது ராஜ்யத்தில் சிறு தொழில்கள் நல்ல முறையில் ஆக்கம் கொடுக்கப்பட்டு இருக்கிறது. உதாரணமாக கிண்டி எஸ்டேட்டில் பல நல்ல வேலைகள் நடைபெற்று வருகின்றன, இந்த விஷயத்தில் இதில் கொள்கை அடிப்படையில் ஒரு யோசனை சொல்ல விரும்புகிறேன். சிறிய தொழில்களை எடுத்துக்கொண்டால் தனியார்களை ஊக்குவிக்க வேண்டும். அவர்களுக்கு பயிற்சி அளிக்கலாம். ஊக்குவிப்பதாக சர்க்காரே தாங்களே சிறு தொழில்களை எடுத்துக் கொண்டு வர்த்தக முறையில் **commercial basis** வியாபாரிகள் போல **profit**-க்கு நடத்த முற்பட்டால் அது கொள்கையளவில் மாறுபட்டதாகும். ஆனால் தனியார்களுக்கு நல்ல பயிற்சி கொடுப்பதற்கு ஏற்பாடு செய்யலாம். அதற்காக வேண்டிய உதவிகள் கொடுக்கலாம், இதல்லாமல் வெறும் வர்த்தக ஸ்தாபனங்களை நடத்துவதுபோல அரசாங்கமே நடத்த முற்படக்கூடாது என்றுள்ள என் யோசனையை தெரிவித்துக்கொள்கிறேன். கல்வி சம்பந்தமாக எடுத்துக் கொண்டால் அதில் பல நல்ல அம்சங்களும் இருக்கின்றன. உதவி சம்பளங்கள் எல்லாம் அதிக அளவாக உயர்த்தப்பட்டிருக்கிறது. ஆனால் அதில் ஒரு குறைபாடு இருக்கிறது. அதை எடுத்துக்கொண்டால் முன்பு எல்லாம் உதவி சம்பளத்தை இரண்டு தவணைகளாக கொடுக்கப்பட்டு வந்தது. இந்த வருடம் சரியாக காலா காலத்தில் இன்னமும் கொடுக்கப்படவில்லை. பரீட்சை நடக்கப்போகிற இந்த சமயத்திலும் இதுவரை கிடைக்கவில்லை என்றால் எவ்வாறு பரீட்சைக்கு தயார் செய்யமுடியும். நேற்று நான் வருகிறவரையினும் மதுரைக் கல்லூரியில் பெரும்பான்மை மாணவர்களுக்கு இதுவரை வரவில்லை என்று தெரிவிக்கப்பட்டது. ஏதோ ஒரு அளவு வந்திருக்கிறது என்றும் சொன்னார்கள். அதிலும் முக்கியமாக எங்கள் பகுதியில் தேவர்கள், கள்ளர்கள் இவர்களுக்கு இதுவரை கட்டோடு வரவில்லை என்று சொன்னால் அது பலவித தப்பபிப்பிராயங்களுக்கும் பேச்சுக்கும் இடமளிக்கிறது. மேலும் சில ஹாஸ்டல்களில் **dividing system** இருப்பதால் வருட கடைசிவரை பணம் கொடுக்கவில்லையென்றால் வெளியே போங்கள் என்று பரிக்ஷை காலத்தில் ஹாஸ்டல் வார்டன்கள் சொல்லி விடுவதாகவும் கேள்விப்படுகிறேன். இந்தவிதமான நெருக்கடியான கட்டத்தில் இருக்கிறது. இந்த நிலைமையை மாற்ற வேண்டும் என்றும் கேட்டுக் கொள்கிறேன். இந்த ஏற்பாட்டினால் மக்களுக்குள் தப்பபிப்பிராயம் கொள்ளும்படியான நிலைமை ஏற்பட்டிருக்கிறது. ஆகையால் முதல் டெர்முக்குள் முதல் தவணையையும், இரண்டாவது தவணையை பிப்ரவரி மாதத்திற்குள்ளாவது கொடுத்தால்

[4–10 p.m.] தான் "dividing system" முறைப்படி நடக்கின்ற பல பள்ளிக் கூடங்களுக்கும் கல்லூரிகளுக்கும் சௌகரியமாக இருக்கும். இதை அரசாங்கம் கவனிக்குமாறு கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, ஸ்தல ஸ்தாபனங்கள் சம்பந்தமாக பாதுகாக்கப்பட்ட குடி தண்ணீர் மிகவும் அவசியம் என்று வலியுறுத்தப்பட்டு, அதற்காக 86 லட்ச ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இன்னும் அதிகமான தொகை ஒதுக்க வேண்டுமென்று நினைக்கிறேன். பாதுகாக்கப்பட்ட குடிதண்ணீர் இல்லாமல்தான் டைபாய்டு, காலரா, அம்மை போன்ற பல வியாதிகள் வருகின்றன. குடிதண்ணீருக்காகப் பணம் செலவழிக்கப்பட்டால், வியாதி களுக்காகச் செலவிடப்படும் பணம் மிச்சம் ஆகும்.

அடுத்தபடியாக, வைகை ரிசர்வாயரிலிருந்து எங்களுக்கு தண்ணீர் ஸப்ளை செய்துகொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டிருக்கிறோம். இப்போது நாங்கள் வைகை ஆற்றை எதிர்பார்க்க முடியவில்லை. சில வருடங்களாக ஊற்றுக்கள் கீழே போய்க் கொண்டிருக்கின்றன. அணைக் கட்டுகள் மேலே கட்டக்கட்ட, ஊற்று நீர் கீழே போய்க் கொண்டிருக்கிற காரணத்தால் வைகை நதியை எதிர்பார்க்க முடியாமல் இருப்பதால் ரிசர்வாயரிலிருந்து கோடை காலத்தில் தண்ணீர் சப்ளை செய்வதற்கு ஏற் பாடு செய்யவேண்டும். இல்லாவிடில் நீர்வசதி குறையவும் ஜனத்தொகை பெருகிக் கொண்டே போகும் நிலையில் சமாளிக்க முடியாத நிலைமை ஏற்படும்.

தனிப்பட்ட வைத்தியர்கள், அதாவது எம்.பி.பி.எஸ். பரிட்சையில் தேறியவர்கள், குறிப்பாக புதிதாக தேறிவந்த தம்பதிகள், 100 அல்லது 150 ரூபாய்க்கு ஒரு வீட்டை எடுத்துக்கொண்டு "நர்ஸிங் ஹோம்" **Maternity Home** நடத்துகிறார்கள். சிறிய சந்துகளிலே இம்மாதிரி "நர்ஸிங் ஹோம்"-களை நடத்துகிறார்கள். அங்கே மிகவும் சுகாதாரக் குறைவான காற்றோட்டம் இல்லாத சூழ் நிலை இருக்கிறது. குறுகிய இடங் களில், சரியாகக் கூடப் படுக்க முடியாத இடத்தில் 30 அல்லது 40 நோயாளிகளைப் போடுகிறார்கள். ஆகவே இந்த மாதிரி நடத்தப்படும் "நர்ஸிங் ஹோம்"-களுக்கும் **Maternity Home**-களுக்கும் ஒரு லைசென்ஸ் முறையை ஏற்படுத்தி அவர்களையும் ரெஜிஸ்தர் செய்யவேண்டுமென்று செய்தால் நன்றாக இருக்கும். தவிர, தகுதியில்லாத நர்சுகள் அதிகமாக இருக்கிறார்கள். தகுதி பெற்றவர்களையே நியமனம் செய்யவேண்டும் என்ற முறை இருக்கவேண்டும்.

எங்கள் முனிசிபாலிட்டியின் ஜனத்தொகை 4 லட்சத்திற்கு மேல் இருக்கிறது. இப்பொழுது 2 லட்சம் ஜனத்தொகை உள்ள இடங்களுக்கு 42 ஸ்தானங்கள் ஒதுக்கப்பட வேண்டும் என்று ஸ்தலஸ்தாபன அறிக்கை யில் காணப்படுகிறது. ஆகவே எங்களுடைய முனிசிபாலிட்டிக்கு தனிப் பட்ட முக்கியத்துவம் கொடுக்க வேண்டியிருக்கிறது. 54 அல்லது 60 ஸ்தானங்களாவது வழங்க வேண்டும். பழைய முறையில் வார்டுகள் நிர்ணயித்திருப்பது சரியல்லாமல் இருக்கிறது. 2,000 அல்லது 3,000 பேர் உள்ள சில வட்டாரத்திற்கு ஒரு வார்டு. சில வார்டுகளின் ஜனத் தொகை 10,000 ஆகக் கூட இருக்கிறது. ஆகையால் இந்த ஏற்றத் தாழ்வை நீக்கி 1,000-க்கு மேல் வித்தியாசம் இல்லாமல் இந்த வார்டு களைத் திருத்தியமைக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

எதிர்க் கட்சியில் உள்ள சில தோழர்கள் எவ்வாறு நம்முடைய ராஜ்யத் தில் பல அணைக்கட்டுகள் கட்டப்படவில்லை, தொழிற்சாலைகள் அமைக்கப் படவில்லை என்றெல்லாம் இங்கேயும், வெளி மேடைகளிலும் பேசுகிறார் கள். அவர்களுடைய குற்றச்சாட்டு கொஞ்சம்கூடப் பொருந்தாது. அவையெல்லாம் கற்பனை வாதங்கள் என்பதை நம்முடைய நிதி மந்திரி அவர்கள் எடுத்துக் காட்டியிருக்கிறார்கள். அவர்களுடைய ஆகாய பந்தல் களுக்கு கால்கள் இல்லை என்பதை நமது நிதி மந்திரி சுருக்கமாக எடுத்துக்காட்டி பதில் கூறி இருக்கின்றார்கள். 6-ம் பக்கம் 7-வது பாராவில் நம்முடைய பிரச்னை நம்முடைய வசதிகளை பயன்படுத்திக் கொள்ளத் தவறியதில்லை. மேலும் திட்டங்களை வகுப்பதற்கு போதிய இயற்கை வசதிகள்

இல்லை என்பதுதான் என்று தெள்ளத் தெளிவாக பதிலளித்து இருக்கிறது. குழந்தை சிரமப்பட்டு ஊதி ஊதிப் பெரிதாக்கும் ஒரு பலூனில் ஒரு சிறிய ஊசி பட்டால் காற்று முழுவதும் வெளியேறி இருந்த இடம் தெரியாது போய் விடுமோ அவ்வாறு மந்திரியினுடைய சிறிய இந்த விளக்கமே இந்த மாதிரிக் கற்பனை வாதங்கள் எல்லாம் இருந்த இடம் தெரியாமல் போக்கடித்து இருக்கிறது.

அடுத்தப்படியாக, உணவு உற்பத்தியைப் பற்றி ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். 1955–56-ல் மொத்த உற்பத்தி 44 லட்சம் டன். 1956–57-ல் அது 46 லட்சம் டன்னுக உயர்ந்தது. நடப்பு ஆண்டில் உணவு உற்பத்தி மேற்கொண்டு 3 லட்சம் டன் வரை அதிகரிக்கலாம் என்று எதிர்பார்க்கப்படுகிறது. இதில் முக்கியமாகக் கவனிக்க வேண்டிய விஷயம் என்னவென்ருல், ஆனுல் மேலும் போகப்போக முயற்சி அளவிற்கு ஏற்ற பலன் கிட்டாத உச்ச நிலையை அடைந்து விடலாம் என்று எச்சரித்து இருக்கிருர். அதே சமயம் ஜனத்தொகையை எடுத்துக் கொண்டால் வருடத்திற்கு $1\frac{1}{2}$ சத விகிதம் தவருது அதிகரித்து வருவதாக நிபுணர்கள் கணக்கிடுகிருர்கள். ஆகவே உணவு உற்பத்தி பெருக்கத்துடன் ஜன உற்பத்தி குறைந்தால் ஒழிய இந்த மாதிரி பிரச்சனைக்கு வழி கிடையாது, ஜன அதிகரிப்பைச் சமாளிக்க குடும்பக் கட்டுப்பாட்டு முறைகளைப் பிரசாரம் செய்ய வேண்டும். நகரங்களில் மட்டுமல்லாமல், கிராமப்பகுதிகளிலும் கூட பிரசாரம் செய்யவேண்டும். இது அரசாங்கத்தின் ஒரு முக்கியமான வேலையாக இருக்கவேண்டும் என்று கூட நான் சொல்லுவேன்.

ஏழ்மை உதவிச் சம்பளம் கொடுப்பதில் எந்த வகுப்பைச் சேர்ந்த ஏழை மாணவனுக இருந்தாலும், அந்த மாணவனுக்குச் சலுகை அளிக்க வேண்டும். ஏழை மாணவர்களை எடுத்துக் கொண்டால், தாங்கள் முன்னுக்கு வரவேண்டும் என்ற ஆர்வத்தோடு, தங்கள் திறமையை உபயோகித்து முயற்சி செய்து படிக்கிருர்கள். திறமை அதிகமாக இருந்தால் அத்தனைக்கு அத்தனை ஏழ்மையிலிருந்து வெளியேற வேண்டும் என்ற ஆத்திரம் என்று புரிந்துகொள்ள வேண்டும். ஆகவே எல்லா ஏழை மாணவர்களையும், வகுப்பு வித்தியாசம் பாராட்டாமல் ஒரே விதமாகப் பாவிக்கவேண்டும். அவர்களுடைய திறமைக்கேற்றவாறு சம்பளச் சலுகை அளிக்கவேண்டும். எந்த வகுப்பைச் சேர்ந்தவர்களாயிருந்தாலும், திறமையுள்ள மாணவர்களை முன்னுக்கு வர உதவுவது ஒவ்வொரு அரசாங்கத்தின் கடமையாகும். வகுப்புவாரி வித்தியாசம் பாராட்டாமல், 100 ரூபாய் குறைந்த வருமானமுள்ளவர்கள் ஏழைகள் என்று வைத்துக்கொண்டால் பிரதிபக்ஷமின்றி உதவிச்சம்பளம் அளிக்கவேண்டும்.

அடுத்தபடியாக உணவு உற்பத்தியைப் பெருக்க எடுத்துக் கொள்ள வேண்டிய முயற்சிகளைப்பற்றிச் சொல்லியிருக்கிருர்கள். நல்ல உயர் ரக வித்துக்களையும், இரசாயன உரங்கள், பிண்ணுக்கு, தழை உரம் முதலியவைகளை உபயோகித்து வெளி உதவிகள் இல்லாமலேயே உணவு பற்ருக்குறையை பெரிதளவு குறைக்கலாம் என்று எடுத்துக் கூறியிருக்கிருர்கள். உள்நாட்டு வசதிக் குறைவை ஈடுகட்டுவதற்கும் வேண்டிய நடவடிக்கைகளை எடுத்துக் காட்டியிருக்கிருர்கள். . எல்லா நல்ல அம்சங்களும் அடங்கிய இந்த வரவு செலவுத்திட்டத்தை நான் மனப்பூர்வமாக வரவேற்கிறேன்

**Sri G. GOMATHISANKARA DIKSHITAR:** சபாநாயகர் அவர்களே, பொருளாதார நிபுணர்கள் போற்றக்கூடிய வகையிலே நமது நிதி மந்திரி அவர்கள் வரவு செலவுத் திட்டத்தை, நாம் எல்லோரும் போற்றக்கூடிய முறையிலே தயாரித்து இருப்பதைப் பாராட்டி இரண்டொரு வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இந்த வரவு செலவுத் திட்டத்தை, எதிர்க் கட்சியிலுள்ள அன்பர்கள், உண்மையாகவே ஆக்க மனப்பான்மையோடு கவனிப்பார்களேயானுல், அதிலுள்ள நல்ல அம்சங்களை வரவேற்பார்கள் என்று நம்புகிறேன். இந்த வரவு செலவுத் திட்டம் தயாரித்திருப்பதிலே நமக்கு பல குறைகள் இருக்கலாம், தேவைகள் இருக்கலாம்.

ஆக்கமுறையிலே அரசாங்கத்தினிடம் அறிவித்தோமானால், அக்குறைகளை நீக்க அரசாங்கம் வேண்டிய முயற்சிகளைச் செய்யுமென்று நம்புகிறேன்.

**(Deputy Speaker in the Chair).**

4–20 p.m. இந்த பட்ஜெட் தயார் செய்யப்பட்ட சமயத்திலே விலைவாசியினால் மக்கள் கஷ்டப்பட்டு வந்தார்கள். இப்பொழுது விலைவாசிகள் இறங்கு முகமாக இருப்பதைக் கண்டு நாம் சிறிது சந்தோஷம் அடையலாம். நமக்கு வேண்டிய உணவு உற்பத்திக்கு கடவுள் கிருபையால் பருவ மழை நன்றாக பெய்திருக்கிறது. சில ஜில்லாக்களில் சரியாக இல்லாவிட்டாலும் மற்ற ஜில்லாக்களில் நல்ல முறையில் பருவம் இருக்கிறது. அதன் காரணமாக உணவு உற்பத்தி மிகவும் பெருகும். பற்றாக்குறையை தீர்த்துக் கொள்ளக்கூடிய நிலைமையில் நாம் இப்பொழுது இருக்கிறோம். இப்பொழுது உணவு விலையும் கொஞ்சம் இறங்கிக்கொண்டு வருகிறது. விவசாய அபிவிருத்தியில் நமது அரசாங்கம் மிகவும் கருணையுடன் கவனம் செலுத்திக்கொண்டு வருகிறார்கள். விவசாய அபிவிருத்திக்கு என்று அரசாங்கம் ஒதுக்கி இருக்கக்கூடிய கோடிக் கணக்கான பணத்தை விவசாயிகள் மிகவும் நன்மையை அடையக்கூடிய திட்டங்களுக்கு செலவு செய்து வருகிறார்கள். அதனால் விவசாயிகளுடைய வாழ்க்கைத்தரம் உயரக் கூடிய முறையில் இருக்கிறது. சோஷலிஸ சமுதாய அமைப்பில் நமது அரசாங்கம் கவனம் செலுத்திக்கொண்டு வருவதைப் பார்த்தால் அதைக் கண்டு நாம் எல்லோரும் மகிழ்ச்சிக் கொள்ளக் கூடியதாக இருக்கிறது. அப்படி மகிழ்ச்சி அடைவதற்கும் நாம் கடமைப்பட்டிருக்கிறோம்.

விவசாயிகளுடைய கடன் பளு குறைவதற்கு எவ்வளவோ விவசாயக் கடன் பாங்குகளை நிறுவி இருக்கிறார்கள். கூட்டுறவு முறையில் சுமார் 300 பெரிய கூட்டுறவு பாங்குகள் நிறுவப்பட்டிருக்கின்றன. 60–40 சட்டத்தின் பிரகாரம் விவசாயிகளுக்கு நிலச்சுவான்கள் மூலமாக கடன் பெற முடியாது என்ற நிலைமை ஏற்பட்ட காலத்தில் விவசாயிகளுக்கு கடன் கொடுத்து உதவி செய்வதற்காக கிராமங்களில் பாங்குகளை அமைத்து அவைகளின் மூலமாக கடன் கொடுத்து உதவி செய்து வருகிறார்கள். இதைக் கண்டு விவசாயிகள் மிகவும் திருப்தியான நிலைமையில் தங்களுடைய விவசாயத்தை நடத்தி வருகிறார்கள்.

இத்துடன் அவர்களுக்கு தக்காவி கடன், எருதுகள் வாங்குவதற்கு கடன் இன்னும் நல்ல விதைகள் அவர்கள் பெறுவதற்கு வேண்டிய சௌகரியங்கள் இவைகளையெல்லாம் அவர்களுக்குச் செய்து வருவதால் உணவு உற்பத்தியானது ஒரு நல்ல முறையில் வளர்ந்து கொண்டு வருகிறது என்பதை நாம் கண்டு கொள்ளலாம்.

அது மாத்திரம் அல்ல, தேசீய விஸ்தரிப்பு, சமுதாய அபிவிருத்தி திட்டங்கள் மூலமாக அநேகமாக மூன்றில் ஒரு பங்கு சமுதாய நல திட்டத்தின் கீழ் இப்பொழுது சில கிராமங்கள் வந்திருக்கின்றன. இந்த திட்டங்களின் பயனாக கிராமங்களில் விவசாயிகள் நல்ல விஞ்ஞான முறையில் விவசாயத்தை கண்ணும் கருத்துமாக செய்வதற்கு போதிய கவனம் செலுத்திக் கொண்டு வருகிறார்கள். அப்படி கவனம் செலுத்தி வருவதைப் பார்த்தால் அவர்கள் இப்பொழுது நல்ல முறையில் திருப்தி அடைந்து நல்ல மனப்பான்மையுடன் அவர்கள் இயங்கி வருகிறார்கள் என்பது நன்றாகத் தெரியும். இதை நாம் உண்மையாகவே பார்க்கலாம். ஆனால் குறைகள் இருக்கலாம். அதனால் பாதகம் இல்லை.

மின்சாரம் மூலமாக நமது அரசாங்கம் விவசாயிகளுக்கு எவ்வளவோ நன்மைகள் செய்திருக்கிறார்கள். அதைக்கண்டு 'அரசாங்கம் பெருமைப்படலாம். மின்சார அபிவிருத்தியில் மற்ற ராஜ்யங்களை விட நமது ராஜ்யம் மிகுந்த அளவில் அபிவிருத்தி அடைந்திருக்கிறது. இதை நாம் பெருமையுடன் சொல்லிக் கொள்ளலாம். பெரிய திட்டங்களை நிறுவி லட்சக்கணக்கான ஏக்கர் நிலத்தை விவசாயம் செய்வதற்கு தயார் செய்து அதில் விவசாயிகள் விவசாயம் செய்யும்படியான நிலைமையை ஏற்படுத்தியிருப்பதால் நமது ராஜ்யத்தில் உணவு உற்பத்தி பெருகும். இது விஷயமாக நமது அரசாங்கம் நன்கு கவனம் எடுத்துக்கொண்டு அதற்காக வரவு செலவு திட்டத்தில் பணம் ஒதுக்கி வைத்திருப்பது மிகவும் போற்றத்தக்க

தாகும். மற்றும் பல ஆராய்ச்சி பண்ணைகளையும் அமைத்திருக்கிறார்கள். தற்போது அம்பாசமுத்திரத்தில் நல்ல நெல் ஆராய்ச்சி பண்ணை இருக்கிறது. திருநெல்வேலி ஜில்லாவில் உள்ளவர்கள் நெல் ஆராய்ச்சியில் நல்ல அனுபவம் உள்ளவர்கள். தஞ்சைக்கு அடுத்தபடியாக திருநெல்வேலி ஜில்லாவாசிகளைச் சொல்லலாம். நல்ல ரக நெல்லை திருநெல்வேலி ஜில்லா வில் உற்பத்தி செய்யக்கூடியவர்கள் இருக்கின்றார்கள். தஞ்சை ஜில்லா விற்கு அடுத்தபடியாக அங்கு ஆராய்ச்சி செய்யப்படுகிறது. இன்னும் அதை அபிவிருத்தி செய்வதற்கு நமது அரசாங்கம் கவனம் எடுத்துக்கொள்ள வேண்டும் என்பதை இந்த சந்தர்ப்பத்தில் தெரிவித்துக்கொள்ள விரும்பு கிறேன். அங்கே நடைபெறுகிற ஆராய்ச்சிகளை எல்லா விவசாயிகளும் அறிவதற்கு ஆவன செய்யவேண்டும் என்றும் கேட்டுக்கொள்ளுகிறேன். விவசாயிகள் அப்படி ஆராய்ச்சி பண்ணப்பட்ட என்னென்ன புதுரக விதை களை தயார் செய்யப்படுகின்றன என்பதை அறிவதற்கு அதிகப்படியாக ஒரு பிரசாரம் தேவை என்பதை நான் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

நமது குடிசைத் தொழில்கள் அநேகமாக எல்லா இடங்களிலும் இப்பொழுதுதான் நிறுவப்பட்டு அதன் மூலமாக தொழில் வளம் பெற்று வருகின்றன. நமக்குத் தேவையானது அதிகமாகும். எல்லா கிராமங் களிலும் குடிசைத் தொழில் அபிவிருத்தி செய்வதற்கு மக்கள் மிக ஆவலுடன் முன் வருகிறார்கள். அவர்களுடைய தேவைகளைப் பூர்த்தி செய்வதற்கு நமது அரசாங்கத்திற்கு போதிய வசதி குறைவாகவே இருக் கிறது. எந்தெந்த கிராமங்களுக்கு குடிசைத் தொழில் இன்றியமையாததாக இருக்கின்றனவோ, எங்கேயெல்லாம் குடிசைத் தொழில்கள் தேவையோ அங்கேயெல்லாம் அதைப்பற்றி கவனிக்கப்பட்டு வருகின்றன. இன்னும் அதிகமாக கவனிக்கப்படவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். சில சில இடங்களில் குறைந்த அளவில் ஊதியமும் பெறுகின்றனர். குறிப்பாக எனது தாலுகாவை எடுத்துக்கொண்டால் கைத்தறி நெசவுக்கு மிகவும் வாய்ப்பு இருக்கிறது. ஆயிரக்கணக்கானவர்கள் அந்தத் தொழிலில் ஈடு பட்டிருக்கிறார்கள். அவர்களுடைய சரக்கெல்லாம் இப்பொழுது விலையாகா மல் தேங்கிக் கிடக்கின்றன. அதனால் நமது தொழில் மந்திரி அவர்கள் அவர்களுக்குக் கிடைக்கக்கூடிய $1\frac{1}{2}$ அணா ரிபேட்டை கொடுக்க வேண்டும் என்று முயற்சி எடுத்துக்கொண்டிருக்கிறார். அதன் மூலமாக கைத்தறி நெசவாளர்களுடைய சிறிய கஷ்டம் நீங்கும் என்று நான் நம்புகிறேன்.

அது மாத்திரம் அல்ல. மணிமுத்தார் அணை திட்டத்தின் மூலமாக ஆயிரக்கணக்கான ஏக்கர் நிலங்கள் இப்பொழுது நல்ல முறையில் விவ சாயம் செய்யக்கூடிய நிலைமைக்கு வந்திருக்கிறது. இதைக் கண்டு அங்குள்ள மக்கள் இந்த அரசாங்கத்தை மனமார வாழ்த்தி தங்களுடைய மகிழ்ச்சியையும் தெரிவித்துக்கொள்ளுகிறார்கள். அதற்கு அவர்களும் கடமைப்பட்டிருக்கிறார்கள். அரசாங்கத்தை எவ்வளவோ போற்றுகிறார்கள். ஜலம் இல்லாத இடத்தில் இப்பொழுது ஜலப்பெருக்கு எடுப்பதைக் கண்டு அங்குள்ளவர்கள் ரொம்பவும் ஊக்கத்துடனும், உற்சாகத்துடனும் விவசாயத்தில் ஈடுபட்டு வருகிறார்கள்.

ஆனால், அந்தப் பாசன முறை அங்கு நன்கு வகுக்கப்பட்டு (ஈக்விடபிள் டிஸ்ட்ரிப்யூஷன்) சமமான பாசன ஜலப் பங்கிடுதல் நடைபெறுவதற்கு அங் குள்ள சிவில், எக்ஸிக்யூடிவ் இறிகேஷன் அதிகாரிளும், இன்ஜினீரிங் அதிகாரிகளும் ஆவன செய்யவேண்டுமென்று இந்தச் சந்தர்ப்பத்தில் நான் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

4–20 p.m.

மணிமுத்தாறு அணை கட்டப்பட்டு விட்டது, 25 லட்சம் ரூபாய் பெறுமான கட்டிடங்களும், ரோடு வசதியும், ஜல வசதியும், மின்சார வசதியும் உள்ள அத்தகைய இடத்திலே நல்ல ஒரு தொழிலை அரசாங்கத் தின் உதவியின் மூலமாக அங்கு ஏற்படுத்தினால், திருநெல்வேலி ஜில்லா வாசிகளுக்கு அது ஒரு ஊக்கத்தையும், உற்சாகத்தையும் அளிக்கும் என்று இந்தச் சந்தர்ப்பத்தில் நான் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். கைத்தறி நெசவுக்குப் பெயர் பெற்ற அந்த இடத்தில் கைத்தறி நெசவுக்கு சாயம் போடக் கூடிய தொழிலையும், அச்சடிக்கக் கூடிய தொழிலையும், அதற்கு வேண்டிய ஒரு நல்ல பள்ளிக்கூடத்தையும் நிறுவினால் அனேக கைத்தறி

நெசவாளர்களுக்கு புத்துணர்ச்சியை அளிப்பதாகும். அந்த வகையில் அரசாங்கம் கைத்தறி அபிவிருத்தியை ஊக்குவிக்கும் என்று நான் நம்புகிறேன். இதைப்போல் இன்னும் பல குடிசைத் தொழில்களைத் துவக்குவதற்கு மணிமுத்தாறு பகுதி மிகுந்த லாயக்கான பகுதி என்பதை நான் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

அடுத்தப்படியாக சுகாதார விஷயம். நமது அரசாங்கத்திற்கு எவ்வளவோ பொறுப்பு இருக்கிறது. மக்களுடைய முன்னேற்றப் பாதையிலே நமது காங்கிரஸ் அரசாங்கம் ஆவன செய்து கொண்டுதான் வருகிறது என்பதை இந்தச் சந்தர்ப்பத்தில் நான் தெரிவிக்காமல் இருக்க முடியாது. ஆனாலும், நமக்குத் தேவை அதிகம். பணம் மிகக் குறைவு. ஆஸ்பத்திரிகள் நல்ல முறையிலே பெருக்கப்படவேண்டும். அவைகளுக்குப் போதிய டாக்டர்கள் தேவை. குறிப்பாக கிராமங்களுக்கு மருத்துவச்சாலைகள் மிக மிகத் தேவை. ஆனால், நல்ல டாக்டர்களோ, மருத்துவத்தில் தேர்ச்சி பெற்றவர்களோ, மற்ற வைத்திய சம்பந்தமான ஊழியர்களோ மிகக் குறைவாக இருக்கிறார்கள். அவர்களையெல்லாம் தயார் செய்வதற்கு இன்னும் அதிகமான மெடிகல் காலேஜ்கள் நம் ராஜ்யத்திலே ஏற்படுத்தவேண்டுமென்று இந்தக் சந்தர்ப்பத்தில் நான் தெரிவித்துக் கொள்கிறேன்.

அம்பாசமுத்திரம் தாலூகாவிலே தாம்பிரபரணி பாசனப் பிரதேசம் செழிப்பானது. கன்னடியங்கால் கரையோரத்திலுள்ள மக்கள் சுகாதாரக் குறைவால் தொத்து வியாதியினால் பீடிக்கப்பட்டு சாகின்றவர்கள் மிக அதிகம். இந்த வருஷம் கூட, திருநெல்வேலி ஜில்லாவில் இருக்கக்கூடிய சுகாதார அதிகாரிகள் மிக ஜாக்கிரதையாக இருந்து காலரா நோய் பரவ விடாதபடி கிராமங்கள்தோறும் ஊசி குத்தி (**inoculation**) தடுத்தார்கள். அப்படியிருந்துங்கூட, பாதுகாக்கப்பட்ட குடி தண்ணீர் வசதி (**Protected Water Supply Scheme**) இல்லாததாலே, விக்கிரமசிங்கபுரத்தில் மக்கள் பாதிக்கப்பட்டார்கள். விக்கிரமசிங்கபுரத்தில் ஒரு நூற்பு ஆலை இருக்கிறது. ஆயிரக்கணக்கான தொழிலாளிகள் நிரம்பிய ஊர். அம்பாசமுத்திரம் ஒரு பெரிய பஞ்சாயத்து பிரதேசம். கல்லிடக்குறிச்சி, வீரவணல்லூர், சேரன்மகாதேவி மேஜர் பஞ்சாயத்துக்கள். 20 ஆயிரம் ஜனத்தொகை கொண்ட நகரங்கள். பத்து வருஷங்களுக்கு முன்னால் ஒரு திட்டம் போட்டிருந்தார்கள். அதன்படி, ஐந்து பஞ்சாயத்து போர்டுகளையும் இணைத்து, 25 லட்சம் ரூபாய் செலவில், தாம்பரபரணி கரையோரம் உள்ள ஐந்து ஊர்களுக்கும் சேர்ந்து ஒரு பாதுகாக்கப்பட்ட குடிதண்ணீர் திட்டம் கொண்டுவர இருந்தார்கள். ஆனால், இப்பொழுது நிறைவேற இல்லையென்று இந்தச் சந்தர்ப்பத்தில் நான் தெரிவித்துக்கொள்ளுகிறேன். முக்கியமாக ஆயிரக்கணக்கான தொழிலாளர்கள் இருக்கும் அந்த விக்கிரமசிங்கபுரத்தில் கட்டாயமாக ஒரு பாதுகாக்கப்பட்ட குடி தண்ணீர் திட்டம் செயல்பட வேண்டுமென்று இந்தச் சந்தர்ப்பத்திலே நான் அரசாங்கத்திற்குத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட வேலைகள் நமது ராஜ்யத்திலே திட்டப்படி நடைபெறுவதற்கு இந்த வரவு செலவுத் திட்டத்திலே அதிகமாக நல்ல முறையிலே தொகை ஒதுக்கப்பட்டிருப்பதைக் கண்டு நாம் சந்தோஷப்பட வேண்டும். நமது நாட்டின் முன்னேற்ற வேலைக்கு மனித சக்தியையெல்லாம் திரட்டி, ஆக்க வேலையில் ஈடுபடவேண்டும் என்பதற்காக, இரண்டாவது அல்லது மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டங்களையெல்லாம் கைக்கொள்ள வேண்டிய முறையை நமது இந்திய அரசாங்கத்தின் பிரதம மந்திரி, பண்டித ஜவஹர்லால் நேரு அவர்கள் நமக்கு அடிக்கடி எடுத்துக்காட்டியிருக்கிறார்கள். நமது நாட்டிலே, தன் கையே தனக்கு உதவி என்ற அந்த முறையைக் கடைப்பிடித்து, நமது இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திலுள்ள எல்லாக் காரியங்களையும் நிறைவேற்றுவதற்கு இந்த சிறு சேமிப்புத் திட்டம் மிகவும் நல்ல முறையிலே எடுத்துக்காட்டாக இருக்கின்றதென்பதை நான் அறிவிக்க விரும்புகிறேன். இதன்

3rd March 1958] [Sri G. Gomathisankara Dikshitar]

மூலமாக இந்த இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் நமது ராஜ்யத்திலே வெற்றிபெறும். அதற்கு எல்லோரும் ஆவன செய்ய வேண்டுமென்று நான் தாழ்மையாகக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

நம்முடைய நிதி மந்திரி அவர்கள் இந்த வரவு செலவுத் திட்டத்தை நாம் பெருமைப்படக்கூடிய, தமிழர்களே பெருமைப்படக்கூடிய முறையிலே பற்றுக்குறையை ஈடுகட்டுவதற்கு பொதுமக்களின் தலையில் வரிச்சுமையை வைத்துவிடாதபடி, நல்ல முறையிலே தயாரித்திருக்கிறார்கள் என்றால், அது நாம் மிகவும் போற்றக்கூடியது தான்.

கடைசியில், இந்திய அரசாங்கத்தில் நிதி மந்திரியாய் இருந்த ஸ்ரீ டி.டி. கிருஷ்ணமாச்சாரி அவர்களுடைய சேவையை நாம் மெச்சக் கடமைப் பட்டிருக்கிறோம். பொருளாதாரத்திலே மிகவும் தேர்ச்சி பெற்ற, இந்திய அரசாங்கத்தினுடைய வரவு செலவை நடத்துவதற்கு மிக்க ஆற்றல் கொண்டுள்ள ஒரு நிதி மந்திரி, நமது சென்னை ராஜ்யத்திலிருந்து போய் சேவை செய்தார் என்றால் அதை நாம் போற்றக் கடமைப்பட்டி ருக்கிறோம். அந்த முறையிலே அவருடைய சேவையைப் பாராட்டி நிதி அமைச்சர் அவர்களுடைய உரையில் குறிப்பிட்டிருக்கிறார். அதை நாம் அனைவரும் நல்ல முறையிலே, சமரசமான முறையிலே, அரசியல் கண் ணோட்டத்தை விட்டு விட்டு, கவனித்தோமானால், அந்தப் பாராட்டுதலிலே நாமும் பங்கெடுத்துக்கொள்ளக் கடமைப்பட்டிருக்கிறோம் என்ற முடிவுக்கு வருவோம். கனம் நிதி அமைச்சர் அவர்கள் சமர்ப்பித்த வரவு செலவுத் திட்டத்தை நான் ஆதரித்து, இத்துடன் என்னுடைய உரையை இப் பொழுது நிறுத்திக்கொள்ளுகிறேன்.

**Sri M. P. SUBRAMANIAM :** சட்ட மன்றத் துணைத் தலைவர் அவர் களே, வரவு செலவுத் திட்டத்தின் மேல் இன்று தொடங்கியிருக்கும் விவா தம் இந்த மாதம் முழுவதும் நடைபெறும் என்பதை நாம் நன்றாக அறிவோம். இந்த விவாதத்தில் கலந்துகொள்ளுகிற உறுப்பினர்களு டைய கருத்துக்களை, கருத்துக்கள் என்று சொல்லும்போது, குறைபாடு களையும் பார்க்கும்போது கடந்த ஆண்டு இந்த அவையின் உறுப்பினர்கள் என்ன குறைபாடுகளையும், குறைகளையும் தெரிவித்தார்களோ அவைகளையே தான் பெரும்பாலும் இன்றைய விவாதத்திலே நாம் பார்க்கிறோம். கடந்த ஐந்து, ஆறு ஆண்டுகள் சட்ட சபையிலே இருந்த அனுபவத்திலிருந்து நான் கூறவேண்டுமானால் ஒவ்வொரு உறுப்பினரும் தங்கள் தங்களுடைய தொகுதியிலோ அல்லது குறிப்பிட்ட இலாக்காகளிலோ காணப்படுகிற குறைகளை சட்டசபையிலே திரும்பத் திரும்ப கூறினாலும், அப்படி உறுப்பினர்களால் கூறப்படுகிற குறைபாடுகளும் குறைகளும் தீர்க்கப்படவில்லை என்பதோடு மட்டும் அல்லாமல், அவைகளின் பேரில் அரசாங்கத்தின் கருத்துக்கள் என்ன என்பதைத் தெரிந்துகொள்ள மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களுக்கு வாய்ப்பும் வசதியும் இல்லாமல் இருக்கிறது. அரசாங்கத்தின் சார்பில் அமைச்சர்களாய் வீற்றிருப்பவர்கள், உறுப்பினர் கள் கூறக்கூடிய ஒவ்வொன்றுக்கும் பதில்கூற முடியாது என்பதை நான் உணருகிறேன். ஆனால், கூறுகிற குறைபாடுகளை நல்ல முறையிலே கவனித்து, சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்கோ இலாகாக்களுக்கோ அனுப்பி, பதில்களை வாங்கி அந்தந்த உறுப்பினர்களுக்கு அனுப்பினால், தேர்ந்தெடுக்கப் பட்ட உறுப்பினர்கள் மக்களுக்குச் செய்ய வேண்டிய கடமைகளை நிறைவேற்று வதற்கு முடியும். அதுதான் சட்டசபையினுடைய கௌரவத்துக்கும் ஒத் ததாகும் என்று நினைக்கிறேன். இந்த வாக்குறுதியை கடந்த ஐந்தாண்டு காலத்திலே மராமத்து இலாகா மந்திரியாக இருந்த ராமநாதபுரம் ராஜா அவர்கள் அளித்தார்கள். ஆனால் அந்த வாக்குறுதி இன்றும் நிறை வேற்றப்படவில்லை. அந்த வாக்குறுதியை இந்த அமைச்சரவை நிறை வேற்ற வேண்டும் என்பது எனது பொதுவான அபிப்பிராயமாகும்.

4–40 p.m.

இந்த ஆண்டின் வரவு செலவு திட்டப் பிரசங்கத்தை எடுத்துக் கொள் வோமானால் அது சாதாரணமாக ஆண்டு அறிக்கையைப் படிப்பது போலத் தான் அமைந்திருக்கிறது என்று சொல்ல வேண்டியிருக்கிறது. கடந்த

ஆண்டில் செய்தது என்ன, அதை எவ்வாறு இவ்வாண்டும் செய்வது என்பதான ரீதியில் நிதி அமைச்சருடைய பேச்சு அமைந்துவிட்டது என்பதைக் கூறவேண்டும். இவ்வாண்டு வரவு செலவுத் திட்டத்தை 15 லட்சம் உபரி வரவு செலவுத் திட்டமாக அவர்கள் சமர்ப்பித்திருக்கிறார்கள். நான் 15 லட்சம் ரூபாய் உபரி என்பதை மகிழ்ச்சிக்குரிய விஷயமாக எடுத்துக் கொள்ளவில்லை. சாதாரணமாக குடும்பங்களின் வரவு செலவுத் திட்டத்தை வரவு எவ்வளவு என்பதைக் கணக்கில் கொண்டு செலவை நிர்ணயம் செய்வது பொருந்தும். நாட்டின் வரவு செலவுக் கணக்கை அந்த ரீதியில் தயாரிப்பது அறிவுக்குப் பொருத்தமானது இல்லை. செலவுகள் என்ன என்ன செய்யப்படவேண்டும் என்பதை நிர்ணயம் செய்துகொண்டு அதற்கு ஏற்றபடி வருவாயைக் கண்டுபிடிப்பது தான் சரியான முறையாகும். ஆனால் இவ்வாண்டு நிதி அமைச்சர் அவர்கள் உபரி வரவு செலவுத் திட்டமாக அமைக்க வேண்டும் என்பதற்கு அத்தியாவசியமான செலவுகளைக் கூட விட்டிருக்கிறார்கள். அவரது வரவு செலவுத் திட்ட பிரசங்கம் நாட்டின் நிலைமையை சரியான முறையில் பிரதிபலிப்பதாக இல்லை. நாட்டின் தேவைகளை நன்கு உணர்ந்து, மக்களுடைய குறைகளை நிவர்த்தி செய்வதற்கு அமைச்சர் அவை அக்கரை கொஞ்சங்கூட எடுத்துக் கொள்ளவில்லை என்று கூறுவேன். உதாரணமாக பேப்பரில் பார்த்து வருகிறோம். மார்ச் 13, 14-ந் தேதிகளில் மின்சார இலாகா ஊழியர்கள் வேலை நிறுத்தம் செய்யப்போவதாக அறிக்கை வெளியிட்டிருக்கிறார்கள். அந்த அறிக்கை பேப்பர்களில் வந்திருக்கிறது. உறுப்பினர்களுக்கும் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதில் 16 கோரிக்கைகளை வைத்திருக்கிறார்கள். அந்தக் கோரிக்கைகள் இன்று நேற்று இருப்பது அல்ல, 11 ஆண்டு காலமாக அரசாங்கத்திற்கு அவர்கள் அந்தக் கோரிக்கைகளை விடுத்துக் கொண்டிருக்கிறார்கள். மூன்று முறை அவர்கள் வேலை நிறுத்தம் நோட்டீஸ் கொடுத்து அரசாங்கத்தின் நல்லெண்ணத்தின் காரணமாக வாபஸ் பெற்றிருக்கிறார்கள். அவர்களுடைய கோரிக்கைகள் அடாபிடியானது இல்லை. மிகவும் நியாயமானது என்பதை எல்லோரும் ஒப்புக்கொள்வார்கள். ராமநாதபுரம் ராஜா அவர்கள் அந்த இலாகா அமைச்சராக இருந்தபோதும் இரண்டு முறை அவை நியாயமானது என்பதை ஒப்புக்கொண்டிருக்கிறார். 40 ஆயிரம் தொழிலாளர்கள், 30 ஆயிரம் தொழிலாளர்கள் நிரந்தரமாக்கப்படாமல் டெம்பரரியாகவே பலகாலமாக வைத்திருக்கப்படுவது மிகவும் அநீதியானது. அவர்கள் நிரந்தரமாக்கப்படாமல் இருப்பதற்குக் காரணம் என்ன? அந்த இலாகா வெகு விரைவில் கலைக்கப்படும் என்கிற எண்ணமா? நாளுக்கு நாள் அது விரிவடைந்துகொண்டே இருக்கிறது. அப்படியிருக்க உடனடியாக அந்த ஊழியர்களை நிரந்தரம் செய்வதற்கு என்ன சங்கடம் இருக்கிறதுஎன்பது தான் தெரியவில்லை. அதுமட்டுமின்றி பத்தாயிரத்திற்கு மேற்பட்ட தொழிலாளர்களுக்கு நாள் ஒன்றுக்கு ஒரு ரூபாய் நான்கணா வீதம் பஞ்சப்படி கூட இல்லாமல் வைத்திருப்பதும் க்ஷேம நல அரசாங்கத்தை நிர்மாணிக்கப் போகிறோம் என்பவர்களுக்கு, சமதர்ம சமுதாயத்தை சமைக்கப் போகிறோம் என்பவர்களுக்கு உகந்தது அல்ல என்று கூற விரும்புகிறேன். இந்த அரசாங்கத்தின் மூன் அவர்கள் தங்கள் நியாயமான கோரிக்கைகளை வைத்தபோது மின்சார போர்டு அமைய இருக்கிறது. இவ்விஷயங்களை அந்த போர்டு கவனிக்கும் என்று அரசாங்கத்தரப்பிலிருந்து சொல்லப்பட்டது. அவர்களைக் கேட்டால் அரசாங்கம்தான் முடிவு செய்ய வேண்டும் என்கிறார்கள். இவர்களிடம் கேள்வி கேட்டால் போர்டு சுதந்தரமானது, அவர்கள் முடிவு செய்யலாம் என்பதும், அவர்களைக் கேட்டால் அரசாங்கம் தான் முடிவு செய்ய வேண்டும் என்பதும் ஆக இருந்தால் பல்லாயிரக்கணக்கான தொழிலாளர்களுடைய நிலைமை என்னவென்பதை யோசித்துப் பார்க்க வேண்டும். இன்றையதினம் தொழிலாளர்களோடு கலந்து பேசி கன்ஸிலியேஷன் செய்து வைக்க முன் வந்திருக்கிறார்கள் என்று தெரிகிறது. அவைகளைத் தீர்த்து வைப்பதற்கு அரசாங்கம் தொழிலாளர்களிடத்தில் கன்ஸிலியேஷன் நடத்துவது இதுதான் முதல் தடவை என்று நான் அறிகிறேன். கன்ஸிலியேஷன் முடியும் மட்டும் வேலை நிறுத்த நோட்

3rd March 1958] [Sri M. P. Subramaniam]

டிசை வாபஸ் வாங்கவேண்டுமென்று சொல்லியிருக்கிறார்கள். ஆனால் இவர்கள் எந்த முறையில் நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்போகிறார்கள் என்பதைப் பற்றி எதுவும் சொல்லவில்லை.

அதோடுமட்டுமல்ல. நமது ராஜ்யத்திலுள்ள என். ஜி. ஓக்களுடைய குறைகளைப் பார்க்கிறோம். தங்களுடைய குறைபாடுகளைத் தெரிவித்துக் கொள்வதற்கு அவர்கள் கொண்டாடாத கண்டன நாட்களே கிடையாது. அவர்கள் அணியாத பாட்ஜுகளே கிடையாது. அவர்கள் அனுசரிக்காத எதிர்ப்பு தினங்களே இல்லை என்று சொல்ல வேண்டும். அவர்களு டைய குறைகளை உண்மையிலேயே கவனித்து நிவர்த்தி செய்வதற்கு இந்த சர்க்கார் எவ்வித பெரு முயற்சியும் எடுத்துக் கொண்டதாகத் தெரிய வில்லை. என். ஜி. ஓ. குழந்தைகளுக்கு பத்தாவது வரை இலவசமாகப் படிப்பதற்கு வசதி செய்து கொடுத்திருக்கிறோம் என்று சொல்லலாம். இதனால் ஒருசிலர் பயன் அடையலாமே தவிர பெருவாரியான பேர் களுக்கு நன்மை அளிக்கப்போவதில்லை. மத்திய அரசாங்கம் என்றாலும், மாகாண அரசாங்கம் என்றாலும் ஒன்றுதான். வங்காளமாக இருந்தா தால் தான் என்ன, ஒரிஸாவாக இருந்தால்தான் என்ன, கேரளமாக இருந்தால்தான் என்ன, சென்னையாக இருந்தால்தான் என்ன என் பதாக இதர விஷயங்களில் சமத்துவத்தைப் பேசுகின்ற சர்க்கார், இவை எல்லாம் பாரதத்தின் அங்கம் என்று சொல்கிற சர்க்கார் சென்னையில் உள்ள மத்திய அரசாங்கத்தின் ஊழியர்களுடைய சம்பளம் என்ன அலவன்சு என்ன, சென்னை அரசாங்கத்தின் ஊழியர்களுடைய சம்பளம் என்ன அலவன்சு என்ன என்பதைப் பரிசீலனை செய்து இரண்டுக்கும் இடையே யுள்ள பெரும் வேறுபாடுகளைக் குறைந்த அளவில் அலவன்சாக ஒன்றாக இருக்கும்படி செய்ய எவ்விதமான நடவடிக்கையும் எடுக்காதது மிகவும் வருந்த வேண்டிய விஷயமாகும். குறிப்பாக இன்றைய தினம் மத்திய அரசாங்கத்தால் அமைக்கப்பட்ட கமிஷன் 5 ரூபாயிலிருந்து 7 ரூபாய் வரையில் மாகாண அரசாங்க ஊழியர்களுடைய அலவன்சும் உயர்த்தப் பட வேண்டும் என்பதாக சிபார்சு செய்திருப்பதாகத் தெரிகிறது. ஆனால் இதற்காக 6 கோடி ரூபாய் ஒதுக்கியிருப்பதாகவும் சொன்னாலும் கூட இவர்கள் ஊழியர்களுடைய நலனைக் கருதி 5 ரூபாய் கூட அதிகப் படுத்த முன் வராதது மிகவும் வருந்த வேண்டிய விஷயமாகும்.

இன்னொரு விஷயம். ஒராசிரியர்களுடைய நிலைமையைப் பற்றியது. சட்டசபையில் அதைப்பற்றி பல கேள்விகள் கேட்கப்பட்டன. இரண்டாண்டு மூன்றாண்டு அநுபவம் பெற்றவர்களை மற்றவர்களைப்போல இப்போது ஆசி ரியர் பயிற்சிப் பள்ளியில் சேர்ந்து இரண்டாண்டு பயிற்சி பெற வேண்டும் என்று சொன்னார்கள். இந்த இரண்டாண்டு காலத்தில் அவர்கள் முன்பு வாங்கிக் கொண்டிருந்த சம்பளமாவது கொடுக்கப்பட வேண்டும் எனச் சொல்லப்பட்டது. பயிற்சி பெற்று வந்த பிறகு அவர்களுடைய முந்திய சர்வீஸ்களும் கணக்கில் எடுத்துக் கொள்ளப்பட வேண்டும் என்று சொல் லப்பட்டது. சில மாதங்களுக்கு முன்பு அவர்களுடைய குறைகள் சம் பந்தமாக நிதி அமைச்சர் அவர்கள் கொடுத்த வாக்குறுதியும் கூட நிறைவேற்றப்பட வில்லை. அதைப்பற்றி திரும்ப இவர்கள் ஆலோசனை செய்தார்களா என்பது தெரியவில்லை.

சாதாரணமாக நிதி அமைச்சர் அவர்கள் தம்முடைய வழக்கமான முறையில் தம் பிரசங்கத்தை பருவ நிலையில் இருந்து ஆரம்பித்து நன்றி தெரிவிக்கும் வரையில் முடித்துவிட்டார்கள். குறிப்பாக "தென்மேற்குப் பருவ மழை உரிய காலத்தில் ஆரம்பமாயிற்று. ஆயினும் இது சதாரணமாக பெய்யும் அளவிற்கு 20 சத விகிதம் குறைவாக, சராசரி 9·7 அங்குலம்தான் பெய்தது. இந்தப் பருவத்தில் மத்திய மாவட்டங்களான திருச்சி, சேலம், கோயம்புத்தூர் ஆகியவற்றில் போதுமான மழை பெய்யவில்லை" என்று சொல்கிறார். அதற்குப் பிறகு "ஆனாலும் விளைச்சலைப் பாதிக்கும் அளவுக்கு மோசமில்லை" என்கிறார்.

4–50 p.m.

இது, எதைக் குறிப்பிடுகிறது? உணவு நிலைமை திருப்திகரமாக இருக்கிறது என்பதைக் குறிப்பிடுகிறதா? உணவு தானிய விலைகளின் மொத்த குறியீட்டு எண் 1956-ம் ஆண்டு ஜுலையில் 377 ஆக இருந்தது,

ஆறு மாதத்தில் அது உயர்ந்து 494 ஆக இருந்தது, பிறகு 1957 மார்ச்சில் 470 ஆக குறைந்தது என்றெல்லாம் புள்ளிவிவரங்கள் தரப்படுகிறது அமைச்சர்களால். 1957–ல் 512–ல் நின்றது என்றும் கூறப்படுகிறது. அதோடு, பற்றுக்குறையின் காரணமாக இந்த உயர்வு'' ஏற்படவில்லை என்றும் கூறப்படுகிறது. நான் சொல்ல விரும்புவது, இந்த நிலைமை உண்மையானதல்ல. அதாவது, புள்ளிவிவரங்களைக் காட்டி நமது நிலைமை நல்லது என்றும் பற்றுக்குறை இல்லை என்றும் கூறலாமே தவிர, நாட்டின் நிலைமைமையைக் காட்டி கூறமுடியாது. புள்ளி விவரங்களை காட்டி மக்களை ஏமாற்ற முடியாது. மேலும் இந்த புள்ளி விவரங்கள் தவறு என்பதை எனனுல் சுட்டிக் காட்ட முடியும். 1950–51–ல் நமது விளைச்சல் 28 லட்சம் டன்தான் என்றும், முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின் முடிவில் அந்த 28 லட்சம் டன்னை 44 லட்சம் டன்னுக உயர்த்தி விட்டோம் என்றும் அறிக்கையில் சொல்கிறுர்கள். அதை, நாட்டு மக்களுக்கு எட்டின் மூலம் எடுத்துக் காட்டுகிறுர்கள். ஆனல் விலைவாசியின் குறியீட்டு எண் 512 என்றும் சொல்லப்படுகிறது. இந்த புள்ளி விவர கணக்குகளை எடுத்துக்கொண்டால், கிராமங்களில் உள்ள அதிகாரிகள் கொடுக்கக் கூடிய புள்ளி விவரங்கள் எவ்வளவு உண்மை என்பதை கிராமப் புறங்களில் உள்ள மக்கள் நன்கு அறிவார்கள். கிராம அதிகாரி கணக்குப் பிள்ளையைக் கூப்பிட்டு, இங்கு எவ்வளவு நெல் விளைகிறது, எவ்வளவு சோளம் விளைகிறது, எவ்வளவு கம்பு விளைகிறது என்று பார்த்து வரச் சொல்லி அவர் கொடுக்கிற கணக்கை சர்க்காருக்கு அனுப்பி வைக்கிறுர். சர்க்காரும் அதைத்தான் புள்ளிவிவரமாக கொடுக்கிறுர்கள். அதிலிருந்து இந்த புள்ளி விவரங்களின் உண்மை நிலை என்ன என்பதை நாம் அறியமுடியும். மேலும் அந்த கிராம அதிகாரிகளுக்கோ நல்ல ஊதியம் கொடுப்பதில்லை. அவர்கள் ஏதோ கணக்கு கொடுக்கிறுர்கள். அதை சர்க்கார் புள்ளி விவரமாக தருகிறுர்கள். அவர்களே நேரில் சென்று, காடுகளிற்கும், வயல்களுக்கும் சென்று புள்ளி விவரம் எடுப்பது கிடையாது. ஆக, சர்க்காருக்கு அது தெரிந்து இருந்தும் கூட நாட்டு மக்களின் நம்பிக்கையை பெற வேண்டுமென்ற காரணத்திற்காக இப்படிப்பட்ட புள்ளிவிவரங்களைக் காட்டி மக்களை ஏமாற்றப் பார்க்கிறுர்கள். புள்ளி விவரங்களைப் பற்றி பேசத் தெரியாது என்று எதிர்கட்சிக்காரர்களைப் பார்த்துச் சொல்கிறுர்கள். எது எப்படியாயினும், இந்த உணவு உற்பத்தி நிலையைப் பொறுத்தவரையில் இந்த புள்ளிவிவரங்கள் நம்பத்தக்கதல்ல என்பது அமைச்சர்களின் கூற்றுகளில் இருந்தே தெரிகிறது. மத்திய அரசாங்க அமைச்சர் ஒரு விதம் சொல்கிறுர்கள், நமது நிதியமைச்சர் ஒருவிதம் சொல்கிறுர்கள், மற்ற அமைச்சர்கள் இன்னெருவிதம் சொல்கிறுர்கள். இதில் எது உண்மை? எதை நம்புவது? ஒன்றுக்கு ஒன்று முரணுக இருக்கிறது. அந்த அளவிற்கு நமது நிலைமை இருக்கிறது. அதுபோது, உணவு உற்பத்தியை பெருக்குவதற்கு அரசாங்கம் என்னென்ன நடவடிக்கைகள் எடுத்திருக்கிறது, அல்லது எடுத்து வருகிறது என்று பார்ப்போமேயானுல் அதுவும் மோசமாகத்தான் இருக்கிறது. சென்ற ஆண்டு விவசாய அபிவிருத்திக்காக, நீர்த்தேக்கங்களுக்காக ஒதுக்கப்பட்ட தொகையில் இருந்து ஒரு கோடி ரூபாய் இவ்வருடம் குறைக்கப்பட்டிருக்கிறது என்று அறிக்கையில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. அதற்குக் காரணம், பெரிய நீர் தேக்கத்திட்டங்களை எடுத்துக்கொள்ள நம் மாகாணத்தில் ஆறுகள் இல்லை என்று சொல்கிறுர்கள். கேரள ராஜ்யத்தோடு பேச்சு வார்த்தைகள் நடத்த வேண்டியிருக்கிறது வேறு பல திட்டங்களை மேற்கொள்ள பரம்பிக்குளம் திட்டம் பற்றி கேரள ராஜ்யத்தோடு பேச்சு வார்த்தை நடந்து கொண்டிருக்கிறது. அது நிறைவேறலாம் என்றும் இருக்கிறது. சிறிது காலதாமதமாயிருக்கலாம். பின்னர், சிறு நீர்பாசனத் திட்டங்களைப் பொறுத்தவரையில், அத்திட்டங்களை எடுத்துக் கொள்ள மத்திய அரசாங்கத்திலிருந்து இந்த அரசாங்கத்திற்கு தாக்கீது வந்திருப்பதாக கேள்விப்படுகிறேம். சிறு நீர்ப்பாசனத் திட்டங்களை எடுத்துக்கொள்ள வழி வகையில்லையா என்றுல், ஒவ்வொரு மாவட்டத்தையும் எடுத்துக் கொண்டால் கலெக்டர் ஆபீஸில் ஆறு மாதத்திற்கு ஒரு முறை நீர்ப்பாசன மகாநாடு கூட்டப்படுகிறது. அந்த மகாநாடுகளில்

ஏறக்குறைய ஆயிரக்கணக்கான விண்ணப்பங்கள் வருவதுண்டு, குளங்களை ஆழப்படுத்த வேண்டும் என்றும், புதிய குளங்கள் வெட்ட வேண்டும், கிணறுகள் ஆழப்படுத்தப்பட வேண்டும், புதிய கிணறுகள் வெட்ட வேண்டும் என்றெல்லாம் கேட்டு ஆயிரக்கணக்கில் விண்ணப்பங்கள் வருகின்றன. மகாநாடுகள் நடைபெறுகிறதேயொழிய அவைகளினால் உருப்படியான ஆலோசனைகள் கூறமுடியவில்லை. அந்த விண்ணப்பங்களுக்கும் பதில் கூற முடியவில்லை. நிலைமை இப்படியிருக்கிறது. அடுத்த வருடமாவது அதற்கு நல்லதொரு பதில் கிடைக்குமா என்றால் அதுவும் கிடையாது. ஒரு குறிப்பிட்ட பிரச்னையைச் சொல்கிறேன். 1952–ல் எழுந்த ஒரு ஏரிக்கட்டு பிரச்னையை 1957 கழிந்த பிறகும் திறந்து வைக்க முடியவில்லை. அது, மந்திரிகளுக்கு வர வேண்டிய காரியம் இல்லை. அதிகாரிகளே தீர்க்க கூடிய பிரச்னைதான். எனினும் அது தீர்த்து வைக்கப்படவில்லை. அதற்கு சொல்லப்படும் காரணம் என்னவென்றால், பி.டபிள்யூ. டி. என்ஜினியருக்கு வேலை நிறைய இருக்கிறது என்று காரணம் சொல்கிறார்கள். குளங்களில் தூர் வாருவது சம்பந்தமாக செங்கல்பட்டில் முதல் வேலையாக தொடங்கியிருக்கிறார்கள். அங்கு தூர் வாரும் அனுபவத்தை வைத்துக்கொண்டு சேலத்தில் தூர் வார முடியாது. ஆகவே, ஒவ்வொரு இடங்களிலும் தூர் வாருவதற்கும், குளங்கள் வெட்டவும், அவைகளை செப்பனிடவும், ஏரிகள் கட்டவும் பணம் ஒதுக்கப்பட வேண்டும். அடுத்தப்படி, உரம் வினியோகம் செய்வதில், கடந்த ஆண்டு ஒன்றரை லட்சம் டன் உரம் கொடுத்ததாகச் சொல்கிறார்கள். இந்த ஆண்டு அது குறைக்கப்படலாம் என்று சொல்லப்படுகிறது, அறிக்கையில். மத்திய அரசாங்கம் வெளி நாடுகளில் இருந்து உரம் இறக்குமதி செய்யப் போவதில்லை என்று காண்கிறது. கடந்த ஆண்டில் வாக்குறுதி கொடுத்திருந்த அளவு வரவில்லை என்றால் அது மாத்திரம் வர வழைக்கப்படலாம். இந்த ஆண்டு இறக்குமதி செய்யப் போவதில்லை என்றும், போன ஆண்டு கொடுக்கப்பட்ட உரம் இவ்வாண்டு குறைக்கப்படும் என்பதற்குள்ள அறிகுறியும் இதில் காணப்படுகிறது. விவசாயத்திற்காக வேண்டிய உரம் சப்ளை செய்யாவிட்டால் உற்பத்தியை எப்படி பெருக்க முடியும் என்று நான் கேட்கிறேன். அதோடு ஒவ்வொரு மாவட்டத்திலும் தரிசு நிலங்கள் தாராளமாக கிடக்கிறது. அப்படிப்பட்ட தரிசு நிலங்களை நிலம் இல்லாத ஏழைகளுக்கு கொடுக்கவேண்டுமென்று கூக்குரல் இருந்துகொண்டேயிருக்கிறது. அப்படி அந்த தரிசி நிலங்களை நிலம் இல்லாத ஏழைகளுக்கு வழங்க ஏதாவது திட்டம் இருக்கிறதா, அல்லது அதற்கு வேண்டிய வேலைகள் துவங்கப்பட்டிருக்கிறதா? என்றால் அதற்கு வேண்டிய வேலைகள் துவங்கப்பட்டிருக்கிறது, மகிழ்ச்சி. ஆனால் அந்த நிலங்களை யாருக்கு கொடுக்கப்போகிறார்கள். அவர்கள் நிலம் இல்லாத ஏழைகளா? அப்படி நிலம் வினியோகம் செய்யும் போது அது நல்ல முறையில் செய்யப்படவேண்டும். தக்காவி கடன் கூட பெறுவதற்கு அவர்கள் அருகதையில்லாவிட்டால் அவர்கள் எப்படி விவசாயம் செய்ய முடியும்? அவர்கள் தங்கள் கையில் இருக்கும் நகைகளை விற்றோ அல்லது தங்கள் நிலத்தை அல்லது வீட்டை அடகு வைத்தோ சாகுபடி செய்கிறார்கள் என்று வைத்துக் கொண்டாலும் ஒரு முறை அது சாவியாகப் போய் விட்டால் அவர்கள் அவர்களது ஊரை விட்டே ஓட வேண்டிய நிலைமை ஏற்படுகிறது? ஏனெனில் கடன் வாங்கியிருக்கும் பணத்தை திரும்பக் கொடுக்க பணம் இல்லாமல் கடன் கொடுத்தவர்களுக்கு பயந்து ஊரை விட்டே ஓட வேண்டிய நிலை ஏற்படுகிறது. அது பற்றி இந்த சட்டசபையிலே பல முறை பேசப்பட்டிருக்கிறது. அரசாங்கம் அது குறித்து ஆலோசனை செய்து அதற்கு வேண்டிய ஒரு நடவடிக்கையும் எடுத்துக் கொள்ள முயற்சி செய்யவில்லை. நிலம் இல்லாத விவசாயிகளுக்கு கூட்டுறவு விவசாயம் சிறந்தது என்று சொன்னார்கள். கூட்டுறவு விவசாய முறையை ஒவ்வொரு சமுதாய அபிவிருத்தி திட்டத்திலும் ஏற்படுத்துவோம் என்று அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். நான் கேட்கிறேன், இதுவரையில் அப்படி எத்தனை எத்தனை திட்டங்கள் ஏற்படுத்த முயற்சி செய்யப்பட்டிருக்கிறது? சேலத்தில் கூட்டுறவு விவசாயத்திற்காக என்று ஒரு 5,000 ஏக்கர் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது

எப்பொழுது என்றால், குமாரஸ்வாமி ராஜா அவர்கள் சென்னை முதன் அமைச்சராக இருந்தபோது அதை நேரில் பார்த்து நல்ல நிலவளமும் நீர் வளமும் உள்ளது, கூட்டுறவுப் பண்ணைக்கு லாயக்கானது என்று சொல்லி விட்டுப் போய் எத்தனையோ அமைச்சர்களும் எத்தனையோ அதிகாரிகளும் பார்த்து விட்டுப் போயும் கூட இன்னும் அத்திட்டம் உருவாக்கப்படவில்லை. அந்த மாவட்ட கலெக்டர் ஒரு அபிப்பிராயம் சொல்கிறார், அங்குள்ள விவசாய அதிகாரி ஒரு அபிப்பிராயம் சொல்கிறார், அங்குள்ள போலீஸ் அதிகாரி குற்றவாளிகளைக் கொண்டே விவசாயம் செய்யலாம் என்று ஒரு அபிப்பிராயம் சொல்கிறார். ஆனால் அந்தத் திட்டமானது அரசாங்கத்தின் கவனத்தை ஈர்ந்ததாகவே தெரியவில்லை. இப்படி இருந்தால் எப்படி உணவு உற்பத்தியைப் பெருக்க முடியும் என்று அறிய விரும்புகிறேன். அதோடு மட்டுமல்ல. இங்கு பெரிய தொழிற்சாலைகள் ஏற்படுத்த வசதி வாய்ப்பு இல்லை என்று சொல்கிறார்கள். உதாரணமாக நெய்வேலி நிலக்கரித் திட்டத்தை எடுத்துக் கொண்டால், இன்னும் பத்து ஆண்டுகள் கழிந்த பிற்பாடாவது அது உருப் பெறும் என்பதை அறிய மகிழ்ச்சி அடைகிறேன். ஆனால், வட நாட்டில் என்ன நடக்கிறது என்று பார்த்தால், கடந்த ஆண்டு பத்திரிகையில் ஒன்றுமே வந்திருக்காது. ஆனால் இந்த ஆண்டில் 50 லட்சம் ரூபாய் மூலதனத்தோடு 40 லட்சம் டன் உற்பத்தியாகும் ஒரு தொழிற்சாலை ஏற்படுகிறது என்பதை பத்திரிகைகளில் பார்க்கிறோம். ஆனால் நெய்வேலியில் ஒரு திட்டம் தொடங்க பத்து ஆண்டுகளாக எக்ஸ்ஸாமினேஷன் செய்தார்கள். பின்னர் தான் வேலை துவங்கியிருக்கிறது. அத்துடன், தமிழகத்திற்கு, தென்னிந்தியாவிற்கு நெய்வேலி திட்டம் வந்து விட்டது என்று பெருமையுடன் பேசிக் கொள்கிறோம். அதையொட்டி சேலத்தில் ஒரு இரும்பு தொழிற்சாலை ஏற்படுத்தப்படும் என்று தேர்தல் காலத்தில் வாக்குறுதி கொடுத்தார்கள். அங்கு கிடைக்கும் இரும்பு சாம்பிள்களை வட இந்தியாவில் உள்ள ஜாம்ஷட்பூருக்கு அனுப்பியிருக்கிறார்களாம். அங்கு கிடைக்கும் இரும்பை நாம் நல்ல முறையில் பயன்படுத்த முடியும் என்பதற்கு சான்றுகள் பல இருக்கின்றன. சேரன் காலத்தில் அந்த இரும்பை எடுத்து சாதாரண கொல்லன் முதற்கொண்டு, அதனால் இரும்புக் கருவிகள் செய்ததாகவும், வேறு பல இரும்பு சாதனங்கள் செய்ததாகவும் ஆதாரங்கள் இருக்கின்றன. அப்படிப்பட்ட இரும்பை இன்று ஜம்ஷெட்பூருக்கு அனுப்பி அவர்களின் ஆராய்ச்சி இன்னும் தீரவில்லை. ஆகவே அத்திட்டம் துவங்குவதற்குள்ள அறிகுறி இல்லை என்றுதான் சொல்ல வேண்டியிருக்கிறது. தென்னிந்தியாவில் அந்தத் தொழிற்சாலையை ஆரம்பிக்க அவர்களுக்கு விருப்பம் இல்லை என்று இருக்குமானால் அந்தப் பொருள் லாயக்கில்லை என்று சொல்லிவிட்டால் அதை வைத்துக் கொண்டு அந்தத் தொழிற்சாலை தென்னிந்தியாவில் ஏற்படாது போய் விடுகிறது. சாதாரணமாக ஒரு நாயை அடிக்க வேண்டுமென்றால் அது பயித்தியம் பிடித்த நாய் அதை அடி என்று சொல்வார்கள். அதுபோல வட இந்தியாவில் உள்ள நிபுணர்கள் அந்த இரும்பு லாயக்கில்லை என்று சொன்னால் அந்த தொழிற்சாலை இங்கு ஆரம்பிக்கப்படாமல் போய் விடும்.

ஆனால் சில தினங்களுக்கு பின்னால் அமைச்சர் ஆர். வெங்கட்ராமன் அவர்கள் அதற்கு வேறு விளக்கம் தந்திருக்கிறார்கள். பத்திரிகைச் செய்தி உண்மையல்ல என்றும் பிரஞ்சு நிபுணர்கள் இதை இங்கே நிறைவேற்ற முடியும் என்று தெரிவித்தார்கள் என்றும் ஏற்காட்டில் ஒரு தொழிற்சாலை, மேட்டூரில் ஒரு தொழிற்சாலை, அதற்கிடையில் ரயில் பாதை போட்டு இதை நிறைவேற்ற முடியும் என்றும், இதற்கு சாத்தியம் இல்லை என்றால் நிபுணர்கள் வந்திருக்க மாட்டார்கள் என்றும் குறிப்பிட்டிருக்கிறார்கள். இவ்விதம் அமைச்சர் அவர்களுடைய பேச்சு மாறாக இருக்கிறது. இதைப் பற்றி பத்திரிகையில் வந்தபொழுது . . .

5-00 p.m.

THE HON. SRI C. SUBRAMANIAM : பத்திரிகையில் வந்த செய்திக்காக இவ்விதம் பயந்தால் அதற்கு என்ன செய்ய முடியும் ? இன்னொன்று, ஏதாவது காரியங்களை அங்கங்கே இடங்களில் ஆரம்பிக்க

வேண்டுமென்று இருக்கும்பொழுது அதையும் குற்றம் சொல்லுவது வழக்கமாக இருக்கிறது. அது மாத்திரமல்ல. அது எங்கே நிறைவேறி விடுமோ என்று பயந்து சங்கடப்படுவது மாதிரியும் தோன்றுகிறது.

SRI C. N. ANNADURAI : எங்கெங்கே இருக்கின்றவர்கள் அவ்விதம் பயப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள் ? இவ்விதம் தொழிற்சாலைகள் வரவேண் டாம் என்று எண்ணக் கூடியவர்கள் யார் என்பதை தெரிவிக்க வேண்டுகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : பொதுவாக நாம் ஒரு தொழிலை ஆரம்பிக்கப்படும்பொழுது அதைத் தங்கள் இடத்தில் ஏற்படுத்த வேண்டும் என்று விரும்புவது ஆச்சரியப்படக் கூடிய விஷயமல்ல. ஆகவே உடனே தங்களுக்கு சாதகமாக இருக்கக் கூடியது தங்களைவிட்டு உடனே போய் விட்டது என்று சொல்லுவது தவறு. ஆகவே இதைப் பற்றி கனம் அங்கத்தினர் சுப்பிரமணியம் அவர்கள் கவலைப்படவேண்டிய அவசியம் இல்லை என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

SRI M. P. SUBRAMANIAM : அமைச்சர் அவர்களுடைய பதில் எனக்கு மிகவும் ஆறுதல் அளிக்கிறது. சேலத்தில் இரும்புத் தொழிற் சாலையும், அலுமினியத் தொழிற்சாலையும் மற்றும் பல தொழிற்சாலை களையும் ஆரம்பித்து திராவிட முன்னேற்றக் கழகத்திற்கு குறை கூறுகிற வாய்ப்பு இல்லாமல் செய்வார்களேயானால், அதை நான் மிகவும் வர வேற்பேன். ஆனால் அந்த விதமாக எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லை என்பதைத்தான் குறிப்பிட விரும்புகிறேன். இதைப் பற்றிக் கேள்வி நேரத்தின்போது கேட்கப்பட்ட கேள்விகளுக்கு அமைச்சர் வெங்கட்ராமன் அவர்கள் பதிலளிக்கும்பொழுது கூறினார்கள். சேலத்திலிருந்து எடுக்கப் பட்ட இரும்பை ஸாம்பிளாக அமெரிக்காவுக்கு ஆராய்ச்சிக்காக அனுப்பப் பட்டிருக்கிறது. அதனுடைய முடிவு இதுவரையிலும் வரவில்லை என்று குறிப்பிட்டார்கள். இவ்விதமாக ஏற்பட்ட ஆராய்ச்சியின் பயனாக கால தாமதம் ஆகிறது. ஆகவே இதை சீக்கிரத்தில் ஆரம்பிக்கப்பட வேண்டும். என்றுதான் நாங்கள் சொல்லுகிறோமே தவிர வேண்டாம் என்று சொல்லவே இல்லை. அதே மாதிரிதான் மாங்கனைஸ் தொழிற்சாலை ஏற் படுத்துவதற்கு முயற்சிகள் எடுத்தார்கள். கடைசியில் இதை அரசாங்கத் திடமிருந்து குத்தகை முறையில் பெற்றுக்கொள்தவற்கு கல்கத்தாவி லுள்ள பர்ன் அண்ட் கோ. கம்பெனியிடம் ஏற்பாடு நடைபெற்று வருவ தாகத் தெரிகிறது. இதை மாகாண அரசாங்கமே எடுத்து நடத்த வேண்டு மென்று சேலம் மாவட்டத்திலுள்ள காங்கிரஸ்காரர்கள், கம்யூனிஸ்டுக்காரர் கள், இவ்விதம் எல்லோருடைய முயற்சியும் ஒன்று சேர்ந்திருந்தது. பின்னால் மாகாண அரசாங்கம் இதைப் பற்றி மத்திய அரசாங்கத்திற்கு எழுதினார்கள். அதன் பின்னாலும் கல்கத்தாவிலுள்ள அந்த வெள் ளைக்கார முதலாளிகள் அடங்கிய அந்த பர்ன் அண்ட் கோ. ஸ்தாபனம் மத்திய அரசாங்கத்திடமிருந்து இதை ஏற்று நடத்துவதற்கு வேண்டிய உத்தரவை பெற்றுக்கொண்டார்கள். அந்த சமயத்தில் இந்த அரசாங்கத் தால் என்ன செய்ய முடிந்தது என்று கேட்கிறேன். அதன் பின்னால் சென்னை மாகாண அரசாங்கம் பர்ன் அண்ட் கோ. ஸ்தாபனத்திற்கு ஒரு படி கீழே இறங்கினார்கள். அரசாங்கமும் இந்த ஸ்தாபனமும் சேர்ந்து நடத்தலாம் என்று கேட்டார்கள். அந்த கோரிக்கைக்கு அவர்கள் ஒப்புக்கொள்ளவில்லை. இதையெல்லாம் அறிந்தும் அரசாங்கம் செவி சாய்க்கவில்லை என்பதை சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். இப் போது இவர்களுடைய சோஷலிஸ ராஜ்ய அமைப்பு திட்டம் எங்கே போனது என்று கேட்கிறேன். உண்மையில் அரசாங்கம் அதை ஏற்று நடத்துவதற்கு அங்கு என்ன வாய்ப்பு இல்லை என்று கேட்கிறேன். வேண்டுமென்றால் அதற்கு வேண்டிய மூலதனத்தில் 100–க்கு 49 பங்கை சேலம் வாசிகளே தருவதற்குத் தயாராக இருக்கிறார்கள். மேலும் சென்னை வாசிகளும் டிபெஞ்சர் பங்குகள் வாங்குவதற்கு

தயாராக இருக்கிறார்கள். ஆகவே இதை எவ்வளவு சீக்கிரமாக ஏற்படுத்த முடியுமோ அவ்வளவு சீக்கிரம் இதை ஆரம்பிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

**DEPUTY SPEAKER : The Hon. Member has already taken more time of the House.**

**SRI M. P. SUBRAMANIAM : Sir, I will finish my speach in two minutes.** சென்னை மாகாண அரசாங்கத்திற்கு நிதி கமிஷனின் சிபார்சின்படி 202 லட்சம் ரூபாய் மான்யம் கொடுக்க மத்திய சர்க்கார் முன்வந்திருக்கிறது என்று மகிழ்ச்சி கொள்ளுவதாகத் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. உண்மையாகவே மத்திய சர்க்காரிலிருந்து 46 கோடி, 97 லட்சம் ரூபாய் மாகாணங்களுக்காக கிராண்டாக ஒதுக்கப்பட்டிருப்பதாகச் சொல்லப்படுகிறது. இந்த ஆண்டு 47 கோடி ரூபாய் கொடுக்கப் போவதாகவும் சொல்லுகிறார்கள். இதில் சென்னை மாகாணத்திற்கு குறைவாகத்தான் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதே சமயத்தில் அஸாமிற்கு 6 கோடி ரூபாய் கொடுக்கப்படுகிறது. ஒரிஸாவிற்கு 4 கோடி ரூபாய் கொடுக்கப்படுகிறது, பீஹாருக்கு 5 கோடி ரூபாய் கொடுக்கப்படுகிறது, மேற்கு வங்காளத்திற்கு 5 கோடி ரூபாய் கொடுக்கப்படுகிறது. இவ்விதம் சென்னை மாகாணம் புறக்கணிக்கப்படுவதை நாம் பார்க்கிறோம். அது மாத்திரமல்ல. இந்த மாகாண அரசாங்கம் மத்திய அரசாங்கத்தை வைத்துத்தான் ஆள வேண்டியிருக்கிறது இன்று சாதாரண வரியைக் கூட மாற்றி விற்பனை வரியாக ஆக்கினால், ஏதோ மாகாண அரசாங்கத்திற்கு பணம் கிடைப்பதற்கு ஒரு வழியாக அமையும். இன்னும் சில வரிகளை நாம் வசூல் செய்து கொடுத்துவிட்டு நாம் மத்திய அரசாங்கத்தினிடம் பிச்சை கேட்பதுபோல் கேட்கவேண்டிய நிலைமையில் இருக்கிறோம் என்பதை சுட்டிக்காட்ட விரும்புகிறேன். ஆகவே இவர்கள் கூறிக்கொள்ளுகிற க்ஷேம நல சமுதாயத்தை சமைப்பதற்கான திட்டத்தைத் இதில் காணவில்லை என்பதைக் கூறிக்கொள்ளுகிறேன். அதோடு மாத்திரமல்ல. மேலும், வட நாட்டுக்கு, தென்னாட்டுக்கு வளங்களை எல்லாம் அடிமைப்படுத்தக் கூடிய முறையில் இந்த திட்டம் அமைந்திருக்கிறது என்பதை சொல்லிக்கொண்டு முடித்துக்கொள்ளுகிறேன்.

**SRI T. T. DANIEL :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, நிதி அமைச்சர் அவர்கள் கொண்டுவந்திருக்கும் வரவு செலவு திட்டத்தைப் பற்றி சில விஷயங்களைச் சொல்ல விரும்புகிறேன். நமது ராஜ்யம் சுமார் 310 லட்சம் ஏக்கர்கள் கொண்டது. அதில் உத்தேசமாக 140 ஏக்கர்களில் சாகுபடி செய்யப்படுகிறது. அதில் சுமார் 51 லட்சம் ஏக்கர்களில் நெல் தானியத்தை உற்பத்தி செய்கின்றோம், முதலாவது, இரண்டாவது உலக யுத்தத்திற்குப் பிறகு உணவுப் பற்றாக்குறை நம் நாட்டில் அதிகமாக இருந்து வந்தது. அதை ஒழித்துக்கட்டுவதற்காக நமது அரசாங்கம் அதிகமான நல்ல நடவடிக்கைகளை எடுத்திருக்கின்றன. முதலாவது ஐந்தாண்டு திட்டத்தில் இந்தக் குறைகளை நீக்குவதற்கு என்று தனி இடம் கொடுக்கப்பட்டு இருந்தது. இதற்காக சுமார் 28 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டது. இதன் விளைவாக $3\frac{1}{2}$ லட்சம் ஏக்கர் நிலங்கள் கூடுதலாக நம் நாட்டில் நெல் பயிரிடுவதற்கு சௌகரியம் கிடைத்திருக்கிறது. அதிலும் ஒவ்வொரு ஏக்கர் நிலத்திலும் உற்பத்தியை எடுத்துக் கொண்டால் உற்பத்தியின் அளவு கூடிக்கொண்டே வருகின்ற அளவில் நல்ல திட்டங்களைக் கையாண்டு வந்திருக்கிறோம். சராசரி இந்தியாவில் ஒரு ஏக்கரில் உற்பத்தி செய்யக் கூடிய அளவு 750 பவுண்டு. சீனாவில் 1,250 பவுண்டு கிடைக்கிறது. ஜப்பானில் 2,500 பவுண்டு கிடைக்கிறது. ஆனால் உலகத்திலேயே கூடுதலாக ஒரு ஏக்கர் நிலத்தில் கிடைப்பது ஈஜிப்ட் ராஜ்யத்தில் ஒரு ஏக்கருக்கு 3,000 பவுண்டு நெல் விளையச் செய்கிறார்கள். ஆகவே நமது சென்னை ராஜ்யத்தில் உற்பத்தி செய்வது ஈஜிப்ட் ராஜ்யத்தில் உற்பத்தி செய்வதில் மூன்றில் ஒரு பங்குதான். இந்தியாவிலுள்ள இதர பிரதேசங்களை எடுத்துப் பார்த்தால் 750 பவுண்டு நெல் ஒரு ஏக்கருக்கு கிடைத்து வருகிறது. நமக்கு இப்போது தேவையானது சுமார் 48 லட்சம் டன் அரிசி என்று கணக்கிடப்பட்டிருக்கிறது.

3rd March 1958] [Sri T. T. Daniel]

1955–56-ம் ஆண்டில் நாம் 46 லட்சம் டன் உற்பத்தி செய்திருக்கிறோம் என்று நிதி அமைச்சர் அவர்கள் தன்னுடைய அறிக்கையில் கூறியிருக் கிறார்கள். இந்த உணவுப் பொருள்களில் 28 லட்சம் டன் அரிசி, மிச்சம் 16 லட்சம் டன் இதர தானிய வகைகள் சுமார் 10 லட்சம் ஏக்கர் நிலங்களிலே இப்பொழுது ஜப்பானிய முறை கையாளப்பட்டு வருகிறது. அதிலும் 30 லட்சம் ஏக்கர் நிலங்களில் நல்ல உயர்ந்த ரக விதைகள் உபயோகப்படுத்தப்பட்டு வருகின்றன. அதன் காரணத்தால் சராசரி ஒரு ஏக்கர் நிலத்தின் விளைச்சல் கூடி இருக்கின்றது. இன்னும் நாம் கணக்குப் பார்த்தோமேயானால், 1951-52-ல் அம்மோனி யம் சல்பேட் 49,000 டன் நமது சமஸ்தானத்தில் விநியோகம் செய்யப்பட் டிருக்கிறது. 1955–56-ல், 80,000 டன் விநியோகம் செய்திருக்கிறோம். இந்த உரத்தை உபயோகித்ததினால், ஒரு ஏக்கர் நிலத்தில் உற்பத்தி சுமார் 260 ராத்தல் கூட இருப்பதை நாம் அறிவோம். வரவு செலவுத் திட்டத்தில், 1960-ம் ஆண்டில் கட்டளை, புள்ளம்பாடித் திட்டம் முடிவடை யும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. நெய்யாறு திட்டம் கன்னியாகுமரி ஜில்லாவில் கட்டப்படுமென்று கூறப்படுகிறது. இதனை நாங்கள் மகிழ்ச்சி யுடன் வரவேற்கிறோம். இந்த அணைக்கட்டுக்கு 1 கோடியே 42 லட்சம் செலவாகும். அதில், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில், ரூ. 27 லட்சம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. நெய்யாறு அணைக் கட்டுத்திட்டத்தில் முக்கியமாக இரண்டொரு விஷயங்களைக் கவனிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். கேரள ராஜ்யத்தில் நெய்யாற்றின்கரை தாலூகாவில் உள்பட்டு இருக்கிறது இந்த அணை. வலது கால்வாய் கட்டி முடித்தாய் விட்டது. அது நெய்யாற்றின்கரைத் தாலூகாவின் வழியாகப் போய்க் கொண்டிருக்கிறது. நாம் கட்ட வேண்டியது இடது கால்வாய். இது நெய்யாற்றின்கரைத் தாலூகாவிலிருந்து புறப்பட்டு, நம்முடைய ராஜ்யத்தில் இருக்கிற விளவங்கோடு தாலூகாவிற்கு வந்து மறுபடியும் நெய்யாற்றிங் கரைத் தாலூகாவில் பல பிரதேசங்களுக்குச் சென்று, விளவங்கோடு தாலூகாவில் உள்ள பிற பகுதிகளுக்குச் செல்வதாக இருக்கிறது. இந்த முறையில் இடது கால்வாய் வெட்டப்படுமானால் இரு ராஜ்யங்களுக்கு மிடையே தகராறு ஏற்படுவது சகஜம். விளவங்கோட்டில் எந்த இடத்தி லிருந்து அந்தக் கால்வாய் வெட்டப்பட்டுத் தொடங்கிகுறதோ, அதிலிருந்து தொடர்ச்சியாக நமது பிரதேசத்தில் இந்த இடது கால்வாய் போகும்படி யாக திட்டத்தை வகுக்க வேண்டும். வருகிற காலத்தில் நமது ராஜ்யத் துக்கும், கேரள ராஜ்யத்துக்கும் இந்தக் கால்வாய் வழியாகத் தண்ணீர் விடுவதில் அனாவசியமான தகராறுகள் ஏற்படாமல் இருப்பதற்கு, எத்தனை ஏக்கர் நிலத்திற்கு அந்த அணைக்கட்டிலிருந்து தண்ணீர் கொடுக்க முடியும் என்பதை நிர்ணயித்துக் கொள்ளவேண்டும். அதை நிர்ண யிக்காமலிருந்தால், ஒரு கோடி ரூபாய் செலவு செய்தாலும்கூட நம் முடைய ராஜ்யத்திலுள்ள மக்களுக்கு, போதுமான பிரயோஜனமிராது.

இன்னும் விளவங்கோடு தாலூக்காவில் பட்டணங்கால், சிற்றாறு திட் டத்தை 1 கோடி 15 லட்சம் ரூபாய் செலவில் கட்டி முடிக்க வேண்டி யிருக்கிறது. ஆனால், அதைப் பற்றி பட்ஜெட்டில் ஒன்றும் கூறாமல் இருப்பது எங்களுக்கு மன வருத்தத்தைக் கொடுக்கிறது. மாம்பழத்தாறு, பொய்கை அணைத் திட்டத்தை இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்க்க வேண்டுமென்று பலமுறை பிரயத்தனம் செய்த போதிலும், அதுபற்றி நடவடிக்கை எடுக்கப்படாமல் இருக்கிறது. இந்த அணைக்கட்டு களை கட்டி முடித்தால் 2 லட்சம் டன் உணவுப் பற்றாக்குறை தீர்ந்து விடக் கூடிய நிலைமை ஏற்படும்.

5–10 p.m.

பட்ஜெட்டில் கிராம குடிதண்ணீர் திட்டத்திற்காக 86 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. நகர குடிதண்ணீர் திட்டத்திற்காக சுமார் 125 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இந்தத் திட்டத்தில் ஏற்கெனவே பரிசீலனை செய்யப்பட்டிருக்கிற குளச்சல், இரணியல், குழித்தறை தண்ணீர் திட்டம், நாகர் கோவிலில் விஸ்தரிக்கப்பட்டிருக்கிற இடங்களுக்குத் தண்ணீர் விநியோகம் செய்வதற்குரிய திட்டம், இவைகளுக்காக, சுமார் 25 லட்சம்

ஒதுக்கப்படுமென்று எதிர்ப்பார்த்திருந்தோம். அந்தப் பணம் பட்ஜெட்டில் ஒதுக்கப்படவில்லை. "**Lump-sum Provision**" என்று போடப்பட்டிருக்கிறது. அந்தப் பணத்திலிருந்து இந்த மூன்று திட்டங்களை உடனடியாக நிறைவேற்றுவதற்கு சர்க்கார் வேண்டிய நடவடிக்கைகள் எடுப்பார்கள் என்று எதிர்ப்பார்க்கிறேம்.

நமது ராஜ்யத்தின் விஸ்தீர்ணம் சுமார் 6,566 சதுர மைல் என்று கணக்கிடப்பட்டிருக்கிறது. அதில் 13·4 சத விகித இடத்தில் வன சொத்துக்கள் இருக்கின்றன. ஒரு ராஜ்யத்தில் நல்ல அபிவிருத்தி ஏற்படவேண்டுமானுல், மூன்றில் ஒரு பங்கு வனசொத்து இருக்க வேண்டுமென்று நிபுணர்கள் கூறியிருக்கிருர்கள். வனப்பிரதேசமாகிய மலபார் நம்முடைய ராஜ்யத்தை விட்டு பிரிந்து விட்டது. விலையுயர்ந்த தேக்கு மரங்கள் அடங்கிய செங்கோட்டைப் பகுதியையும் இழந்துவிட்டோம். தேக்கு மரங்கள் நடுவதற்கும் மற்ற மரங்கள் நடுவதற்கும் 18 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது.

குறிப்பாக இரண்டு கிருஷி விஷயமாக நமது சர்க்கார் கவனம் செலுத்த வேண்டுமென்பது எனது தாழ்மையான அபிப்பிராயம். ரப்பர் கிருஷி விஷயத்தில் நமது அரசாங்கம் சரியான கவனம் செலுத்த வேண்டும். இந்தியாவிலேயே நல்ல ரப்பர் உற்பத்தி செய்யக்கூடிய இடம் கன்னியாகுமரியில் இருக்கிறது. ஒரு ஏக்கராவில், 1,500 பவுண்டு ரப்பர் உற்பத்தி செய்யப்பட்டிருக்கிறது. கன்னியாகுமரி ரப்பரின் தரம் இந்தியாவிலே எல்லாப்பிரதேசங்களைக் காட்டிலும் மிகச் சிறந்ததாக இருக்கிறதென்று நிபுணர்கள் கூறுகிருர்கள். அப்படியிருந்தும்கூட ரப்பர் கிருஷியை அபிவிருத்தி செய்யும் திட்டத்தை வகுக்காமல் இருக்கிறேம். அதற்காக ஒரு பணமும் ஒதுக்கப்படவில்லை. கன்னியாகுமரி ஜில்லாவில் ஒரு ரப்பர் போர்டை நியமனம் செய்யவேண்டும். ரப்பர் பாலிலிருந்து குழந்தைகள் விளையாடுவதற்கான பொம்மைகள் உற்பத்தி செய்ய ஒரு "பாக்டரி"யை ஏற்படுத்தக்கூடிய சூழ்நிலை இருக்கிறது. ஆகவே அங்கு நாம் ரப்பர் கிருஷியை ஆதரிப்போமானுல் பல்லாயிரக்கணக்கான மக்களுக்கு வேலை கிடைக்கக்கூடிய வாய்ப்பு ஏற்படும். சர்க்காருக்கும் வருமான வரி கிடைக்கும்.

அடுத்தப்படியாக, தேயிலைக் கிருஷியை எடுத்துக்கொண்டால், முன்பு நாம் உற்பத்தி செய்கின்ற தேயிலையை இங்கிலாந்திலுள்ள வியாபாரிகள் கொள்முதல் செய்து கொண்டிருந்தார்கள். ஆனுல் இன்று நிலைமை மாறிவிட்டது. இப்பொழுது ஆப்பிரிக்காவில் லட்சக்கணக்கான பவுண்டு தேயிலை உற்பத்தி செய்யப்பட்டு வெளிநாடுகளுக்கு அனுப்பப்படுகிறது. ஆகையால் இங்குள்ள தேயிலை தோட்டமுதலாளிகள் தகுந்த மார்க்கெட் இல்லாமல் கஷ்டப்படுகிருர்கள். உற்பத்தி செலவைவிட மிகக் குறைவான விலைக்கு தேயிலையை விற்கக்கூடிய நிலைமை ஏற்பட்டு கொண்டிருக்கிறது. இந்த நிலைமை தொடர்ந்து நீடிக்குமேயானுல், தேயிலைத் தோட்டங்கள் பல மூடப்படும். ஆகையால் இது விஷயமாக மத்திய சர்க்காருடன் பேச்சு வார்த்தை நடத்தி ஆவன செய்ய வேண்டுமாறு கேட்டுக்கொள்கிறேன். அப்படிச் செய்தால்தான் தேயிலைத் தோட்ட முதலாளிகள் தேயிலைக் கிருஷியை தொடர்ந்து நடத்த முடியும்.

பெரிய ரகத் தொழிற்சாலைக்களுக்காக பல லட்சக் கணக்கான ரூபாய்கள் ஒதுக்கப்பட்டிருக்கின்றன. 12,000 கதிர்கள் கொண்ட ஒரு ஆலையை ஸ்ரீவில்லிபுத்தூரில் நிறுவப்போவதாக அறிகிறேம். கன்னியாகுமரியில் 6,000 கதிர்கள் கொண்ட ஒரு ஆலை இருக்கிறது. நாகம்மா மில்ஸ் என்று பெயர். 12,000 கதிர்கள் வேண்டும் என்று அந்த ஆலை முதலாளி சர்க்காருக்கு மனுக்கள் அனுப்பியும், இதுவரையிலும் ஒரு விதமான முடிவும் செய்யப்படாமல் இருக்கிறது. இன்று அந்த ஆலையில் 300 தொழிலாளர்கள் வேலை செய்கிருர்கள். கதிர்களை அதிகப்படுத்திஞல், 600 தொழிலாளர்கள் வேலை செய்யக்கூடிய நிலைமை ஏற்படும்.

காக்காபொன், சிமெண்ட் பாக்டரிகளை பல இடங்களில் அமைக்க முடியும். அதற்கு வேண்டிய மூல பொருள்கள் இருக்கின்றன. எந்தந்த ஸ்தலங்களில் அப்படிப்பட்ட மூல பொருள்கள் இருக்கின்றனவோ அந்தந்த இடங்களில் அவைகளை அமைக்கும்படியாகக் கேட்டுக்கொள்ளுகிறேன். அந்த இடங்களில் பாக்டரிகளை அமைத்தால் அது சாலச் சிறந்ததாகும். 5–20 p.m.

இன்னும் மாணவ மாணவிகளுக்கு மத்தியான போஜனம் கொடுப்பதற்கு என்று நமது பட்ஜெட்டில் 20 லட்சக் ரூபாய் ஒதுக்கி வைத்திருக்கிறார்கள். இவ்வளவு பணம் ஒதுக்கப்பட்டிருந்தாலும் அது குறைவாகத் தோன்றலாம். அது எப்படி இருந்தாலும், அரசாங்கத்தினுடைய மனப்பான்மை இதில் காண்பிக்கிறது. குழந்தைகளுக்கு எந்த விதத்திலாவது படிப்பு சொல்லிக்கொடுக்க வேண்டும் என்ற கருத்துடன் இதைச் செய்திருக்கிறார்கள் என்பது நன்கு தெரிய வரும். ஏழை பணக்காரக் குழந்தைகள் என்று இல்லாமல் எல்லோருக்கும் இது வழங்கப்பட வேண்டும். பணக்காரக் குழந்தைகள் மட்டும் சாப்பிட்டு விட்டு வந்து ஏழைக் குழந்தைகள் சாப்பிடாமல் பள்ளிக்கூடங்களுக்கு வந்து படிப்பது என்பது முடியாததால் இந்த திட்டம் ரொம்பவும் வரவேற்கத்தக்கதாக இருக்கிறது. ஏழைக் குழந்தைகள் சாப்பிடாமல் வருவது என்பது கூடாது. அப்படி இருந்தால் அவர்கள் பள்ளிக்கூடங்களுக்கு வந்து படிக்க முன் வரமாட்டார்கள். அதைத் தவிர்க்க இந்த திட்டம் நல்லது. ஆகவே இதற்கு நிரந்தரமாக பரிகாரம் தேடுவதற்கு எவ்வளவு லட்சம் ரூபாய் செலவு செய்தாலும் அதைச் செய்யலாம். அதில் அதிகப்படியான கவனம் இந்த சர்க்கார் செலுத்தும் என்று நினைக்கிறேன். இந்த நிலைமையில் பொது மக்களுடையவும், முதலாளிகளுடையவும் மன நிலைமை மாறி அவர்களும் இதற்கு உதவ முன் வருவார்கள். அதற்கு வேண்டிய நடவடிக்கைகளையும் அவர்கள் எடுத்துக்கொள்ளுவார்கள் என்று நினைக்கிறேன்.

இன்னும் ஹரிஜனங்கள், பின் தங்கிய வகுப்பினர் ஆகியோருடைய நலனுக்கு எவ்வளவோ பணம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இதிலும் அரசாங்கம் விசேஷ சலுகை காட்டியிருக்கிறது. வரப்போகும் ஆண்டிற்கு இந்த ஆண்டின் செலவை விட 40 லட்சம் ரூபாய் அதிகப்படியாக ஒதுக்கியிருக்கிறார்கள். அவர்களுடைய வாழ்க்கைத்தரம் உயருவதற்கு இப்படி ஒதுக்கி இருக்கிறார்கள். இம்மக்களின் நலன்களை வளர்க்கும் திட்டங்களுக்கு இந்த வரவு செலவு திட்டத்தில் 233 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. அந்தத் தொகையில் ஹரிஜனப் பள்ளியில் மத்தியான உணவுக்காக 27 லட்சம் ரூபாயும் மாணவர்களுக்கு உதவிச் சம்பளம் வழங்க 28 லட்சம் ரூபாயும் 5 ஆயிரம் வீடுகள் கட்டுவதற்கு மானியமாக 27 லட்சம் ரூபாயும், அவர்களுக்கு ஒதுக்கப்பட்டிருக்கிறது. மற்றும் 5,800 ஜோடி மாடுகள் வாங்குவதற்கு மானியமாக 18 லட்சம் ரூபாயும் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இவைகளை கவனித்தால் அரசாங்கம் பிற்பட்ட இனத்தவர்களுக்கும் பின் தங்கிய சமூகத்தவர்களுக்கும் அதிகப்படியான சலுகைகளை காட்டி வருவது நன்றாகத் தெரியும்.

இன்னும் நெசவு தொழிலாளர்களுக்கு வசதி செய்து கொடுக்கும் பொருட்டு அவர்களுக்கென்று 500 வீடுகள் கட்டிக்கொடுக்க ஒரு புதுத் திட்டம் அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது. இதன் மூலம் கூட்டுறவு சங்கங்களுக்கு 15 லட்சம் ரூபாயும், நகர அபிவிருத்தி ட்ரஸ்டுக்கு 17 லட்சம் ரூபாயும் ஊராட்சி மன்றங்களுக்கு 6 லட்சம் ரூபாயும் ஒதுக்கப்பட்டுள்ளது. கல்வி விஷயமாக பத்து கோடியே அறுபது லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டிருந்தது. ஆனால் வருகிற வருஷத்திற்கு கல்வி விஷயமாக 11 கோடி ரூபாய் 47 லட்சம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. தொழில் கல்வி விஷயமாக 647 மாணவர்கள் இஞ்சினியரிங் கல்லூரியில் சேர்க்கவும் வசதி செய்து கொடுக்கப்பட்டிருக்கிறது. இப்பொழுது அவற்றை விரிவாக்கி பொறியியற் கல்லூரிகளில் 1,132 மாணவர்களைச் சேர்க்கவும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. கழிந்த வருஷத்தில் 657 மாணவர்களும் வருகிற வருஷத்தில் 1,132 மாணவர்களும் படிக்க வசதி செய்து கொடுக்கப்பட்டிருக்கிறது.

A 216—3-3-58—9

[Sri T. T. Daniel] [3rd March 1958

எல்லா இடங்களிலும் தேசிய விஸ்தரிப்பு திட்டங்கள் அமைக்க வேண்டும் என்பது அரசாங்கத்தினுடைய கொள்கை. அடுத்த ஆண்டில் மேலும் சுமார் 50 தேசிய வளர்ச்சித் திட்ட வட்டாரங்களும் 16 சமுதாய அபிவிருத்தி வட்டாரங்களும் ஏற்படுத்த திட்டமிட்டுள்ளார்கள். இந்த வகையில் எல்லா வட்டாரங்களிலும் இந்த திட்டங்களை அமுலுக்குக் கொண்டு வரவேண்டும் என்று அரசாங்கம் நினைக்கிறது. அப்படியிருந்தும் கன்யாகுமரி ஜில்லாவில் சில தாலுகாவில் இது வரையிலும் தேசிய வளர்ச்சி திட்டமோ அல்லது சமூக அபிவிருத்தி திட்டமோ இன்னும் அமைக்கப்படவில்லை. குறிப்பாக கல்குளம் தாலுகாவில் தேசீய சமூக விஸ்தரிப்பு திட்டம் அங்கே இல்லை. ஆகவே அங்கு குறையில்லாது இந்த 16 சமூக திட்டங்களை அங்கங்கே அமைக்கும் போது கன்யாகுமரி ஜில்லாவிலும் திட்டங்கள் இல்லாத இடங்களில் அமைக்கவேண்டும் என்று அரசாங்கத்தை நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

கெஜட் பதிவில்லாத உத்யோகஸ்தர்களுக்கு ஏற்கெனவே 12 ரூபாய் அலவன்ஸ் கொடுத்து வருகிறார்கள். இன்னும் அவர்களுடைய கஷ்டங்களை உணர்ந்து அவர்களுடைய குழந்தைகளுக்கு உயர்ந்த படிப்பு படிக்க வேண்டி உயர்நிலைப்பள்ளி வகுப்புகளிலும் முழுச் சம்பளச் சலுகை தருவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அதைக் கண்டு பொது மக்கள் அரசாங்கத்தை பாராட்டத்தான் வேண்டும். அது எப்படி இருந்த போதிலும் அவர்களுடைய குறைகள் இன்னும் பல இருக்கின்றன. இப்பொழுது சில கெஜட் பதிவில்லாத உத்யோகஸ்தர்களுக்கு வீட்டு வாடகை அலவன்ஸ் கொடுக்கப்படவில்லை என்று தெரிய வருகிறது. அதையும் நன்றாக பரிசீலனை செய்ய வேண்டும். குறிப்பாக கன்யாகுமரி ஜில்லாவில் சமீப காலத்தில் கேரள சர்க்காரிலிருந்து இங்கு வந்தவர்களுக்கு பிரமோஷன் கொடுக்கப்பட்டு அதன்படி சிலருக்கு சம்பளம் கொடுக்கப்பட்டது. இந்த உத்தரவை ரத்து செய்து கொடுக்கப்பட்ட பணத்தையும் திருப்பிக்கொடுத்து விடவேண்டும் என்று சொல்லியிருப்பதாக தெரியவருகிறது. அதையும் புனராலோசனை செய்து கெஜட் பதிவில்லாதவர்களுடைய கஷ்டங்களை நன்கு பரிசீலனை செய்து அவர்களுக்கு வசதி செய்து கொடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அவர்களுடைய கஷ்டங்களை உணர்ந்து அவர்களுக்கு நிரந்தரமாக பரிகாரம் தேடிக்கொடுக்கவேண்டும் என்றும் கேட்டுக்கொள்ளுகிறேன்.

நமது ராஜ்யத்தில் வருமானம் 62·40 கோடி ரூபாய். செலவு 63·75 கோடி ரூபாய், துண்டு 1·35 கோடி ரூபாய் என்று கணக்கிடப்பட்டிருக்கிறது. ஆகவே ஒரு கோடி 35 லட்ச ரூபாய் துண்டு விழுவதை சரிக்கட்டுவதற்கு சிலசில வரிகளைப் போட்டிருக்கிறார்கள். இந்த வரிகளை பொது மக்கள் நன்கு வரவேற்கிறார்கள். ஏனென்றால் அது சாதாரண மக்களை அவ்வளவாக பாதிக்கவில்லை. நாம் சோஷலிஸ சமுதாயத்தை அமைக்க வேண்டும் என்று சொல்லிக்கொண்டிருக்கும்போது பொது மக்களும் கொஞ்சம் தியாகம் செய்ய வேண்டியது அவசியமாக இருக்கிறது. அந்த நிலையில் தான் இருக்கிறது இப்பொழுது வரி போட்டிருப்பது. ரஷியாவை எடுத்துக் கொண்டால் பத்து வருஷங்களுக்குள் இன்னும் எல்லா பொது மக்களுக்கும் வீடுகள் கட்டிக்கொடுக்கவேண்டும் என்று சொல்லப்படுகிறது. அங்கே பொருளாதார நிலைமையில் மாற்றி சமூகத்தை அமைப்பதற்கு அங்கே மக்கள் சில கஷ்டங்களை அனுபவிக்க வேண்டியதாகத்தான் இருக்கிறது. சைனாவை எடுத்துக்கொண்டாலும் அப்படியேதான். ஆகவே சோஷலிஸ அடிப்படையில் சமுதாயத்தை நாம் அமைக்க வேண்டுமானால் அதற்காக பொது மக்கள் கொஞ்சம் தியாகம் செய்ய வேண்டியதுதான். அந்த அடிப்படையில் தான் இந்த வரவு செலவு திட்டம் அமைந்திருக்கிறது. அதைக் கண்டு நான் கனம் நிதி மந்திரி அவர்களைப் பாராட்டுகிறேன். ஏனென்றால் நாம் இப்பொழுது ஒரு புது சமூகத்தை அமைக்க வேண்டியதாக இருக்கிறது. இதில் பணக்காரர்கள் ஏழைகள் என்பது இல்லை. எல்லா சமூகமும் ஒன்றாகச் சேர்ந்து இதில் ஒத்துழைக்க வேண்டியதாக இருக்கிறது. அதனால் மக்கள் ஓரளவு தியாகம் செய்ய வேண்டும். அதற்கு வேண்டிய நடவடிக்கைகளை சர்க்கார் எடுப்பார்கள் என்று என்ன

ணுகிறேன். குறிப்பாக ஆசிரியர்களைப்பற்றி ஒன்றிரண்டு வார்த்தைகளைச் சொல்லிக் கொண்டு முடித்துக்கொள்ளுகிறேன். தனிப்பட்ட முறையில் நடத்தப்படும் பள்ளிக்கூடங்களில் வேலை பார்க்கும் ஆசிரியர்களுக்கு ப்ராவிடென்ட் பண்ட் சலுகையோ அல்லது பென்ஷன் சலுகையோ இல்லாமல் இருக்கிறது. அந்தச் சலுகைகளை அவர்களுக்கும் கொடுக்க வேண்டும். குறிப்பாக கன்யாகுமரி ஜில்லாவில் ஆசிரியர்களுக்கு பட்டதாரி அதாவது ட்ரெயினிங் ஆன ஆசிரியர்களுக்கு சம்பளம் ரூ. 55 தான். இப்படிப்பட்ட குறைந்த சம்பளம் கன்யாகுமரி ஜில்லாவில்தான் கொடுக்கப்படுகிறது. மற்ற எந்த ராஜ்யத்திலும் அப்படி கொடுக்கப்படவில்லை. இதை நான் மிக வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன். அதனால் இது விஷயமாக கனம் நிதி மந்திரி அவர்கள் கொஞ்சம் அக்கரை எடுத்துக் கொண்டு வருகிற ஏப்ரல் மாதத்திற்குள் அவர்களுக்கு மற்ற ராஜ்யங்களில் கொடுக்கப்படும் சம்பளத்தைப் போல் கொடுக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். அதற்கு வேண்டிய முயற்சியையும் கனம் மந்திரி அவர்கள் எடுத்துக்கொள்ளுவார்கள் என்ற எண்ணத்துடன் நான் இத்துடன் முடித்துக்கொள்ளுகிறேன்.

**Sri S. LAKSHMANA GOUNDER :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, கனம் நிதி மந்திரி அவர்கள் கொண்டு வந்திருக்கிற வரவு செலவு திட்டத்தை நான் ஆதரித்து சில வார்த்தைகளைச் சொல்ல ஆசைப்படுகிறேன். அவர் கொண்டு வந்திருக்கக்கூடிய வரவு செலவு திட்டமானது மிகவும் போற்றக்கூடிய வகையில் இருக்கிறது என்பதையும் தெரிவித்துகொள்ளுகிறேன். ஏனென்றால் கெடுதல் இல்லாத தொழில் வளர்ச்சிக்கும், விவசாய வளர்ச்சிக்கும் அரசாங்கம் நடவடிக்கை எடுத்துக் கொண்டிருப்பதால் அதை நான் வரவேற்கிறேன். சாதாரணமாக நாம் குடும்பத்தை நடத்துவதென்றால் அதன் வரவு என்ன செலவு என்ன என்பதை கணக்கெடுத்து அதன்படி செலவு செய்வது போன்று அரசாங்கமும் ராஜ்யத்தின் வரவைக் கண்டு பிடித்து அதன் செலவையும் கண்டுபிடித்து அதற்குத் தகுந்தபடிதான் கனம் நிதி அமைச்சர் அவர்களும் வரவு செலவு திட்டத்தை தயாரித்திருக்கிறார். அதற்கு அவரை நாம் பாராட்ட வேண்டியதுதான். நமது ராஜ்யத்தின் வரவை நன்றாக ஆராய்ச்சி செய்து அதன்படி செலவு செய்ய ஏற்பாடு செய்திருப்பதையும் கண்டு நாம் அவரை பாராட்ட வேண்டியதுதான். அதற்கு உதவியாக இருந்த நிதி இலாகா காரியதரிசியும் இந்த திட்டத்தை தயாரிக்க பெரிய உதவி செய்திருக்கிறார். குறை கூறுவது என்றால் எவ்வளவோ குறை சொல்லலாம். நல்லதற்கும் குறை சொல்லலாம் கெட்டதற்கும் குறை சொல்லலாம். அப்படி எல்லாவற்றிற்கும் குறை சொல்லிக் கொண்டு போவது என்பது சரியல்ல, அது நியாயமும் அல்ல. ஒரு சில மக்களுக்கு மட்டும் நன்மை செய்யவேண்டும் என்ற அடிப்படையில் திட்டத்தை அமைக்க வேண்டும் என்று சொல்வது சரியல்ல.

ஒரு நல்ல காரியம் செய்யும்போது, அதிலுள்ள குறைகளையும் எடுத்துச் சொன்னால்தான் அவைகளை நிவர்த்திக்க வழி காண முடியும். உண்மையான குறைகளாக இருந்தால்தான் அவைகளைத் தீர்ப்பதற்கு முடியும். 10 ஆயிரம் ரூபாய் வருமானம் வருகிறதென்றால், 20 ஆயிரம் ரூபாய்க்கு எப்படித் திட்டம் வகுக்கமுடியும்? முடியாது. எவ்வளவு தொகை மக்களிடத்திலிருந்து வசூலிக்கிறோம். வருஷத்திலே எவ்வளவு செலவாகிறது என்பதை கணக்கிலெடுத்துக்கொண்டுதான் வரவு செலவுத் திட்டம் வகுக்க முடியும். அந்த வகையில்தான் எந்த எந்த திட்டத்திற்கு எவ்வளவு பணம் செலவு செய்யவேண்டும் என்பதைச் சிந்தித்துத் தான் திட்டம் வகுத்திருக்கிறார்கள் ; அதுவும் மிகப் பொறுத்தமாக வகுத்திருக்கிறார்கள். அதைப் போற்றத் தான் வேண்டும். அதற்கு ஒத்தாசையாக இருந்த காரியதரிசி அவர்கள் அனுபவத்தில் மிகுந்தவர். நிதி மந்திரி அவர்களுக்கும் 6 வருஷ அனுபவம் இருந்தாலும், நிதி இலாகா காரியதரிசியாக இருந்தவருடைய அனுபவமும் சேர்ந்து இத்திட்டம் வகுக்கப்பட்டிருப்பதால், இது மிக ஒரு நல்ல முறையிலேதான் வகுக்கப்பட்டிருக்கிறது என்று நாம் சொல்லவேண்டும். அப்படி வகுக்கப்பட்ட திட்டத்தை

5–30 p.m.

நாம் பரிசீலனை செய்யும்போது, நமக்கும் இதை ஆராய்ந்து குறைகளைக் கண்டுபிடிக்கக்கூடிய அறிவு இருந்தால், அதை எடுத்துச் சொல்ல, அதற்குப் பரிகாரமும் நாம் கொடுக்கலாம். குறிப்பாக இந்த இந்த குறை இருக்கிறது என்று எடுத்துச் சொல்லாமல், "குறை இருக்கிறது, குறை இருக்கிறது" என்று பொதுவாகச் சொல்வதில் அர்த்தம் இல்லை. உள்ள குறைகளைத் திட்டமாக எடுத்துச் சொல்வதுதான் சிறந்தது என்று கனம் அங்கத்தினர்களுக்குத் தெரிவித்துக்கொண்டு, வரவு செலவுத் திட்டத்தின் மீது ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன்.

உணவு உற்பத்தி நல்ல முறையிலே முன்னேறியிருக்கிறது என்று சொல்லுகிறார்கள். அது போற்றத்தக்க விஷயம். ஆனால், கர்ணம், முன்சீப் கொடுத்த கணக்கை வைத்துக்கொண்டு புள்ளி விவரங்கள் தயாரித்திருப்பதால் அவை சரியாக இருக்குமா என்று சிலர் ஐயப்படுகிறார்கள். அது அவசியம் கவனிக்கவேண்டியதுதான். இருந்தாலும் கூட, கர்ணம், முன்சீப் கொடுக்கும் கணக்கை வைத்துத்தானே நாமும் கணக்கைத் தயாரிக்கவேண்டும். அவர்கள் கொடுக்கும் புள்ளி விவரங்கள் சரியில்லை யென்றால், நம்முடைய வருமானம் சம்பந்தமாக புள்ளி விவரமும் சரியில்லாமல் போய்விடும். இவ்வளவுதான் நம் நாட்டுக்கு வருமானம் கிடைக்கும் என்று கணக்கிட்டுச் சொல்லியிருக்கும்போது, அது ஓரளவு சரியாகத்தான் இருக்கிறதென்பதை நாம் சிந்தித்துப் பார்க்க வேண்டும். மற்ற அன்பர்களுக்கும் நான் சொல்வது என்னவென்றால், மக்களுக்கு நல்ல முறையிலே பாடுபடவேண்டுமென்று எண்ணத்தைக் கொண்டு நாம் நடப்போமானால், வருவாய் எந்த அளவுக்கு அரசாங்கத்திற்கு வரவேண்டும், அந்த வருவாய் எந்த வகையிலே வசூலிக்கப்பட வேண்டும், அப்படி வசூலிக்கும்போது மக்களுக்குப் பாதகம் ஏற்படுகிறதா சாதகம் ஏற்படுகிறதா என்பதை யெல்லாம் நாம் கவனித்து, அதற்கான யோசனைகளைத் தெரிவித்தால் திட்டத்தை வகுத்து நடத்துகிறவர்களுக்குச்சாதகமாக இருக்கும், மக்களுக்கும் நன்மை செய்ததாக இருக்கும். அந்த அளவிலே பார்த்தால், நமது ராஜ்யத்தில் உணவு உற்பத்தி நல்ல முறையிலே முன்னேறி வந்திருக்கிறது என்று சொல்வதைப் பற்றி சந்தேகம் இல்லை. அது பெருமைப்படக்கூடிய விஷயம்தான். ஆனால், ஓரளவு விவசாயம் முன்னேறியிருக்கிறது என்று பெருமைப்பட்டுக்கொண்டு நாம் சும்மா இருக்கக்கூடாது. மேலும் மேலும் விவசாயம் நல்ல முறையிலே வளரவேண்டுமானால், அதைப்பற்றி அரசாங்கத்திலே உள்ளவர்களும் மற்ற சம்பந்தப்பட்டவர்கள் எல்லோரும் கவனித்துச் செய்யவேண்டிய காரியங்களை செய்யவேண்டும். உலகத்திலே மனிதனுக்கு எப்படி ஜீவன் பிரதானமாக இருக்கிறதோ, அது போல், இந்த உலகம் அல்ல எத்தனை உலகமாக இருந்தாலும் அதிலுள்ள எல்லா மனிதனுக்கும் முக்கியமானது விவசாயம்தான் என்று நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். விவசாயம் நல்ல முறையிலே செழிப்படையவில்லையென்றால், உலகத்திலே ஒரு மனிதனும் வாழ முடியாது. மனிதனுக்கு உயிர் போன்ற விவசாயம் நல்ல முறையில் முன்னேற்றம் அடையவேண்டும். விவசாயத்திற்கு முக்கியமானவை நல்ல விதைகள், எரு, தழை அவைகளைத் தயார் செய்வதற்கு விவசாயிகளுக்கு காலாகாலத்தில் கடன் உதவி செய்யவேண்டும். கடன் தொகையும், நல்ல விதைகளும், மற்ற உதவிகளும் விவசாயிகளுக்குக் காலா காலத்தில் கிடைக்காத குறையினால், விவசாயிகள் சர்க்காருடைய உதவியை அனுபவிக்க முடியாதிருப்பதை நான் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். குறிப்பாகச் சொல்ல வேண்டுமானால், எரு, தழை, பிண்ணாக்கு உப்பு இம்மாதிரி காரியங்களுக்கு சிறு தொகை சர்க்கார் கடனாகக் கொடுக்கிறார்கள். அந்தத் தொகை விவசாயிகளுக்குக் குறிப்பிட்ட காலத்தில் கிடைப்பதில்லை என்பதை நான் வருத்தத்துடன் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

விவசாயமானது மற்ற தொழில்களைப் போல் அல்ல. வித்தியாசம் இருக்கிறது. எப்படியென்றால், மற்ற தொழில்களை எந்தச் சமயத்திலும் செய்யலாம். ஆனால், விவசாயத்தைப் பொறுத்த வரையில் அதைக் காலா காலத்தில்தான் செய்யவேண்டும், அதாவது தக்க பருவத்தில் தான் பயிர் செய்ய முடியும். திடீரென்று மழை பெய்து விட்டதென்றால்,

3rd March 1958] [Sri S. Lakshmana Gounder]

உழவு செய்து பயிர் செய்தாக வேண்டும். அந்த சமயத்தில் அவனுக்கு எரு கொடுத்தால்தான் அவன் நிலத்தில் விதை போட்டு, பருவத்தில் விவசாயம் செய்ய முடியும். எருவுக்காக சர்க்கார் கொடுக்கக்கூடிய கடன்கள் விவசாயிகள் கைக்கு வந்து சேருவதற்கு ஒரு வருஷம் ஆகிறது. மிகவும் சீக்கிரமாகக் கொடுத்தார்கள் என்று வைத்துக்கொண்டாலும் குறைந்தது ஆறு மாதம் ஆகிறது. இது தான் குறை. சர்க்கார் நிறைய பணம் ஒதுக்குகிறார்கள்; ஆனால் வேண்டிய சமயத்தில் பணம் கிடைப்ப தில்லை. அதனால் விவசாயம் குறைந்து விடுகிறது. இதைக் கவனித்து நல்ல முறையில் சர்க்கார் கொடுக்கும் பண வசதி விவசாயிகள் கைக்கு, காலா காலத்தில் போய்ச் சேர வசதி செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். அதற்கு சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்கும், கீழ் இருக்கும் அதிகாரிகளுக்கும் உத்தரவு இடும்படி நான் கேட்டுக்கொள்கிறேன்.

அது மட்டுமல்ல, தக்காவிக்கடன் கொடுக்கிறோம். விவசாயம் நல்ல முறையிலே முன்னேறவேண்டுமென்ற எண்ணத்தோடு கொடுத்திருக் கிறோம். ஆனால், அப்படி ஒதுக்கப்பட்ட தொகை நல்ல முறையிலே போய்ச் சேரவில்லை என்று தான் நான் சொல்ல ஆசைப்படுகிறேன். மாடு வாங்கு வதற்கோ, நிலச் சீர்திருத்தம் பண்ணுவதற்கோ, கிணறு வெட்டுவதற்கோ, வேறு எதாவது விவசாய காரியம் செய்வதற்கோ கடன் வேண்டுமென்று விண்ணப்பம் போட்டால், விண்ணப்பத்தை பரிசீலனை செய்வதற்கே ரெவினியூ இன்ஸ்பெக்டருக்குக் குறைந்த பட்சம் இரண்டு மாதங்கள் ஆகின்றன. நிலம் எவ்வளவு விலை பெறும் என்று யோசனை செய்வதற்கு 2 மாதம் ஆகிறது. இவ்வளவு கால தாமதம் ஆகியும், கடைசியில் கடன் கிடைக்குமா கிடைக்காதா என்று சொல்ல ஆறு மாதம் ஆகிறது. 100-க்கு 99 விண்ணப்பங்களுக்கு இல்லை என்ற பதில் தான் கிடைக்கிறது. மீதி ஒருவருக்குக் கொடுக்கிறார்கள். அந்த ஒருவருக்குக் கொடுக்கும் பணத்தை கூட குறிப்பிட்ட காலத்தில் கொடுப்பதில்லை. கிணறு வெட்டுவதற்கோ, நிலச் சீர்திருத்தம் செய்வதற்கோ, மாடு வாங்குவதற்கோ கடன் வேண்டு மென்று விண்ணப்பம் போட்டால், 15 நாட்களுக்குள்ளாக விசாரணை செய்து உண்டு இல்லை என்று பதில் சொல்லிவிட வேண்டும். அப்படிச் சொல்லி விட்டால் தான் விவசாயி குறிப்பிட்ட காரியத்தைச் செய்துகொள்ள முடியும் பசியால் துடிக்கிறவனுக்கு அந்தப் பசிவேளைக்குச் சாப்பாடு போட்டால் தானே நல்லது? தர்மம் செய்கிறோம் என்று சொல்லி, பசிவேளை தாண்டி சோறு போடுவதில் என்ன பிரயோசனம்? ஆகையினால், தேவையான காலத்தில் விவசாயிகளுக்குத் தக்காவிக் கடன் கிடைக்கும்படி செய்ய வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன்.

கூட்டுறவு சங்கங்கள் மூலமாக விவசாய அபிவிருத்திக்காக சர்க்கார் பணம் கடன் கொடுக்கிறார்கள். ஆனால், அந்தக் கடனை ஒரு வருஷ வாய்தாவுக்குள் திருப்பிக் கொடுக்கவேண்டுமென்று சொல்கிறார்கள். திருப்பிக்கொடுக்கும் தவணையை ஐந்து வருஷமாக நீடித்தால் விவசாயி களுக்குச் சௌகர்யம் ஏற்படும். ஆயிரம், இரண்டாயிரம் என்று கடன் வாங்கும்போது, அதை ஒரு வருஷத்தில திருப்பிக் கொடுப்பது என்பது விவசாயிகளால் இயலாது. ஐந்து வருஷத் தவணைகளில் திருப்பிக்கொடுக் கலாம் என்றால் தான் விவசாயத்தை ஓரளவு தைரியமாகச் செய்ய முடியும். இந்த வருஷம் வாங்கிவிட்டு அடுத்த வருஷம் கொடுக்கவேண்டு மென்றால் கஷ்டப்படுகிறார்கள். சட்டப்பிரகாரம் அவர்கள் கொடுக்க வேண்டியவர்களாக இருப்பதால், சங்கத்தாரும் அதை வற்புறுத்து கிறார்கள். இதைச் சிந்தித்துப் பார்த்து, ஐந்து வருஷத் தவணையில் கடனைத் திருப்பிக் கொடுக்க வழி செய்ய, அதிகாரிகளுக்கு உத்தரவு பிறப்பிக்க வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன்.

விண்ணப்பம் செய்து 6 மாதம் கழித்தும், ஒரு வருஷம் கழித்தும்கூட கடன்கள் கொடுக்கப்படுவதில்லை. சட்டப்படி எப்படியிருந்தாலும் சரி, இப்படி நடந்துகொள்வது சரியல்ல என்று நான் சொல்லிக்கொள்ள ஆசைப் படுகிறேன். இனம் கிராமங்களில் விவசாயிகளுக்குத் தக்காவிக் கடன் வேண்டுமென்று கேட்டால், இனம்தாருடைய கையெழுத்தும் இருந்தால் தான் கடன் கொடுக்க முடியும் என்று சொல்கிறார்கள். ஆயிரக்கணக்கான

விண்ணப்பங்கள் கிராமங்களிலிருந்து போடப்பட்டும், அவைகளின் பேரில் இன்னும் கடன் கொடுக்கப்படாமல் போய் விட்டது. இதைப் பற்றி ரெவினியூ மந்திரியிடம் நான் சொன்னேன். அறிக்கை கொடுத்திருக்கிறோம் என்று சொன்னார்கள். தக்காவி மான்யூலிலே, குடிவார பாத்தியதை பெற்றிருந்தாலும், நிலத்தை விலைக்கு வாங்கியிருந்தாலும், மேல் வாரம், கிழ் வாரம் வாங்கியிருந்தாலும், அவர்களுக்குக் கடன் கொடுக்கலாம் என்று சொல்லியிருக்கிறது. அதை வைத்துக் கொண்டு தாசில்தார்கள் "ஷூட் பி கிவன் நோடிஸ்" என்று சொல்கிறார்கள். அவசியம் இனாம்தார்களுக்கு நோட்டீஸ் கொடுத்தாகவேண்டும். மறுத்து விட்டால் கொடுக்க முடியாது என்று சொல்கிறார்கள். இங்கிலீஷ் தெரியாது, விளங்கும்படியாகச் சொல்லுங்கள் என்று கேட்டதில், "இனாம்தாருக்கு நோடீஸ் கொடுத்து, இனாம்தார் ஒத்துக்கொண்டால்தான் தக்காவிக் கடன் கொடுக்க முடியும், இல்லாவிட்டால் கொடுக்க முடியாது" என்று சொன்னார். "மந்திரி அவர்களிடம் சொல்லியிருக்கிறோம். அவர் வாய் மொழியாகவோ, எழுத்து மூலமாக அறிக்கை விட்டிருப்பதாகச் சொல்லியிருக்கிறாரா" என்று நான் சொல்லியும், "கண்டிப்பாகக் கடன் கொடுக்க முடியாது" என்று சொன்னார்கள். இனாம்தார்களுக்கும் விவசாயிகளுக்கும் இடையே ஒற்றுமை இல்லை என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். அவர்களுக்குள்ளே வேறுபாடு இருக்கிறது. ஆகவே இனாம்தார்களிடமிருந்தும் விவசாயிகள் உதவி பெற முடியாது. அதனால் இத்தகைய இனாம் விவசாயிகளுக்குக் கடன் கொடுக்கும் விஷயத்தில் சர்க்கார் ஆவன செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

சிறிய நீர்ப்பாசனத் திட்டங்கள் விஷயத்தை எடுத்துக்கொண்டால், சேலம் ஜில்லாவில் வீராணம் ஏரிக்கரையை கட்டுவதற்கு எடுத்துக்கொண்டார்கள். ஆனால், இனாம்தார் அதைத் தடுத்து நிறுத்திவிட்டார். கிராமத்திலேயுள்ள ஏரி இனாம்தாருக்குச் சொந்தம் என்று ஏதோ சட்டத்திலே இருக்கிறதாம். இனாம்தாரும் வாய்க்காலைச் சுத்தம் செய்வதற்கோ, மற்ற வசதிகள் செய்வதற்கோ முயற்சி எடுத்துக்கொள்வதில்லை. கலெக்டரைப் பார்த்துச் சொன்னேன். "ஏரிக்கரையை கட்டுவதும், வாய்க்காலைச் செப்பனிடுவதும் கலெக்டரே செய்து விட்டு செலவு ஆகும் பணத்தை இனாம்தாரிடமிருந்து வசூல் செய்யலாம் என்று சட்டம் இருக்கிறது" என்று சொன்னேன். அந்த மாதிரி இனாம்தாருக்கு நோட்டீஸ் கொடுத்தும் பதில் அவர் சொல்லவில்லை. இம்மாதிரி நிலை இருந்தால், என்றைக்கு நாம் முன்னேற முடியும்? இனாம் கிராமத்தில் பல தொல்லைகள் இருக்கின்றன. அவைகளை நீக்கித்தான் ஆகவேண்டும். இனாம்தாருக்கு இனி எந்த விதமான பாத்தியமும் இல்லை. நிலத்தில் விவசாயம் செய்கிறவர்களுக்குத்தான் பாத்தியம் இருக்கவேண்டுமேயொழிய, இனாம்தார் குறிக்கிட முடியாது. வேண்டுமானால் காம்பென்சேஷன் வாங்கிக்கொண்டு போகலாம். இதில் ஏதாவது தடை இருந்தால் சர்க்கார் கவனித்து ஆவன செய்யவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகின்றேன். இதை தவிர இன்னும் விவசாயத்திற்குச் செய்யவேண்டிய காரியங்கள் இருக்கின்றன. மின்சார விஷயமாக நான் இரண்டொரு வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். விவசாயத்திற்கு அதிகமான அளவில் மின்சாரத்தை உபயோகப்படுத்த வேண்டும் என்கிற கொள்கையில் மின்சாரம் எங்கு பார்த்தாலும் விஸ்தரிக்கப்படுகிறது. முன்பெல்லாம் விவசாயத்துக்கு மின்சாரம் வேண்டும் என்று விண்ணப்பித்துக்கொண்டால் 5 வருஷங்களானாலும் கிடைப்பது இல்லை. இப்போது அப்படி இல்லை. மின்சாரம் வேண்டுமென்று சொன்னால் மூன்று மாதங்களுக்குள்ளேயே சப்ளை செய்து விடுகிறார்கள். ஆனால் சில சங்கடங்கள் இருக்கின்றன. நம் நாட்டில் மின்சார மோட்டார்களை அநேகமாக தனிப்பட்ட கம்பெனிகள்தான் வினியோகித்து வருகின்றன. தேவைக்கு ஏற்றபடி அவர்களாலும் மின்சார மோட்டார்கள், பம்பு செட்டுகள் சப்ளை செய்ய முடிவதில்லை. வெளிநாட்டிலிருந்துதான் ஸ்டார்ட்டர்கள் தருவிக்கவேண்டிய நிலைமையில் இருக்கிறோம். அவற்றை வெளிநாட்டிலிருந்து இறக்குமதி செய்வதால் செலாவணி துகை அதிகமாகி விடுகிறது என்கிற எண்ணம் உண்டாகக் கூடாது. எந்த எந்த விவசாயிகளுக்கு மின்சார மோட்டார்கள் தேவைப்படுகிறது என்பதை அரசாங்கமே

5–40 p.m.

கணக்கெடுத்து அரசாங்க இலாகா மூலமாகவே தருவித்துக் கொடுப்ப தற்கு ஏற்பாடு செய்தால் நன்றாக இருக்கும். நம் நாட்டிலேயே அதிக மான மோட்டார்கள் தயாரிப்பதற்கும் ஏற்பாடு செய்யவேண்டும். ஸ்டார்ட் டர் ஸ்விட்சு இப்போது செய்கிறார்கள் என்றாலும், போதுமான அளவில் கிடைக்காததனால் விவசாயம் முன்னேற வேண்டும் என்ற ஒரே நோக்கத் திற்காக தேவையான அளவு வெளிநாடுகளில் இருந்தும் அவற்றை இறக்குமதி செய்வதற்கு தக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக நம் நாட்டில் நெசவுத் தொழில் இருக்கிறது. தென்னாடு நெசவுத் தொழிலுக்குப் பெயர் போனது. கைத்தறி ஓரளவு நல்ல முறையில் நடந்து வருகிறது. ரிபேட் கொடுப்பது நின்று விட்டது என்ற காரணத்தினாலோ என்னவோ இப்போது ஊக்கம் சற்று குன்றி வருகிறது. மறுபடியும் ரிபேட் கொடுத்து நெசவுத் தொழில் நல்ல முறையில் வளர் வதற்கு ஏற்பாடு செய்யவேண்டும். கைத்தறி தொழிலை நம்பித்தான் அநேக ஆயிரம் மக்கள் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய நிலைமை சீரழிந்து விடாமல் இருப்பதற்கு அரசாங்கம் தக்க நடவடிக்கை களை எல்லாம் எடுத்துக்கொள்ளவேண்டும் என்பதாகக் கேட்டுக் கொள் கிறேன்.

கம்பளி நெசவுத் தொழில் பற்றி இரண்டொரு வார்த்தைகள் சொல்ல ஆசைப்படுகிறேன். கம்பளி நெசவுத் தொழில் மிகவும் புராதனமானது. பச்சையாகச் சொன்னால் ஆட்டு மயிரினால் செய்யப்படும் ஒரு தொழில். கம்பளத்திலும் இரண்டு ரகம் இருக்கிறது. ரத்தின கம்பளம், சாதாரண கம்பளம் என்று இரண்டு ரகம். ரத்தின கம்பளம் ஆராயிரம் ரூபாய் வரையில் விற்றிருக்கிறது. ஆராயிரம் ரூபாய் இருக்குமா என்று யோசிக்க லாம். நல்ல முறையில் நெய்யவேண்டும் என்றால் ஒரு நாளைக்கு 12 பேர் உட்கார்ந்து நெய்தால் ஒரு இன்சு தான் நெய்ய முடியும். மைசூர் மகாராஜாவுக்கு ஒரு ரத்தினக் கம்பளம் நெய்யும்போது நான் அத் தொழிலில் ஈடுபட்டிருக்கிறேன். சாதாரண கம்பளங்கள் என்றால் 30 ரூபாய் முதல் நூறு ரூபாய் வரையில் விற்கும். இன்றைக்கு அந்தத் தொழில் மிகவும் நாசம் அடைந்திருக்கிறது. முன்பு சாதாரணமாக சேலம் ஜில்லாவில் மூவாயிரம் தறி நடந்திருக்கிறது. பண்ணிரண்டாயிரம் பேர்கள் முதல் முப்பதாயிரம் பேர்கள் வரையில் அந்தத் தொழிலில் ஈடுபட்டிருக்கிறார்கள். இன்றைக்கு அந்தத் தொழில் நசித்துப் போய் விட்டது. இங்கிருந்து முடிகளை வெளிநாட்டிற்கு ஏற்றுமதி செய்து விடுவ தால் வெளிநாட்டிலிருப்பவர்கள் கம்பளங்களை இங்கிருந்து இறக்குமதி செய்கிறதில்லை. ஆகையால் அயல் நாட்டுக்கு முடி ஏற்றுமதி செய்வதை நிறுத்தி நம் நாட்டிலேயே கம்பளம் நெய்வதற்கு வேண்டிய வசதிகளைச் செய்து கொடுத்தால் வெளிநாட்டு செலாவணியை அதிகமாகத் தேடித் தரும் ஒரு தொழிலாக அது விளங்கும். முன்பே இது பற்றி வாணியம்பாடி யில் ஆராய்ச்சி செய்வதாகச் சொன்னார்கள். முடி ஆராய்ச்சி செய்ய மட்டும் ஏற்பாடு செய்யப் போவதாக டைரெக்டர் சொன்னார். கம்பளத்தை பற்றியும் ஆராய்ச்சி செய்ய ஏற்பாடு செய்யவேண்டும். திருச்சி முதலிய இடங்களிலும் வாணியம்பாடியிலும் தான் முடி கொள்முதல் செய்வது வழக்கம். ஆகவே வாணியம்பாடி சிறந்த இடம் இத்தகைய ஆராய்ச்சியை நடத்துவதற்கு. மீண்டும் நம் நாட்டில் கம்பளத் தொழில் சிறப்பு அடை வதற்கு சர்க்கார் எல்லா விதமான நடவடிக்கைகளையும் எடுத்துக் கொண் டால் அந்நியச் செலாவணி நமக்கு அதிகமாகக் கிடைக்கும் என்று சொல்லிக்கொண்டு எனக்குப் பேசசந்தர்ப்பம் அளித்த உதவி சபாநாயகர் அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக்கொண்டு முடித்துக்கொள் கிறேன்.

SRI A. R. MARIMUTHU : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, சென்னை அரசாங்கத்தால் சமர்ப்பிக்கப்பட்டிருக்கும் வரவு செலவுத் திட்டத்தைப் பற்றி ஒரு சில வார்த்தைகள் பேச விரும்பு கிறேன். இங்கே சமர்ப்பிக்கப்பட்டிருக்கும் பட்ஜெட்டைப் பார்த்த அளவில் யாரும் மிக்க மகிழ்ச்சி அடைவதற்கு இல்லை என்று நான் நினைக்கிறேன்.

இன்றைக்கு நாம் எல்லா வகையிலும் முன்னேற வேண்டும் என்கிற கொள்கையில் பல பல அபிவிருத்தித் திட்டங்களை வெகு வேகமாகப் போடுவதற்கு நிறைய மூலதனம் தேட வேண்டிய நிலைமையில் இருக்கிறோம். பொருளாதார ஏற்றத் தாழ்வு அதிகமாயுள்ள நாட்டில் சேமிப்பு சக்தி மிகக் குறைவாக இருக்கும் என்பதே பொருளாதார நிபுணர்களுடைய கருத்து. பொருளாதார ஏற்றத் தாழ்வைக் குறைப்பதற்கு இந்த பட்ஜெட் எவ்வித நடவடிக்கையும் எடுத்துக்கொள்ளவில்லை. நாட்டு மக்களிடத்தில் சேமிப்பு சக்தி குறைவாக இருக்கும் நிலைமையிலும் பொருளாதார ஏற்றத் தாழ்வு மிக அதிகமாக இருக்கும் நிலைமையிலும் நம்முடைய அபிவிருத்தித் திட்டங்களுக்குப் போதுமான பணம் மக்களிடம் இருந்து கிடைக்காமல் போய் விடலாம். அதனால் அநேக அபிவிருத்தித் திட்டங்கள் கைவிடப்படும் நிலைமைதான் ஏற்படும்.

முதலீட்டுச் செலவைப் பார்த்தால் மிகக் குறைவாகத் தான் முதலீடு செய்யப்பட்டிருக்கிறது. அதற்குக் காரணம் போதிய பண வசதி இல்லை என்பதாகத் தான் இருக்கும். போதிய பண வசதி எங்கிருந்து கிடைக்கும், எப்படிக் கிடைக்கும் என்கிற கருத்தோடு, எதிர்காலத்தை நோக்கி வேகமாக முன்னேறுவதற்குச் சாத்தியமான வகையில் இந்த வரவு செலவுத் திட்டம் அமையவில்லை என்பதுதான் என் கருத்து.

5–50 p.m. மேலும் இந்த பட்ஜெட்டை தமிழில் கொடுத்திருந்தால் மிகவும் நன்றாக இருந்திருக்கும் என்பது என் கருத்து. தமிழை ஆட்சிமொழியாக்கி விட்டோம் நாம். இந்த பட்ஜெட்டை தமிழில் கொடுப்பதில் கஷ்டம் ஒன்றும் இருப்பதாக நான் கருதவில்லை. ஆகவே அடுத்த வருஷத்திலாவது இந்த பட்ஜெட்டை தமிழில் கொடுக்க முயற்சிக்க வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன். தமிழ் ஆட்சி மொழியாகியும் கூட ஸ்டேட் சர்வீஸ் கமிஷன் பரீட்சைகள் ஆங்கிலத்தில் தான் நடந்து வருவதாக தெரிகிறது. ஆகவே, அதையும், சர்வீஸ் கமிஷன் பரீட்சைகளையும் ஆங்கிலத்திற்குப் பதில் தமிழில் தான் நடத்த வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அடுத்தபடி, நாட்டில் உள்ள விவசாயக் கூலிகளின் நலனைப் பற்றி ஒரு வித அக்கரையும் எடுத்துக்கொள்ளப்படவில்லை அல்லது அக்கரை காட்டப்படவில்லை என்பது மற்றொரு குறை இந்த விவசாய கூலிகள் என்பவர், கூலி வேலை செய்து பிழைக்கக்கூடியவர்களாவார்கள். அவர்களுக்கு வேண்டிய வசதிகள் செய்து கொடுக்க இந்த பட்ஜெட்டில் ஒன்றும் காணவில்லை. ஹரிஜன முன்னேற்றத்திற்காக அதிகப் பணம் ஒதுக்கப்படவில்லையா என்று கேட்கலாம். அதற்காக அதிகப் பணம் ஒதுக்கப்பட்டிருக்கிறது என்று கூறலாம். ஆனால் ஹரிஜனங்கள் அல்லாதாரும் நம் நாட்டில் கூலி வேலை செய்து பிழைக்கிறார்கள் என்பதை நாம் மறந்துவிடக் கூடாது. ஆகவேதான் சொல்கிறேன், அந்தத் தொழிலாளர்களுக்கு வேண்டி, அவர்களின் முன்னேற்றத்திற்காக, அவர்களின் நலனைப் பாதுகாப்பதற்கு வேண்டி இந்த பட்ஜெட்டில் பணம் ஒதுக்கப்படவில்லை என்பதை நான் வருத்தத்துடன் எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். அவர்கள் நிர்க்கதியாய் விடப்பட்டிருக்கிறார்கள். இன்றைக்கு ஒரு விவசாயி இருக்கிறான் என்றால் அவன் கூலி வேலை செய்து பிழைக்கும் வரையில் தான் அவன் சாப்பிட முடியும். இரண்டு நாள் அவன் சீக்காய் கிடந்து விட்டால் அவனும், அவன் மனைவி, குழந்தைகளும் பட்டினி கிடக்க வேண்டியதுதான். அதோடு அவனுக்குள்ள வைத்தியச் செலவிற்குக் கூட கையில் பணம் கிடையாது. இதர தொழிலாளிகள் தொழிற்சங்கங்கள் அமைத்துக்கொண்டு தங்களின் நிலையை உயர்த்திக்கொள்வதற்கு பாடு படும்போது இந்தத் தொழிலாளர்களின் நிலை உயர வழி இல்லை. ஆகவே அவர்களின் நிலையை உயர்த்துவதற்கு அரசாங்கம்தான் வேண்டிய நடவடிக்கைகள் எடுக்க வேண்டும். அதிலும் குறிப்பாக, அவர்களுக்கு மனைக்கட்டுகள் ஒதுக்கிக் கொடுக்க சர்க்கார் முன்வர வேண்டும். அப்படி அவர்களுக்கு மனைக்கட்டுகள் வசதி செய்து கொடுக்கக்கூட இந்த பட்ஜெட்டில் வழிவகை செய்யப்படவில்லை. அவர்களுக்கு மனைக்கட்டுகள் வழங்க வேண்டுமென்று நான் மீண்டும் ஒரு முறை அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்கிறேன். அதோடு விவசாயத் தொழிலுக்கு குறைந்த பட்ச கூலி நிர்ணயம் செய்ய வேண்டும் என்றும் கூறி

வருகிறோம். அதற்கு எந்தவிதமான நடவடிக்கையும் இதுவரையிலும் எடுத்துக் கொள்ளப்படவில்லை. ஆகவே, விவசாயத் தொழிலாளர்களுக்கும் குறைந்தபட்ச கூலி நிர்ணயம் செய்ய வேண்டுமென்று நான் அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்கிறேன். அடுத்தபடி, சர்க்கார் குதிரைப் பந்தயத்தை ஒழிக்க ஒரு மசோதா நிறைவேற்றியிருக்கிறார்கள். அந்தச் சட்டம் ஏன் இது வரை அமுலாக்கப் படவில்லை என்று தெரியவில்லை. குதிரைப் பந்தயம் மூலம் சர்க்காருக்கு வரும் வருமானம் 13 லட்சம் ரூபாய் தான் என்று கூறப்பட்டிருக்கிறது. அப்படி ஒரு 13 லட்சம் ரூபாய் சர்க்காருக்கு கிடைக்கிறது என்பதற்காக பொது மக்கள் கோடிக்கணக்கான ரூபாயை இழக்க வேண்டுமா என்று நான் சர்க்காரைக் கேட்கிறேன். குடிப்பதின் மூலம் மக்கள் கெட்டுப் போகிறார்கள் என்பதற்காக, கோடிக் கணக்கில் சர்க்காருக்கு வருவாய் வந்ததைக்கூட பொருட்படுத்தாமல் மதுவிலக்குச் சட்டத்தைக் கொண்டுவரவில்லையா ? அப்படி அதற்காக கோடிக் கணக்கில் வந்த வருவாயை இழக்க முன் வந்த சர்க்கார் ஏன் இந்த 13 லட்சம் ரூபாயை இழக்க தயங்க வேண்டும் என்று நான் கேட்கிறேன் ? அது மாத்திரமல்ல. இந்நாட்டிலே பலர் குறுக்கு வழியில் பணம் தேட முயற்சிக்கிறார்கள். குறிப்பாக மதுரையில் எம்.எம்.பி. கம்பெனி என்று ஒன்றை ஆரம்பித்து ரெஜிஸ்தர் செய்து வைத்திருக்கிறார்கள். அவர்கள் இந்நாட்டில் பல இடங்களில் கிளைகள் ஆரம்பிக்கப் போகிறார்கள் என்றும், விளம்பரம் செய்கிறார்கள் அவர்கள் கிராமங்களுக்கு வந்து சிட் பண்டு என்று சொல்லி, நாள் ஒன்றுக்கு நான்கு அணா தந்தால் ஒரு வருடத்தில் இவ்வளவு ரூபாய் ஆகும், வருடக் கடைசியில் அதைத் தந்து விடுகிறோம் என்று சொல்லி வசூல் செய்து வருகிறார்கள். ஆகவே, கிராம மக்கள் தங்களிடம் பணக் கஷ்டம் உள்ள போதிலும் வருடத்தில் இவ்வளவு சேமிப்புக் கிடைக்கிறதே என்று ஆசைப்பட்டுக் கொண்டு அந்த சிட் பண்டில் சேருகிறார்கள். இப்படித் தோன்றுகிற சில கம்பனிகள் பணத்தை வாங்கிக் கொண்டு, கடைசியில் பணம் கொடுத்தவர்களுக்கு பணம் கொடுக்காமல் அவர்கள் சென்று பார்க்கும் போது போர்டும் இருக்காது, அந்தக் கட்டிடத்தின் கதவுகள் மூடப்பட்டிருப்பதையும் பார்க்கிறார்கள். அவர்கள் பணம் அவ்வளவும் போனது போனதுதான். ஆகவே, இப்படி ஏழை மக்களை ஏமாற்றுகிறவர்கள் மீது சர்க்கார் கடுமையான நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று நான் சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறேன். அதோடு இப்படிப்பட்ட சிட் பண்டுகளை கிராமப் புறங்களில் சர்க்கார் கிராம அதிகாரிகள் மூலமாகவோ அல்லது வேறு அதிகாரிகள் மூலமாகவோ ஏற்படுத்த சர்க்கார் முன்வர வேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கிறேன். மேலும் இந்த நாட்டில் உள்ள சிறு விவசாயிகளுக்கு வேண்டிய உதவிகள் அளிக்கப்படாததால்தான் உணவு உற்பத்தி குறைவாகிறது. குறிப்பாக விவசாயிகளுக்கு போதிய கடன் வசதி கிடைப்பதில்லை. விவசாயிகளுக்காக கொடுக்கப்படும் கடன் வசதி, போன வருடம் அவர்களின் கடன் வசதிக்காக ஒதுக்கப்பட்டிருந்த பணத்தை விட இந்த ஆண்டு குறைவாக இருக்கிறது என்பதை நான் வருத்தத்தோடு தெரிவித்துக் கொள்கிறேன். இன்று நாட்டில் பல நீர்பாசனத் திட்டங்கள் போட்டு அதிகப்படியான நிலங்களை சாகுபடிக்கு கொண்டு வருகிறோம். அதற்கேற்றபடி விவசாயிகளுக்கு கடன் வசதியை அதிகப்படுத்த வேண்டியது சர்க்காரின் பொறுப்பாகும். காலத்தோடு சாகுபடி செய்யமுடியாத நிலையிலும், விவசாயம் செய்வதற்கு வேண்டிய உபகரணங்கள் இல்லாத நிலையிலும் விவசாயிகள் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கும்போது இக்கடன் வசதியைப் பொறுத்தவரையிலாவது சற்றுக் கூடுதல் கவனம் சர்க்கார் செலுத்த வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். அடுத்தபடியாக, விவசாயம் செய்ய உரம் தேவை. கடந்த வருடம் விவசாயத்திற்கு ஒன்றரை லட்சம் டன் உரம் கொடுக்கலாம் என்று கூறினார்கள். ஆனால் 75,000 டன் தான் அம்மோனியம் சல்பேட் சப்ளை செய்யப்பட்டிருக்கிறது. அதைக் குறைக்காது, அந்தளவாவது இந்த வருடமும் சப்ளை செய்ய வேண்டுமென்று நான் சர்க்காரைக் கேட்டுக் கொள்கிறேன். இரசாயன உரங்கள் வாங்குவதற்காக விவசாயிகளுக்கு கடன்கள் தந்து உதவ 60 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது. அந்தத் தொகையை அதிகமாக்க வேண்டும் என்பதுதான் என் கருத்து. அம்மோனியம்

சல்பேட் குறைவாக கிடைக்குமானால், அதற்குப் பதிலாக மீன் உரத்தை உபயோகிக்கலாம். ஆகவே, மீன் உரத்தை அதிலும் உற்பத்தி செய்ய சர்க்கார் முயற்சி செய்ய வேண்டும். மீன் பிடி தொழிலாளர்கள் உள்ள கடலோரப் பகுதிகளில் மீன் உரத்தை அதிகப்படித் தயாரிக்க, சர்க்கார் அதை இன்று ஓரளவு செய்து வருகிறார்கள் இருந்தபோதிலும், அதில் கூடுதல் முதலீடு செய்து அதிக கவனம் செலுத்தவேண்டுமென்று அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்கிறேன். அது, நம் ரசாயன உரத் தேவையை ஓரளவு குறைக்கும். அதோடு நான் சொல்ல விரும்புவது, அம்மோனியம் சல்பேட்மட்டும் கொடுத்தால் போதாது. அம்மோனியம் சல்பேட் போடக் கூடிய அளவிற்கு பாஸ்பேட் உரமும் கொடுக்கவேண்டும். வெறும் சல்பேட் உரம் மட்டும் போதாது. அதிகப் படியான தான்யம் பெற விரும்பினால் பாஸ்பேட் உரமும் வேண்டும். எவ்வளவு அம்மோனியம் சல்பேட் உரம் கொடுக்கிறோமோ அதே போல் இரண்டு மடங்கு பாஸ்பேட் உரம் கொடுத்தால்தான் இந்த அம்மோனியம் சல்பேட்டின் பலனை நாம் எதிர் பார்க்க முடியும். ஆகவே, இந்த வருடம் ஒன்றரை லட்சம் அம்மோனியம் சல்பேட்டும், மூன்று லட்சம் சூப்பர் பாஸ்பேட்டும் கொடுக்க வேண்டும். அதில் கவனம் செலுத்தவில்லை என்றால் நாம் எதிர்ப்பார்க்கும் பலனை அடையமுடியாது.

**DEPUTY SPEAKER :** இன்னும் இரண்டு நிமிடங்கள் வேண்டுமானால் பேசலாம்.

**Sri A. R. MARIMUTHU :** நிலம் விற்பதின் மூலம் அரசாங்கத்திற்குள்ள வருவாய் இரண்டு லட்சம் என்று இருக்கிறது. நிலம் இல்லாதவர்களுக்கு நிலம் கொடுப்பதிலும், அதாவது நிலம் அஸைன் செய்து கொடுப்பதிலும் கிரயம் வாங்கும் தொகைதான் இது என்று நினைக்கிறேன். இப்படிச் செய்வதால் யாரிடம் கடன் வாங்கித் தொகை கட்டுகிறார்களோ அவர்களிடம் நிலம் போய்விடுகிறது. நிலம் இல்லாதவர்களிடம் நிலம் இருப்பதில்லை. ஆகவே, இந்த நிலைமை போக வேண்டுமானால் அரசாங்கம் நிலங்களை ஜாரி செய்யும் பொழுது விவசாயிகளுக்கு அனுகூலமாக அதற்குள்ள விலையை நிர்ணயம் செய்யாமல் இனமாக ஜாரி செய்து கொடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இத்துடன் என் உரையை முடித்துக் கொள்கிறேன். வணக்கம்.

5–56 p.m. **Mr. DEPUTY SPEAKER :** The House will now adjourn and meet again at 1 p.m. tomorrow.

The House then adjourned.

## IV.—PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

### A. Statutory rules, orders and notifications.

58. *Notification issued with G.O. Ms. No.* 3980, *Industries, Labour and Co-operation, dated* 3rd *December* 1957, *amending the proviso to rule* 13 (c) *of the Madras Factories Rules*, 1950.

59. *Notification issued with G.O. No.* 4777, *Revenue, dated* 28th *December* 1957, *amending sub-rule* (4) *of rule* 6 *of the Madras General Sales Tax Rules*, 1939. [*Laid on the Table of the House under section* 19 (6) *of the Madras General Sales Tax Act*, 1939.]

60. *Notification issued with G.O. No.* 4502, *dated* 4th *December* 1957, *amending rules* 7, 8, 10 *and* 11 *of the Madras General Sales Tax (Turnover and Assessment) Rules*, 1939. [*Laid on the Table of the House under section* 19 (6) *of the Madras General Sales Tax Act*, 1939.]

3rd March 1958]

61. *Notification issued with G.O. Ms. No.* 4559, *Revenue, dated* 10*th December* 1957 *amending rules* 4 (*A*), 5 *and* 11 *and Form B*-2, *of the Madras General Sales Tax (Turnover and Assessment) Rules*, 1939. [*Laid on the Table of the House under section* 19 (6) *of the Madras General Sales Tax Act*, 1939.]

62. *Notification issued with G.O. Press No.* 4560, *Revenue, dated* 10*th December* 1957, *amending certain rules of the Madras General Sales Tax (Turnover and Assessment) Rules and the Madras General Sales Tax Rules*, 1949. [*Laid on the Table of the House under section* 19 (6) *of the Madras General Sales Tax Act*, 1939.]

63. *Annual Financial Statement for* 1958–59 *and Supplementary Financial Statement for* 1957–58 *of the Madras State Electricity Board.*

**B. Report and other papers.**

29. *A short review of the activities of the certified schools for the half year ended* 30*th June* 1957.



## APPENDIX I.

[Vide answer to starred question No. 172 asked by Sri P. G. Manickam at the meeting of the Legislative Assembly held on 3rd March 1958, page 80 supra.]

*Statement showing the action taken on the recommendations of the Indian Delegation to China on Agricultural Planning and Techniques.*

The main recommendations of the Indian Delegation to China on 'Agricultural Planning and Technique' on which action has already been taken in this State are as detailed below :—

(i) *The multiplication and distribution of improved seeds.*—With a view to provide pure and improved varieties of seeds to the ryots the Government have already sanctioned the opening of 360 State Seed Farms during the first three years of the Second Five-Year Plan period. Twenty-eight farms were functioning at the beginning of the current year and 136 seed farms are proposed to be opened during this year out of which 89 have already started functioning. The remaining 196 farms will be started during 1958–59.

(ii) *Development of local manurial resources such as farm-yard manure, nightsoil—composting and green manuring as well as utilisation of chemical fertilizers and also undertaking large scale pilot projects for deodourizing and disinfecting nightsoil.*—Two schemes one for the development of local manurial resources and the other for the manufacture of nightsoil compost in bigger panchayats have already been sanctioned. A pilot scheme for the utilisation of rural nightsoil is proposed to be implemented in 1958–59. The Director of Agriculture has been asked to examine the suggestion for deodourizing and disinfecting night soil so as to convert it into an effective and useful manure for crops. It is also proposed to encourage production of more green manure seeds in village seed farms and supply them to ryots. Chemical fertilisers supplied by the Government of India to this State are distributed to the ryots through selected distributors under the State Trading Schemes.

(iii) *Giving wider propaganda for the Japanese method of paddy cultivation.*—The Japanese method of paddy cultivation was introduced in this State in a modified form to suit local conditions from 1953 onwards. This method of cultivation was extended to other crops like millets, etc., also in this State from 1954. This State had the largest area of 4·93 lakhs of acres brought under the Japanese method of paddy cultivation during 1954–55. With the intensive propaganda done by the Agricultural Department staff, an area of 6·93 lakhs was brought under this method during 1956—57. Under the Second Five-Year Plan it is proposed to cover nearly 47·45 lakhs of acres under this method of paddy cultivation during the Plan period. To achieve this target of 47·45 lakhs of acres this Government have recently formulated, at the instance

of the Government of India, a scheme for the intensification of the propaganda of this method at an estimated cost of Rs. 1·15 lakhs and this scheme is to be implemented during 1958–59.

(iv) *Organisation of co-operative farming.*—The Government have asked Collectors of districts to select suitable villages in Community Development/National Extension Service blocks where Co-operative—Joint Farming Societies could be started on a purely voluntary basis.

(v) *Adoption of measures for the destruction of pests and diseases of crops.*—The Agricultural Department of the State has a separate staff for plant protection work under the control of the Government Mycologist and Government Entomologist with headquarters at Coimbatore in order to accord technical advice to ryots. Necessary pesticides and insecticides are being stocked in all Agricultural Depots in the State for supply to the needy ryots. Supply is effected at 50 per cent of the cost price in areas which are declared as pest affected by the District Agricultural Officers concerned. The Government have also sanctioned a scheme for supply of sprayers and dusters to ryots at 50 per cent cost.

(vi) *Close liaison should exist between Research and extension workers.*—There is already a good deal of co-ordination between the Research and Extension workers in this State. The Committee on Agricultural Education which was constituted by the Government sometime ago has gone into this question and made certain recommendations which are under the consideration of Government.

(vii) *Award of citations to ryots and encouraging popular leadership.*—The Government are holding crop competitions in respect of paddy, groundnuts, sugarcane, cashewnut, etc. The State Farmers' Forum and the District Taluk and Village Agricultural Associations wherever they are functioning are encouraging popular leadership among the agriculturists.

2. The other recommendations contained in the report of the Indian delegation to China are receiving the active consideration of Government.

## APPENDIX II.

[Vide answer to starred question No. 180 asked by Sri A. Vedarathnam, at the meeting of the Legislative Assembly held on 3rd March 1958, page 88 supra.]

(*a*) *List of* 17 *new railway lines recommended to the Government of India in* 1956—

1. Theni-Gudalur.
2. Neiveli-Vriddhachalam-Salem (broad gauge line).
3. Salem-Banglore.

[3rd March 1958

4. Chinnasalem-Chingleput.
5. Mangalore-Hassan line (n... in Madras State).
6. Tirunelveli-Cape Comorin
7. Salem-Tiruchirappalli line.
8. Manamadurai-Tuticorin.
9. Tanjore-Pattukottai.
10. Kancheepuram-Vellore.
11. Satyamangalam-Chamrajnagar.
12. Tellicherry-Mysore (not in Madras State).
13. Kollengode-Trichur (not in Madras State).
14. Manamadurai-Virudhunagar.
15. Ariyalur-Salem (via) Perambalur, Thuraiyur and Namakkal.
16. Mangalore-Bombay Coastal line (not in Madras State).
17. Karur-Dindigul (via) Guziliamparai.

List of six lines recommended for high priority—

1. Salem-Bangalore.
2. Theni-Gudalur.
3. Manamadurai-Virudhunagar (via) Aruppukkottai.
4. Chinnasalem-Chingleput.
5. Salem-Karur.
6. Tirunelveli-Cape Comorin.

(*b*) No, Sir.